# சாதி- பிராமணர்- தலித்- இடஒதுக்கீடு

**ஜெயமோகன்**

**(எழுத்தாளர் ஜெயமோகன் கட்டுரைகள் மற்றும் கடிதங்கள்)**

## பகுதி-I



## பகுதி-II

## பகுதி-III



## பகுதி-IV

# (1) சாதி பேசலாமா ?

சமீபத்தில் ஒரு இணைய விவாதக்குழுவில் ஒரு விவாதம் நிகழ்ந்தது. அதில் பேசிக்கொண்ட சில நண்பர்கள் ஒருவரின் சாதியை ஒருவர் சொல்லி கிண்டல்செய்துகொண்டார்கள். அதற்கு என் நண்பர் சிறில் அலெக்ஸ் எதிர்வினையாற்றியிருந்தார். சிறில் அவ்வாறு சாதியைப்பற்றிப் பேசுவது தவறான விஷயம் என்று சொல்லி கீழ்க்கண்ட இரு காரணங்களைக் குறிப்பிட்டிட்டிருந்தார்.

1. ஓர் பொது உரையாடல்வெளியில் அவ்வாறு சாதியைச் சொல்லிக்கொள்வது பொதுவாக சமூகத்தின் உயர்படிகளில் உள்ள சாதிகளுக்கே சாத்தியமாகிறது. வேடிக்கைக்காக இருந்தாலும்கூட. மற்றவர்கள் சொல்லிக்கொள்ள விரும்ப மாட்டார்கள். ஆகவே அவர்களுக்கு தாழ்வுணர்ச்சியோ ஒவ்வாமையோ உருவாகிறது.

2 சாதி என்பது மறைய வேண்டிய ஒன்று. ஆகவே அதைப்பற்றி பேசலாகாது. இத்தகைய பேச்சுகள் மூலம் சாதி பற்றிய நினைவுகள் உயிர்ப்பிக்கப்படுகின்றன. அடுத்த தலைமுறைக்குக் கொண்டுசெல்லப்படுகின்றன.

சிறில் அலெக்ஸ் சொல்லியிருந்த தரப்பு என்பது பரவலாக தமிழில் உள்ள மனநிலையை பிரதிபலிப்பது. நமக்கு சொல்லிக்கொடுக்கப்பட்ட ஒன்று இது. நாம் இன்னொரு கோணத்தில் யோசித்தே பார்த்திருக்க மாட்டோம். அதற்காகவேனும் நாம் மறு தரப்புகளை கணக்கில் கொண்டு யோசித்துப்பார்க்கலாம்.

சிறில் இருக்கும் மனநிலையில் இருந்துதான் ஒரு முக்கியமான கேள்வி மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்டுகளிடம் அடிக்கடி கேட்கப்படுகிறது. இ.எம்.எஸ் நம்பூதிரிப்பாடு என்றும் ஈ.கே.நாயனார் என்றும் எம்.டி.வாசுதேவன்நாயர் என்றும் கேரளத்தில் எல்லா பெயர்களிலும் சாதி உள்ளது. புத்ததேப் பட்டாச்சாரியா என்று வங்கத்திலும் சாதி பெயருடன் உள்ளது. தமிழகத்தில் இன்று எவருமே சாதியை பெயருடன் சேர்த்துக்கொள்வதில்லை. தமிழகத்தில் வந்த இந்த முற்போக்கான மாற்றம் ஏன் இடதுசாரிகள் ஆளும் கேரளத்தில் வரவில்லை?

உண்மையை முன்னிறுத்தி விவாதிப்பதாக இருந்தால் இந்தக் கேள்வியைக் கேட்டுப்பார்க்கலாம். தமிழகத்தில் கேரளத்தை விட சாதி உணர்வுகள் குறைவா? சாதிப்பெயர்கள் இல்லாத காரணத்தால் சாதி இங்கே இல்லாமலாகிவிட்டிருக்கிறதா? சாதி உணர்ச்சி கொஞ்சமேனும் மட்டுப்பட்டிருக்கிறதா? இல்லை என்பதே நேர்மையான பதிலாக இருக்கமுடியும்.

கடந்த ஐம்பது வருடங்களில் தமிழகத்தில் சாதியுணர்ச்சி மெல்லமெல்ல வலுவடைந்து இன்று உச்சத்தில் உள்ளது என்பதே உண்மை. நம் அரசியல் எப்போதுமே சாதியை அடிப்படையாகக் கொண்டு கட்டப்பட்டது. இன்று அந்த அடித்தளத்தை நாசுக்கு கருதி மறைக்க வேண்டியதில்லை என்ற நிலை வந்திருகிறது.

நாம் சாதியைப்பற்றி ஒரு இரட்டைவேடத்தை போடக் கற்றுக்கொண்டிருக்கிறோம். அந்த இரட்டைவேடத்தை அரசியல்சரிநிலையாக ஆக்கிக்கொண்டு அதை அனைத்து இடங்களிலும் ஒரு விதியாக முன்வைக்கிறோம். அதாவது நாம் தனிப்பேச்சுகளில், பழக்கங்களில் சாதி குறித்து ஒரு வகை கள்ளமௌனம் சாதிப்போம். ஆனால் எங்கும் எதிலும் சாதிதான் தீர்மானிக்கும் விசையாக இருக்கும்.

இவ்வாறு சாதியைப்பற்றிப் பேசாமல் இருப்பதென்பது ஒருவகையான பொதுமரியாதை , மென்பழக்கம் [Manners ] என நாம் நினைக்கிறோம். ஒரு சமூகம் பொதுப்பழக்கங்களில் எதை விதியாகக் கொண்டிருக்கிறதோ அதை கடைப்பிடிப்பதே நல்லது. சங்கடங்களை தவிர்க்கும். தவறான புரிதல்களும் உரசல்களும் இல்லாமலாகும். ஆகவே சாதியைப்பற்றி பொதுத்தளத்தில் பேசாமலிருப்பது சரிதான் என்றே நான் நினைக்கிறேன். நான் பொதுவாக யாரிடமும் சாதியைப்பற்றி எதுவுமே பேசுவதில்லை.

ஆனால் இது ஓர் ஒட்டுமொத்த விதியாக அமைய முடியாது. எங்கும் எப்போதும் சாதியைப்பற்றிச் சொல்லவே கூடாது என்பது ஓர் அரசியல் சரிநிலையாக முன்வைக்கப்படுவதென்பது ஒருவகை மூர்க்கம் மட்டுமே. இந்த மூர்க்கத்தின் விளைவாக நாம் நம்மை நேர்மையாக பார்ப்பதையும் புரிந்துகொள்வதையும் நம் சிக்கல்களை கடந்துசெல்வதையும் தவிர்த்துவிடுகிறோம் என்பதே உண்மை.

தமிழகம் என்பது பலநூறு சாதிகளின் பெரும்பரப்பு. நம் மக்களின் வரலாற்றையும் பண்பாட்டையும் வாழ்க்கையையும் சாதிகளைப்பற்றி அறியாமல் புரிந்துகொள்ள முடியாது. ஆனால் இந்த அரைநூற்றாண்டு அறிவியக்கத்தில் நம் சாதிகளைப்பற்றி குறிப்பிடும்படியான ஆய்வுகள் என எவையுமே வரவில்லை. ஆகவே நம் மக்கள் வரலாறு இன்னமும் எழுதபப்டவில்லை. சொல்லப்போனால் நம்மை ஆளவந்த வெள்ளையர் அக்காலத்தில் பதிவுசெய்தவற்றை நம்பியே நம் ஆட்சி நிர்வாகம் நடந்துவருகிறது

ஆகவே வரலாற்று நோக்குள்ள புறவயமான ஆய்வுக்கு இடமே இல்லாமலாகிவிட்டிருக்கிறது. ஒருசாதி அச்சாதியைப்பற்றி என்ன சொல்லிக்கொண்டிருக்கிறதோ அதையே பிறரும் சொல்லியாகவேண்டும், இல்லாவிட்டால் வன்முறையை சந்திக்க வேண்டியிருக்கும் என்ற நிலையே இன்றுள்ளது.

உதாரணமாக தமிழினி மாத இதழில் ராமச்சந்திரன் அவர்கள் வேளாளர்களைப்பற்றி எழுதி வரும் கட்டுரை. புறவயமான ஓர் ஆய்வு அது. ஆனால் அதன்பொருட்டு இதழாளருக்கு மிரட்டல்கள் வந்தன. அந்த வகையில் தமிழக பிற்படுத்தப்பட்ட ஏதாவது சாதிகளைப்பற்றி எழுதியிருந்தால் எழுத கை இருந்திருக்காது. அத்தகைய பல முன் நிகழ்வுகள் இங்கே உள்ளன.

சாதியைப்பற்றி பேசாமலிருப்பதன் விளைவு என்னவென்றால் பெரும்பாலானவர்கள் தங்கள் சாதியின் உண்மையான வரலாறோ தொடர்ச்சியோ தெரியாமல் செவிவழியாக வரும் பெருமிதக்கற்பனைகளை மட்டுமே அகத்தே கொண்டவர்களாக இருக்கிறார்கள் என்பதே. அவர்கள் அதை எங்கும் விவாதிப்பதில்லை. ஆகவே எங்கும் அது மறுபரிசீலனைக்கு ஆளாவதுமில்லை. இது ‘உயர்’சாதி முதல் ‘தாழ்ந்த’ சாதி வரை எல்லாருக்கும் பொருந்தும்.

இவ்வாறு உள்ளே ஒரு மனப்பிம்பம் வைத்துக்கொண்டு வெளியே பேசாமலிருப்பதன் சிக்கல்கள் பல. தமிழகத்தில் வாழும் எவருக்கும் இந்த இக்கட்டைப்பற்றி தெரியும். பலர் இருக்கும் அவையில் அக்குளில் முட்டையை வைத்துக்கொண்டு கைகுலுக்குவதுபொல மிக மிக ஜாக்ரதையாகவே நாம் பேசமுடியும். எந்தச் சொல் எவரைப் புண்படுத்தும் என்று சொல்ல முடியாது. அலுவலக, தொழிற்சங்கச்சூழல்களில்கூட

சட்டென்று தற்செயலான சொற்களில் இருந்து சாதிசார்ந்த முட்கள் தைக்கப்பெற்று சிலர் கொதித்தெழும் இக்கட்டான சந்தர்ப்பங்களைக் கண்டிருக்கிறேன்.

இந்நிலையில் தமிழகத்தில் பெரும்பாலானவர்கள் மென்பழக்க நாசூக்குகளை களைந்துவிட்டு 'கவன'மில்லாமல் பேசுவதென்பது சொந்த சாதியினர் மட்டும் அடங்கிய அவைகளில் மட்டுமே சாத்தியம் என்ற நிலை உருவாகிறது. விளைவாக உண்மையான நட்பென்பது ஒரே சாதிக்குள் மட்டுமே நீடிப்பதாக இருக்கிறது. இலக்கியம் போன்ற தளங்களில்கூட இதையே காணமுடிகிறது.

இந்நிலை கேரளத்தில் இல்லை என்பதை நான் பலமுறை பதிவுசெய்திருக்கிறேன். மிகநெருக்கமான நண்பர்குழுக்களில் அனைத்துச் சாதியினரும் அனைத்து மதத்தவரும் இருக்கும் நிலை அங்கே சாதாரணமாக இருக்கிறது. 'புண்படுதல்' அனேகமாக இருப்பதில்லை. [சமீபகாலமாக இத்தகைய நண்பர்குழுக்களில் இஸ்லாமியர் இடம்பெறாமலாகிவிட்டிருக்கிறார்கள் அங்கே. எண்பதுகளில் அப்படி இருக்கவில்லை. இதற்கு இஸ்லாமிய அடிப்படை வாதம் மூலம் அவர்கள் தங்களை இனம்பிரித்து விலகிக்கொள்ளும் மனநிலை உருவாகி இருப்பதே காரணம்]

இந்த சகஜநிலை எப்படி உருவாகிறது? நாம் இறந்தகாலத்தின் நீட்சியில் நின்றிருக்கிறோம். இறந்தகாலத்தின் கசப்புகளும் பேதங்களும் நம் பிறப்பாலேயே நம்மிடம் வந்து சேர்கின்றன. அவற்றை எப்படி நாம் தாண்ட முடியும்? உலகம் முழுக்க அதற்கான வழிகளாக அடையாளம் காணப்படும் இரு விஷயங்கள் உள்ளன. புறவயமான வரலாற்று நோக்கு அதில் முக்கியமானது. அபத்தமான பெருமிதங்களையும் தூய்மைநோக்குகளையும் அது உடைத்து வீசிவிடும். இரண்டாவதாக கலை, இலக்கியம் போன்றவை உருவாக்கும் மனவிரிவு. அது நம்மை மானுடமாக உணரச்செய்யும்.

இவ்விரண்டும் நம் அகத்தை அந்த இறந்தகால எச்சங்களில் இருந்து விடுவிக்கின்றன. ஆனால் அந்த மனவிடுதலையை எப்படி நாம் அன்றாட வாழ்க்கையில் எய்த முடியும்? அதற்கான இரு விஷயங்கள் உள்ளன. ஒன்று விளையாட்டு, இன்னொன்று நகைச்சுவை. ஆர்தர் கோஸ்லர் அவரது 'ஆர்ட்

ஆ·ப் கிரியேஷன்’ நூலில் இவ்விரண்டையும் பதிலிப் போர்கள் [Proxy wars ] என்றே சொல்கிறார்.

ஆம்,நேரடியான போர்கள் மூலம் சென்றகாலங்களில் தீர்க்கப்பட்ட உணர்ச்சிகளையே விளையாட்டுக்கள் இன்று தீர்க்க்கின்றன. பெரும்பாலான நகைச்சுவைகளுக்கு அடியில் சென்றகாலத்தில் நேரடியான காழ்ப்பாக வெளியான உணர்ச்சிகளே உள்ளன. ஆனால் நகைச்சுவையும் விளையாட்டும் அவற்றை உன்னதம் [sublime] நோக்கிக் கொண்டு செல்கின்றன. அவற்றை தலைகீழாக்கி விடுகின்றன. அவ்வாறாக அவற்றை தூய்மைப்படுத்துகின்றன

சமூக இயக்கம் இயல்பாகக் கண்டு பிடித்த வழிமுறை அது. நம் சமூகத்திலேயே அதைக் காணலாம். நெல்லைப்பகுதியில் நாயக்கர்களும் பட்டாணி முஸ்லீம்களும் ஒருவரை ஒருவர் கிண்டல்செய்துகொண்டே இருப்பார்கள். பலசமயம் அப்பட்டமான பாலியல் நக்கலாக அது இருக்கும். அவ்விரு சாதிகளும் முந்நூறு வருடம் ஒருவரோடொருவர் போரிட்டு கொன்று குவித்தவர்கள். ஆனால் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழும் நவீன வாழ்க்கையில் அவர்கள் பொருந்திக்கொள்ள வேண்டியுள்ளது. கிண்டல்கள் மூலம் அந்த அவநம்பிக்கைகளும் வஞ்சங்களும் வேடிக்கையாக ஆக்கப்பட்டு கவிழ்க்கப்படுகின்றன.

சாதியின் அடுக்கதிகாரத்தை கடந்துசெல்ல அவற்றை மறைப்பது ஒரு வழியல்ல. சாதியை உக்கிரமாக பேணுவதற்கான வழி அது. சாதியை வெளிப்படையாக புறவயமாக ஆராய்ந்து வரலாற்று ரீதியாக புரிந்துகொள்வதே அதை தாண்டுவதற்கான முதல் படி. அதை வேடிக்கையாகவும் கிண்டலாகவும் ஆக்கிக்கொள்வது நடைமுறைச்செயல்பாடு. சாதிசார்ந்த கடந்தகால அவநம்பிக்கைகளும் அவமரியாதைகளும் அந்த கிண்டலில் அர்த்தமிழந்து வெளிறும்

அதை கேரளத்தில் நான் அன்றாட வாழ்க்கையில் கண்டிருக்கிறேன். நான் கேரளத்தில் சென்ற புதிதில் நாலைந்து இஸ்லாமியநண்பர்களுடன் ரயிலில் செல்லும்போது ஒரு மீன்விற்கும் முஸ்லீம் பெரியவர் தராசை ஆற்றில் தூக்கி தூக்கிக் கழுவுவதை கண்டேன். என்னுடன் வந்த நாயர் நண்பன் ‘ஓ, இந்த மாப்பிளைகள் ஆற்றையும் எடைபோட்டு விற்க ஆரம்பித்துவிட்டார்களா?’ என்றான். நான் திடுக்கிட்டு முஸ்லீம் நண்பர்களை பார்த்தேன். அவர்கள் பயங்கரமாக சிரித்தார்கள். அது ஒரு திறப்பு எனக்கு.

சமீபத்தில் ஓட்டல் ஒன்றில் பேசிக்கொண்டிருக்கையில் ஷாஜி எதையோ சொல்லும்போது 'இது ரொம்ப சிம்பிள், எந்த நாயருக்கும் புரியும் விஷயம்' என்றார். கேரளத்தில் கிறித்தவர்களுக்கு நாயர்களை கிண்டல்செய்வதில் நூறு வருட அனுபவ பாத்தியதை உண்டு. ஆனால் கூட இருந்த தமிழக நண்பர் திடுக்கிட்டு என்னை பார்த்தார்.

ஆனால் இந்த நகைச்சுவையை தன் சாதி சார்ந்த போலிப்பெருமிதங்களை அல்லது சுய இழிவைத் தாண்டிய ஒருவரிடமே செய்யவேண்டும். சாதியபிமானம் அல்லது சாதித்தாழ்வுணர்வு அவரிடம் எங்கோ இருக்குமென்றால் ஏதோ ஒருபுள்ளியில் நெருப்பு பற்றிக்கொள்ளும்.என்னைபொறுத்தவரை மிகமிக நன்றாகத் தெரிந்த, நம்பகமான நகைச்சுவை உணர்ச்சிகொண்ட நவீன மனிதரிடம் மட்டுமே அந்தக் கேலியை வெளியே எடுப்பேன். அத்தகைய மிகமிகச்சிலரை மட்டுமே நான் தமிழகத்தில் கண்டிருக்கிறேன். அந்தக்கேலி எங்களுக்குள் இருக்கும் அந்த நுண்ணிய அந்தரங்க இடைவெளியை கடப்பதற்கான முயற்சி.

சாதியைப்பற்றி பேசாமல் இருப்பதனால் உருவாகும் அறியாமை காரணமாக நாம் சாதியை ஒற்றைப்படையாக புரிந்து வைத்திருக்கிறோம். அதாவது சாதி என்றால் ஒரு மாபெரும் சமூக அநீதி, 'யாரோ' உருவாக்கி நம்மிடம் திணித்தது, அதை வெளியே காட்டிக்கொள்ளக்கூடாது. ஆனால் நாம் அதை விடவும் மாட்டோம். அந்தரங்கமாக பெருமிதமும் கொள்வோம்.

சாதிக்கு இரு முகங்கள். ஒன்று அது ஓர் மரபடையாளம். இரண்டு, அது சமூக அடுக்கதிகாரத்தில் ஓர் இடம். இந்த இரு முகங்களில் இரண்டாவதை நவீன யுகத்தில் முழுமையாகவே நிராகரிக்க வேண்டும். ஏனென்றால் அது சென்றகாலத்து பொருளியல் தேவைகளுக்காக, சென்றகால பண்பாட்டுப்புழக்கம் காரணமாக உருவாகி வந்த ஒன்று. முந்தையது அப்படி அல்ல.

இந்தியாவில் எந்த ஒரு சாதியை எடுத்துப் பார்த்தாலும் அது சாதிக்குள் சாதியாக சென்றுகொண்டே இருக்கும். உபசாதிகள். அதற்குள் கூட்டங்கள். அதற்குள் குலக்குழுக்கள். அதற்குள் குடிகள். சாதி என்பது பிரிந்து பிரிந்து உருவானதல்ல, தொகுத்து தொகுத்து உருவானது. குடிகள் இணைந்து குலங்களும் கூட்டங்களும் ஆகி சாதியாகின்றன.

அந்தப் பரிணாமமே நம் சமூக வரலாறு. அதில்தான் நம்முடைய ஆழ்மனதை உருவாக்கிய அத்தனை பண்பாட்டுக்கூறுகளும் உருவாகி வந்திருக்கின்றன. அந்தப்பண்பாட்டுக்கூறுகள் இல்லையேல் நமக்கு கலைகளும் இலக்கியமும் இல்லை. நமக்கு சுய அடையாளமும் இல்லை. நாம் நவீன முதலாளித்துவம் வடித்தெடுத்த சுத்தமான நுகர்வு இயந்திரங்கள் மட்டுமே.

இந்த அடையாளத்தில் உள்ள அனைத்துமே உயர்வானவை, தேவையானவை என சொல்ல மாட்டேன். எவை தேவையானவை, எவை உயர்வானவை என்பதை நாம் நம்முடைய அறவுணர்ச்சியால் தீர்மானிக்கவேண்டும். மானுட சமத்துவத்துக்கு எதிராக உள்ளவை, மானுட மேன்மைக்கு உதவாதவை தேவையற்றவை, களையப்படவேண்டியவை. பாரம்பரியமாக அடையப்பெற்ற நுண்ணுணர்வுகள், பழக்க வழக்கங்கள், ஆழ்மனப்படிமங்கள் தேவையானவை. சாதியை நான் பார்க்கும் விதம் இதுவே

சாதி சார்ந்து புறவயமாக ஆராயும் ஒருவர் இரு விஷயங்களில் இருந்து எளிதில் விடுபட முடியும். ஒன்று சாதிமேன்மை அல்லது கீழ்மை என்பது வெறும் ஒரு பொருளியல் கட்டுமானமே. நிலத்தை அடைந்த சாதி மேல்சாதி. இழந்த சாதி கீழ்சாதி. இந்த மிக எளிமையான வாய்ப்பாடு சாதிகளின் அடுக்கதிகாரத்தை எளிதில் விளக்குகிறதென்பதை காணலாம். இந்த அடுக்குமுறைக்கு இன்று பொருளே இல்லை.

சாதித்தூய்மை என்பதற்கு வரலாற்றில் இடமே இல்லை என்பதையும் புறவயமாகப் பார்க்கும் எவரும் அறியலாம். இந்திய சாதிகள் எல்லாமே பல்வேறு பிற இனக்குழுக்களுடன் இணைவதற்கான மனநிலையையும் அதற்கான ஆசார வழிமுறைகளையும் கொண்டவை என்பதை டி.டி.கோசாம்பி போன்ற வரலாற்றாசிரியர்கள் காட்டியிருக்கிறார்கள். குறிப்பாக மேல்தட்டு சாதிகள் தொடர்ச்சியான இனக்கலப்பு மூலம் உருவாகி வந்தவை.

ஆகவே இன்றைய நவீன மனிதன் ஒருவன் சாதியை கடந்தகாலப் பெருமிதம் என்ற பொருளிலோ, தன் தூய்மை அடையாளம் என்ற பொருளிலோ கொள்ள முடியாது. அதை சென்றகாலத்தில் இருந்து தனக்கு வந்து சேர்ந்த ஓர் பண்பாட்டு குவை என்ற பொருளில் மட்டுமே கொள்ள முடியும்.

ஆனாலும் சாதி சார்ந்த இழிவு, மேன்மை இரண்டில் இருந்தும் எளிதில் விலகிவிட முடியாது. அது மனப்பழக்கமாக அடிமனத்தில் நீடிப்பது. அதை வெல்ல மிகச்சிறந்த வழி என்பது அதை கேலியாக, பகடியாக ஆக்கிக்கொள்வதே. ஒளித்து வைப்பதல்ல.

சாதி என்றும் அழியாது. நவீன முதலாளித்துவம் மூலம் சாதியின் அடுக்குமுறை காலப்போக்கில் பொருளிழக்கும்போது பண்பாட்டு நீட்சி என்ற முறையில் அது மேலும் முக்கியத்துவம் பெறும் என்றே நான் நினைக்கிறேன். உலகம் எங்கும் ஏதேனும் முறையில் மனிதர்களிடம் பிறப்பு சார்ந்து உருவாக்கப்படும் பண்பாட்டுச்சின்னங்கள் நீடிக்கத்தான் செய்கிறன. அவற்றை உணர்ச்சிகள்சார்ந்து ஆராயாமல் அறிவார்ந்து அணுகும் முறை மட்டுமே புதிதாக உருவாகி வரும். அன்று எவரும் சாதிகுறித்து வெட்கவும் மாட்டார்கள் பெருமிதம் கொள்ளவும் மாட்டார்கள்.

# (2) சாதியுடன் புழங்குதல்

அன்புள்ள ஜெயமோகன்,

நீங்கள் 'சாதி பேசலாமா?' என்றகட்டுரையில் சொல்லியிருந்த விஷயங்கள் எனக்குக் குழப்பத்தை அளித்தன. ஏன் நாம் சாதியைப்பற்றிப் பேசவேண்டும் என்று தெரியவில்லை. ஒருவருடைய சாதியைப்பற்றி நாம் ஏன் தெரிந்துகொள்ள வேண்டும்? தெரியாமல் அல்லது அதைப்பற்றி அறிந்துகொள்ளாமல் வாழ்வதுதானே சிறந்த வழிமுறையாக இருக்க முடியும்? நான் எவருடைய சாதியைப்பற்றியும் தெரிந்துகொள்வது இல்லை. அதைப்பற்றிய அக்கறையும் எனக்கு கிடையாது. யாரிடமும் நான் சாதியைச் சொல்வதும் இல்லை. நீங்கள் சாதியை தெரிந்துகொள்ளவேண்டும் என்று சொல்வதுபோல இருக்கிறது. அதனால்தான் இந்த சந்தேகம்

விஜய் மணிகண்டன்

அன்புள்ள விஜய்,

உங்கள் கடிதத்தின் மனநிலை, நோக்கம் இரண்டும் எனக்குப் புரிகிறது. சாதியைப்பற்றிய அக்கறையே இல்லாமல் வாழக்கூடிய வாழ்க்கை என்பது நல்லதுதான். அது ஓர் இலட்சிய வாழ்க்கையும்கூட. ஆனால் அது எந்த அளவுக்கு நடைமுறைச் சாத்தியம் என்றுதான் நான் பேசிக்கொண்டிருக்கிறேன். 'நான் யாருடைய சாதியையும் தெரிந்துகொள்ள முயல்வதே இல்லை' என்று அப்பாவித்தனமாக அல்லது சுய ஏமாற்றாகச் சொல்லிக்கொள்ளலாம். ஆனால் அது நம்முடைய ஊரில் சாத்தியமே அல்ல.

அப்பட்டமாக்ச் சொல்கிறேனே, குறைந்தபட்சம் நம் சூழலில் ஒருவர் தலித்தா என்று தெரிந்துகொள்ளாமல் பழகுவது என்பது சாத்தியமேயல்ல. சாத்தியமல்ல என்பதுடன் அது அபாயமும்கூட. தலித்துக்களில் தான் ஒரு தலித் என்ற சுய உணர்ச்சி இல்லாதவர்கள் அனேகமாக இல்லை. அந்த சுய உணர்ச்சி நம் மரபின் சென்றகால இழிமுறைகளில் இருந்து அவர்களிடம் ஏற்றப்பட்ட ஆழமான தாழ்வுணர்ச்சியால் ஆனது. இன்றைய பொதுச்சூழலில் சாதாரணமாகச் சொல்லப்படும் சொற்கள்கூட அவர்களின் உணர்ச்சிகளை தீவிரமாகப் புண்படுத்திவிடும். அப்படி அவர்களைப் புண்படுத்துவதென்பது அநீதியானது, நட்புகளை உடைக்கக்கூடியது, பொது

அமைப்புகளில் பல சங்கடமான நிலைமைகளை உருவாக்கக்கூடியது. ஆகவே நம்சூழலில் அத்தனை பேரும் இந்தக் கவனத்துடன் தான் இருந்துகொண்டிருக்கிறார்கள் என்பதே உண்மை.

என்னுடைய அனுபவம் ஒன்று. பலவருடங்களுக்கு முன் எனக்கு நெருக்கமான இலக்கிய நண்பர் ஒருவர் இருந்தார். பறையர் சாதியைச் சேர்ந்தவர். அது என்னுடைய பிரக்ஞையில் இருந்தது இல்லை. திடீரென என்னிடமிருந்து முற்றாக விலகிச் செல்ல ஆரம்பித்தார். நட்பை நீட்டிக்க நான் பலவேறு வழிகளில் முயன்றேன். அவரது மனக்குறை என்ன என்று விசாரித்தேன். நான் செய்த தவறு என்ன என்று அறிய முயன்றேன்.பலனில்லை. ஆழமான மனச்சோர்வுடன் நானும் விலகிக்கொண்டேன். தீவிர இலக்கியமறிந்த இரண்டே நண்பர்களில் ஒருவரை இழப்பது அந்தவயதில் பெரிய சோகம்.

நான் அந்த ஊரில் இருந்து மாற்றலாக வந்து சிலவருடங்களுக்கு முன் பழைய சங்கத்தோழர் ஒருவர் பேசும்போது நான் அந்த இலக்கிய நண்பரின் மனச்சிக்கலுக்குக் காரணத்தைச் சொன்னார். நான் அவரை வைத்துக்கொண்டே வேறு ஒருவரிடம் அவரது சாதியைச் சொல்லி இழிவாகப்பேசினேன் என்றும் அது அவரது மனதை புண்படுத்திவிட்டது என்றும் அநத இலக்கிய நண்பர் தோழரிடம் ஒரு குவளை மதுவுடன் பேசிக்கொண்டிருக்கும்போது சொல்லியிருக்கிறார்

நான் அந்த கடைசி உரையாடலை சொல்சொல்லாக நினைவுகூர்ந்தேன். ஏனென்றால் அத்தனைநாளும் அதை அத்தனை முறை மனதில் ஓட்டிக்கொண்டிருருந்தேன். என்ன பிழை நிகழ்ந்தது என்று துருவித்துருவி ஆராய்ந்துகொண்டிருந்தேன். நடந்தது இதுதான். நான் அன்றிரவு அவரிடம் பேசிக்கொண்டிருந்தபோது என் அப்பாவின் குணநலன்களைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தேன். அப்பா நிலப்பிரபுத்துவகால முரட்டுத்தனமும் நிலப்பிரபுத்துவகால அறமும் ஒருங்கே அமைந்த ஆத்மா. ஒருவன் வீட்டுக்குள் புகுந்து திருடிவிட்டான். அவனை கையும் களவுமாக பிடித்து தென்னையில் கட்டி வைத்திருந்தார்கள். 'எந்தினுடா மோஷ்டிச்சு? பற நாயிண்டே மோனே' என்று அப்பா சொன்னதாக நான் சொன்னேன். அவன் 'பசிக்காக' என்றதும் சோறுபோட்டு துரத்திவிட ஆணையிட்டார்.

நண்பரை புண்படுத்திய சொல் என்ன என்று சட்டென்று கண்டுகொண்டேன். அப்பா சொன்னதை நான் அப்படியே மலையாளத்தில் அவரது உச்சரிப்பு

மற்றும் முகபாவனையுடன் சொன்னேன். மலையாளத்தில் 'பற நாயிண்டேமோனே' என்றால் 'சொல்லுடா நாயின் மகனே' என்று அர்த்தம். பறைதல் என்றால் சொல்லுதல் .[அது தூய பழந்தமிழ்ச் சொல். பறையர்கள் எட்டாம் நூற்றாண்டு வரை தமிழ்நாட்டில் முரசு அறையக்கூடிய, விழாக்களிலும் கோயில்களிலும் மங்கலக் கௌரவம் கொண்ட உயர்சாதியினர். அதற்கு தொல்லாதாரங்கள் உள்ளன]

நான் சொன்னவற்றை விளக்கியதும் தோழர் 'அடாடா,நான் அவனிடம் சொல்கிறேன்' என்றார். அதன்பின் சிலநாட்கள் கழித்து அந்த இலக்கியநண்பர் என்னைக்கூப்பிட்டு மன்னிப்பு கோரினார். மீண்டும் உற்சாகமாக பேச முயன்றார். சில நாட்கள் பேசினோம். ஆனால் நட்புகளைப்பொறுத்தவரை ஒன்றுண்டு, ஒரு நட்பு உடைந்து கொஞ்ச காலம் ஆனால் இரு சாராருமே வாழ்க்கை போக்கில் வெகுதூரம் விலகிச் சென்றிருப்போம். மீண்டும் ஒட்ட முடியாது.

கடந்த இருபதாண்டுக்காலமாக தொழிற்சங்கம், இலக்கியம் இரு தளங்களிலும் புதியவர்களைச் சந்தித்தபடியே இருக்கிறேன். சாதியை அறிந்துகொள்ளாமல் ஒருபோதும் நெருக்கமான உரையாடல்களை நிகழ்த்த முடியாது. சாதாரணமான வணிக,அலுவலக பேச்சுகளுக்கு அதை தெரிந்துகொள்ள வேண்டியதில்லை. ஒட்டாமல் மேலோட்டமாக உரையாடி வேலைகளைச் செய்துகொள்ளலாம். எளிமையான முகமன் பேச்சுக்களைபேசி வருடக்கணக்காக தொடரலாம். ஆனால் தொழிற்சங்கம் போன்ற தனிப்பட்ட உறவு தேவையான அடித்தள வேலைகளில் அது முடியாது. எப்போது எந்தச் சொல் எங்கே தைக்கும் என்றே தெரியாது. சொற்களின் மீது எப்போதும் கவனம் தேவை, அதற்கு ஆளை தெரிந்திருக்கவேண்டும்.

தலித்துக்களைப் பொறுத்தவரை இன்று பிற அனைவருமே தங்களை இழிவாக நினைக்கிறார்கள், இழிவுபடுத்தும் மனநிலையுடன் பேசுகிறார்கள் என்ற எண்ணம் கொண்டவர்களே மிகமிகப் பெரும்பாலானவர்கள். ஆகவே அவர்கள் நாம் சொல்லும் ஒவ்வொரு சொல்லையும் உள்ளூர அலசிப்பார்த்தபடியே இருக்கிறார்கள். புண்பட்டால் அதை வெளியே காட்டிக்கொள்வதுகூட இல்லை. அதேசமயம் பிற்பட்ட சாதியினர் புண்பட்டால் உடனே குரல் உயரும், அடிதடி வரை போகக்கூடும். ஆகவே உரையாடலில் சுதந்திரம் எடுக்கும் நிலையில் வேறுசாதியினர் இல்லை

என்பதே உண்மை. என் நண்பர் வட்டம் என்பது மிகமிகப்பெரிது. மிகநெருக்கமானவர்களிடமே அந்த கவனத்தை கலைத்துக்கொண்டு சுதந்திரமாக இருக்க முடியும். ஆனால் நாலைந்து தலித் நண்பர்களே எனக்கு அந்த சுதந்திரத்தை எடுக்கும் நிலையில் இருக்கிறார்கள்.

ஏன், நம் தலித் எழுத்தாளர்கள் அரசியல் செயல்பாட்டாளர்கள்கூட அந்த எச்சரிக்கை மனநிலையில்தான் எப்போதும் இருக்கிறார்கள் என்பதை எழுத்துக்களை படித்தாலே தெரிந்துகொள்ளலாம். பிற அனைவரையுமே அவர்கள் ஐயப்படுகிறார்கள். பிறசாதியினர் என்ன சொன்னாலும் அதை இழிவுபடுத்தலாக , தலித் விரோதமாக அவர்கள் புரிந்துகொள்ள தயராக இருக்கிறார்கள்.ஆதரித்தாலும் எதிர்த்தாலும். நம் முற்போக்கு தலித் ஆதரவாளர்கள் அனைவருமே அந்த குற்றச்சாட்டுக்கு ஆளாகியிருக்கிறார்கள். சும்மா இருந்தால் அதை மௌனம் என்ற குற்றமாகச் சொல்லக்கூடும்.

ஆச்சரியம் என்னவென்றால் தமிழ்நாட்டில் ஒடுக்கப்பட்டவர்களாக உணராத சாதிகளே இல்லை என்பதுதான். தலித் சாதிகள் அப்படி உணர்வதற்கு ஒரு வரலாற்றுப்பின்புலம் உள்ளது. தமிழ்நாட்டின் மொத்த அரசியல்-சமூக-பொருளியல் ஆதிக்கத்தை கையில் வைத்திருக்கும் பிற்படுத்தப்பட்ட சாதியினரும் தங்களை ஒடுக்கப்பட்டவர்களாகவே சொல்வார்கள். அதற்காக ஒரு பிராமண வெறுப்பை உருவாக்கி வெளிப்படுத்திக்கொண்டே இருப்பார்கள்.

பிராமணர்கள் கிட்டத்தட்ட தலித்துக்கள் அளவுக்கே புண்பட்ட மனநிலையில் இருக்கிறார்கள் என்பது இன்னொரு ஆச்சரியம். மொத்த தமிழகமும் தங்களை வெறுப்பதாகவும் வேட்டையாடுவதாகவும் அவர்கள் நினைக்கிறார்கள். தாங்கள் அனைத்து ஊடகங்களிலும் வரலாறுகளிலும் அவமதிக்கப்படுவதாகவும் அதை தமிழகமே வேடிக்கைபார்ப்பதாகவும் சொல்கிறார்கள். தலித்துக்களைப்போலவே சிறு சொல்கூட பிராமணர்களை ஆழமாக புண்படுத்திவிடும்.

என் அனுபவத்தில் நான் இந்த புண்படுத்தல் சிக்கலுக்கு உள்ளானவர்களில் அனேகமாக பெரும்பான்மையினர் பிராமணர்களே. நம்ப மாட்டீர்கள் ஜைமினியின் மீமாம்ச சூத்திரங்களைப்பற்றி நான் சொன்ன ஒரு கருத்துக்காக என் நட்பையே முறித்துக் கொண்ட நெடுநாள் நண்பர் ஒருவர் உண்டு. சிலப்பதிகார மணமுறைகளைப்பற்றி பேசிக் கொண்டிருந்தபோது

நான் "சமணனாகிய கோவலன் எப்படி 'மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட' கண்ணகியை மணந்தான்?" என்று சொன்னதைக் கேட்டு பார்ப்பான் என்ற 'வசை'ச்சொல்லை நான் வேண்டுமென்றே பயன்படுத்தினேன் என்று எண்ணி புண்பட்டு விலகிய நண்பரும் உண்டு.

பிள்ளைமாரும் முதலியாரும் தங்களை அரசியலதிகாரமும் நில உரிமையும் பறிக்கப்பட்டவர்களாக நினைக்கிறார்கள். அத்தனை சிறிய சாதிகளும் 'சிறுபான்மை உளச்சிக்க'லில் இருக்கிறார்கள். முஸ்லீம்களோ இந்தியாவில் 'வாழ்வுரிமை' கோரி மாநாடுகள் நடத்துகிறார்கள். ஒருமுறை ஒரு நண்பர்வட்டத்தில் பேசும்போது நான் சொன்னேன் "பேசிவரும்போது தமிழ்நாட்டில் ஒடுக்கப்படாத ஒரே சாதிதான் இருக்கிறது போல் தோன்றுகிறது — நாயர் சாதி !" டீக்கடை வைத்து சந்தோஷமாக இருக்கிறார்கள்.

ஆகவே சாதிபேசாமல் இருப்பது என்பது யாரிடமும் நெருக்கமாகப் பேசாமலே இருப்பது மட்டுமே. எல்லாருக்கும் அது சாத்தியமில்லை. ஆனால் தமிழகத்து மனச்சிக்கல் என்னவென்றால் சாதி சர்ந்த இத்தனை உளச்சிக்கல் இருந்தாலும் பொதுவெளியில்சாதி என்பது ஒழிக்கப்பட்டுவிட்டது என்ற பாவனையை அவர்கள் விரும்புகிறார்கள் என்பதுதான். ஆகவே சாதியைப்பற்றி பேசுவது பெரும்பாலானவர்களுக்கு பிடிப்பதில்லை. அது ஒரு பெரும்பான்மை நடைமுறை என்பதனால் அதைத்தான் கடைப்பிடித்தாகவேண்டும்.

ஆனால் சாதி என்ற அடையாளத்தை தொடர்ந்து அந்தரங்கமாகவேனும் பரிசீலனைசெய்துகொண்டிருப்போம், பரிகாசம் செய்துகொண்டிருப்போம். நெருக்கமான நண்பர்களிடமாவது அந்த பாவனைகளையும் இடக்கரடக்கல்களையும் கைவிட்டு பழக முடியுமா என்று முயல்வோம். நான் சொல்வது அவ்வளவே

# (3) சாதிபற்றி மீண்டும்

அன்புக்குரிய ஜெயமோகன், நலமாக இருப்பீர்கள் என்று நம்புகிறேன், அளவற்ற உங்கள் எழுத்தின் மீதான காதலுக்கு வணக்கம், எழுத்து, கருத்துக்கள், உரையாடல்கள், பணிகள் இடையில் எப்போதும் முண்டியடிக்கும் புழுதித் தூற்றல்கள் இவற்றுக்கு இடையிலும் விடாமல் தொடர்ந்து எழுதுவது ஒரு வகையான தவம் என்று நினைக்கிறேன், அந்தத் தவம் உங்களுக்கு எப்போதும் வாய்த்திருக்கிறது, குடும்பத்தினர் அனைவருக்கும் எனது அன்பும், வணக்கங்களும்......

முன்பொருமுறை "பெரியார் – ஒரு கடிதத்தில்" உங்களோடு உரையாடி இருக்கிறேன், ஒன்றோடொன்று உரசிக் கொள்ளாத சில கருத்துக்களோடு என்னுடையதை நானும், உங்களுடையதை நீங்களும் விடாமல் பிடித்தவாறே விவாதம் செய்தோம் என்று நினைவு, இன்று அதை விடவும் சற்று மேலான முதிர்ச்சியோடு உங்களின் சாதியோடு புழங்குதலில் காணக் கிடைத்த முரண்களைப் பேச வேண்டும் என்று தோன்றியது, அதற்காகவே இந்தக் கடிதம்.

சாதி குறித்த தன்னுணர்வின் எழுச்சியே சாதியை இன்று வரையில் உயிர்ப்புடன் வைத்திருக்கும் ஒரே காரணி, சாதி குறித்த தன்னுணர்வு இச்சமூகத்தின் எல்லா இடங்களிலும் நீக்கமுற நிறைந்திருக்கிறது, சமூகத்தில் வேரூன்றி இருக்கிற ஒரு நச்சுச் சிந்தனையை அறவே இல்லாதொழிப்பது அது பற்றிய தன்னுணர்வை இல்லாமல் ஒழிப்பதில் இருந்தே துவங்குகிறது, சாதி குறித்த தன்னுணர்வை ஒழிக்க வேண்டும் என்று இலக்கு வைக்கிற நவீன உலகின் தனி மனிதன் அப்படியான உணர்வு உற்பத்தி ஆகும் மூலத்தை அழிப்பதும், அதன் மீதான நம்பிக்கைகளை முற்றிலும் புறக்கணிப்பதுமே சாதிக் கட்டுக்குள் இருந்து அவனை விடுவிக்க உதவும். அந்த ஒற்றை அச்சில் இருந்து உங்கள் கட்டுரையில் நீங்கள் விலகி இருக்கிறீர்கள். சாதி ஒரு கற்பிதம், மதம் அதன் தாய், கடவுள் இவற்றை இயக்கும் உயிர், அறிவியல் உயிர்களின் புதிரைக் கண்டறிந்து கடவுளின் தேவையைக் குறைத்துக் கொண்டு வரும் ஒரு நவீன உலகின் எழுத்தாளர் நீங்கள், சாதியைப் புழங்குதலில் குறுகி விடுகிறீர்களோ என்று தோன்றுகிறது,

இந்திய சமூகத்தில் மதமே சாதியைக் கட்டமைக்கும் ஒற்றை மூலம், மதம் குறித்த நம்பிக்கைகளை, உணர்வுகளைக் கொண்ட மனிதனால், சாதி குறித்த தன்னுணர்வை அழிப்பது என்பது இயலாத ஒன்றாக மட்டுமன்றி, நகைப்புக்குரியதாகவும் நவீன உலகில் பொருள் கொள்ளப்படலாம். நீங்கள் இன்னும் மதங்களை உயர்த்திப் பிடிப்பது உங்கள் தனிப்பட்ட விருப்பமாகவும், கட்டுக்கடங்காத தனி மனித சுதந்திரமாகவும் இருக்கலாம், ஆயினும் உங்கள் எழுத்துக்கள் பொது வெளிகளில் உலவும் அளவுக்கு வலிமை பெற்றவை என்பதை நான் அறிவேன், பொது வெளியில் எல்லா மதத்தின் மனிதர்களும் இருக்கிறார்கள் என்று நீங்கள் சொல்வீர்கள், பொது வெளியில் மதங்களற்ற மனிதர்களும் இருக்கிறார்கள் என்று நான் சொல்வேன். இந்திய சமூகத்தில் இஸ்லாமியர்கள், கிருத்துவர்கள், சமணர்கள், பௌத்தர்கள் என்று எல்லா மனிதர்களும் செலுத்தும் வரிகளில் உருவாகிற விண்கலங்களின் மாதிரிகள் கூட இந்துக் கடவுளர்களின் காலடியில் மட்டுமே ஆசிகளைப் பெற்றுப் பறந்து விடும் வல்லமை கொண்டவை. தொடர்ந்து இதைப் போல ஒரு மதச் சார்பற்ற நாடாகவே இருக்க எல்லா மதங்களின் கடவுளர்களையும் நான் உங்கள் சார்பில் வேண்டிக் கொள்கிறேன்.

இந்து மதம், இந்திய சமூகத்தில் வேறெந்த மதத்தையும் விட அதிகமான தாக்கத்தை உருவாக்கி இருக்கிறது, இந்து மதத்தின் அடிப்படை நூல்கள் சாதியக் கட்டமைப்பை வெகு சிரத்தையோடு கட்டி அமைத்திருக்கின்றன, வருணாசிரமக் கொள்கைகள், இன்றைய அனைத்து மாற்றுக் கருத்தியலுக்கும் ஒரு வலிமையான மாற்றாக இயங்கியதன் காரணமாகவே நான்கு அடுக்கிலான சாதிய அமைப்பு முறை வடிவம் பெற்றுப் பின் பல்வேறு பரிணாம வளர்ச்சியை அடைந்தது. நாகரீக மனிதன் இனக்குழு அடையாளங்களை மறப்பது எப்படி ஒரு மிக அடிப்படையான தேவையாக இருக்கிறதோ, அதைப் போலவே நேர்மையாக ஒரு மனிதன் மதத்தையும் அது குறித்த தன்னுணர்வையும் மறக்க வேண்டியது தேவைகளின் நீட்சியாகும். சாதி சமூகத்தில் உள்ளீடு செய்யப்படும் ஒரு புறக்காரணியாக இருந்து, பொது மனிதனின் உளவியலாக மாறுகிற அறிவியலை மறைமுகமாக இயக்குவது மதம். மதம் குறித்த புரிதலை வடிவமைக்கப்பட்ட கருத்தியலின் தாக்கமாக உணர முடியாதவர்களால் சாதியுடன் புழங்குதல் குறித்தும், வாழ்வது குறித்தும் சரியான பாதையில் சிந்திக்க இயலாது. அது

உங்களுக்கும் பொருந்தும் என்று நான் நம்புமிடத்தில் தான் இந்தக் கடிதத்தின் முதல் எழுத்துப் பிறந்தது.

நவீன உலகில் நிகழும் சாதி குறித்த சிந்தனைகள், விவாதங்கள், சாதி ஒழிப்பு அரசியல் ஆகிய அனைத்தும் சமநிலை என்கிற புள்ளியை நோக்கி விரையும் போது சாதியோடு புழங்கும் அவலநிலை மாறக் கூடும், ஆயினும், கீழ்நிலையாகக் கட்டமைக்கப்பட்டவர்களின் ஒரு காலத்தைய உயர்வையும், உயரிய வரம் பெற்றவர்களின் தொடர்ச்சியையும் நீங்கள் பேருந்தில் பயணம் செய்கிற, நாமம் போட்டுக் கொண்ட, குடும்பி வைத்துக் கொண்ட எந்த ஒரு மனிதரிடத்திலும் கண்டுபிடிக்க முடியும், அவர்கள் உங்கள் மொழியில் வைணவ அறிஞர்கள், எனக்கும் ஒரு குடும்பி வைத்துக் கொண்ட, நாமம் போட்டுக் கொண்ட மனிதரைத் தெரியும், அவரை நான் அண்ணன் என்றும், என்னை அவர் தம்பி என்றும் அன்போடு அழைப்போம். இருவரும் “ஹோமோ செப்பியன்ஸ்” குடும்பத்தைச் சார்ந்தவர்கள் என்கிற அளவற்ற அறிவியல் நம்பிக்கை அது.

சாதியைப் பொது வெளியில் பேசிக் கொள்ளவும், பழகிக் கொள்ளவும் சில தகுதிகள் உண்டு, அவற்றில் ஏதேனும் ஒரு தகுதியை உங்கள் மதம் உங்களுக்கு வழங்கி இருக்கலாம், இது மனித உளவியல் குறித்த மென்மையான தளம், இதில் மேலிருப்பவர் எவரும் காயம் அடைவதில்லை, மதம் வழங்கி இருக்கும் பிறவிக் காப்புரைகள் அவர்களை பாதுகாக்கும் வல்லமை பெற்றவை, கீழ் நிலைக்குத் தள்ளப்பட்டவர்களின் நிலை அப்படி இல்லை, அவர்களின் இன்றைய சமூகப் பொருளாதார வாழ்நிலை சார்ந்தது, அது, பெருநகரங்களில் கூட இன்னும் வீடுகள் உயர்குடியினருக்கு எனப் பலகை அடித்து வைத்திருக்கும் சமூகத்தில் சாதியைப் புழங்கி, அதை அன்றாட வாழ்வில் அதை ஆய்வு செய்து வீடு பேறு அடைவதெல்லாம் உங்களின் இன்னொரு புனைவு மாதிரித் தான் எனக்குத் தோன்றுகிறது, “நான் சாதி குறித்த சிந்தனை அற்றவன், பொது வெளியில் சாதியோடு நான் புழங்குவதில்லை” என்று குறைந்த பட்சம் சொல்பவர்களைத் தான் நம்பிக்கைக்குரிய நண்பர்களாக ஒரு நவீன மனித குலத்து தலித்துக்களின் மனநிலையால் ஏற்றுக் கொள்ளவும் அவனோடு வாழ்க்கையைப் பகிர்ந்து கொள்ளவும் முடிகிறது. அது, குற்ற உணர்வல்ல, திட்டமிட்டு அவன் மீது சுமத்தப்பட்ட வலி, அந்த வலியை மீண்டும் மீண்டும் உணரும் மனநிலையில் அவன் இல்லை. நீங்கள் அவன் வலியைச் சுமப்பதையே தீர்வென்று

சொல்கிறீர்கள். சாதியைப் புழங்கும் இந்தத் தீர்வுகளும், ஆய்வுகளும் பிறவிக் கவசம் கொண்டவர்களுக்கு மிக எளிமையானவை, இழப்பதற்கு ஒன்றும் அற்றவை, வலி என்னவோ பிறவிக் கவசம் இல்லாத உங்கள் இந்துக்களுக்கு மட்டும்தான். சாதியைப் புழங்குவதின் வலி என்னவென்று இந்துப் பண்பாட்டின் நிலைச் சக்திகளுக்கு ஒருபோதும் தெரியாது. அந்த நிலைச் சக்திகளால் உருவாக்கப்பட்ட கடைச் சக்திகள் தான் இப்படியான ஆய்வு நிலைச் சாதிப் புழங்குதலையும் எதிர் கொள்ள வேண்டும் என்பது தான் இதில் உள்ளடங்கி இருக்கிற சிக்கல்.

நகர்புறத்தில் உருவாக்கப்பட்டிருக்கிற அனைவருக்கும் பொதுவான வெளியில் தான் அடித்து விரட்டப்பட்டவன் பொருள் தேடுகிறான், தன்னுடைய புதிய பண்பாடுகளை அவன் இங்கு தான் தேடிக் கொண்டிருக்கிறான், அவன் தேடி வைத்திருந்த பழைய பண்பாட்டைப் பிடுங்கிக் கொண்ட மதம் அவனையே பண்பாடுகள் அற்றவன் என்றும், பண்பாடுகளில் இருந்து தொலைவில் இருப்பவன் என்றும் சொல்லி எள்ளி நகையாடியது. ஒரு தனி மனிதனால் அழிந்து போன எத்தனையோ குடும்பங்கள் உண்டு, ஒரு தனி மனிதனால் மட்டுமே உயர்ந்து செழித்து மிகப்பெரும் விருட்சமான குடும்பங்களும் உண்டு. குழுக்கள் பண்பாட்டை உருவாக்குவதில்லை, மாறாகத் தனி மனிதன் குழுக்களையும், பண்பாட்டையும் சேர்த்தே உருவாக்குகிறான். ஒவ்வொரு காலகட்டத்திலும் பண்பாடு தனி மனிதர்களின் பங்களிப்பிலேயே வளர்ந்து வந்திருக்கிறது.

இந்திய சமூகத்தின் ஊழல் வரலாறுகளைப் புரட்டிப் பார்த்தால் அவற்றில் உயர்குடி அடையாளங்களைச் சுமந்தவர்களின் பங்கு மகத்தானது என்பதை எளிமையாக அறிய முடியும், அப்படியென்றால் உயர் குடியினர் ஊழல் பண்பாட்டை வளர்த்தார்கள் என்று நீங்களும் நானும் சொல்ல முடியுமா?

பண்பாடு இனக் குழுக்கள் அல்லது சமூகக் குழுக்களால் அளவீடு செய்யப்படுவதைத் தான் காலம் காலமாக இந்து மதமும் அதன் கோட்பாடுகளும் திட்டமிட்டுக் கட்டி அமைத்தன, இந்த அளவீடுகளால் இயங்கிய உலகம் பொருளைக் களவாடுவதற்காகவும், களவாடிய பொருளால் பேரின்பப் பெருவாழ்வு வாழவும், கடவுளைக் கட்டி அமைத்து கடவுளின் கீழாகச் சாதியையும் கட்டி அமைத்தது, பண்பாட்டுக் கூறுகளை குழுக்களில் அடைத்து ஒன்று வேறொன்றைத் தொட்டு விடாமல் பாதுகாக்கும் பணியைச் செய்தது. உங்கள் வரையில் பண்பாடு என்கிற

மனித வரலாற்றின் பக்கங்களை சாதிக் கண்ணாடியின் துணை கொண்டே அது ஆய்வு செய்ய நினைக்கிறது. மதங்களைச் சுமக்கிற யாருக்கும் நிகழ்கிற காட்சிப் பிழை உங்களுக்கும் நிகழ்ந்திருக்கலாம்.

தனி மனிதனின் உளவியல் கட்டமைக்கும் கருத்தியலே சமூகத்தின் உளவியல், சமூகத்தின் உளவியல் பழக்கமே வரலாறு, வரலாற்றை எந்தச் சாதியும் திருத்தி எழுதி இருப்பதாக நான் அறியவில்லை, வரலாறு மீண்டும் மீண்டும் தனி மனிதர்களின் உறுதியான தொடர்ச்சியான சிந்தனைகளின் வாயிலாகவே திருத்தி எழுதப்படுகிறது, சாதியை மறுத்தல் என்பது திருத்தி எழுதப்பட வேண்டிய வரலாறு, சாதியோடு புழங்குவதால் அது சாத்தியப்படும் என்று நீங்கள் நம்பினால் உங்கள் நம்பிக்கை உண்மையாகட்டும்.

இந்துச் சமூக மரபின் உயர்வாக ஒன்றைக் கோடிடும் போதே உங்கள் சமூகம் குறித்த தெளிதல் புலனாகி விடுகிறது, வேறெவரையும் விடவும் நீங்கள் தலைப்பிட்ட பின்னரான கட்டுரைகளை எழுதுகிறீர்கள், உங்கள் ஆழ்மனக் கட்டுமானத்தில் இறுத்தி வைக்கப்பட்டிருக்கும் இந்து மதம் குறித்த உயரிய சிந்தனைகள் ஏதேனும் ஒரு வரியிலாவது உங்களையும் அறியாமல் வெளியில் குதித்து விடுகிறது. அப்படி நிகழாமல் உங்களால் எழுதப்படுகிற சாதி குறித்த ஒரு கட்டுரையை, அடையாளங்களை வலுவாக மறுக்கிற மருத்துவ அறிவியலின் படி வெறும் மனிதனாக மட்டுமே உணர்கிற மருத்துவர்களுக்கும் நான் கண்டிப்பாகப் பரிந்துரைப்பேன்.

“ஒரு நாகரீக மனிதன் தன்னை எந்த ஒரு இனக்குழு அடையாளங்களுடனும் பொருத்திக்கொண்டு அதன் உணர்ச்சிகளை அப்படியே பிரதிபலிக்க மாட்டான்.”

ஒரு மிகப் பெரிய உண்மையைச் சொல்ல வந்திருப்பதற்கு முதல் பத்தியிலேயே நீங்கள் இப்படிச் சொல்லி இருப்பதை உங்களுக்கு நீங்களே குத்திய உள்குத்து என்று நான் புரிந்து கொள்ளலாமா???

“.................................... இந்துப்பண்பாட்டின் நிலைச்சக்திகள். இந்துப் பண்பாடு அதன் அமைப்பையும் கட்டுக்கோப்பையும் தக்கவைத்துக்கொள்வதற்காக பல்லாயிரம் வருடங்களாக அவர்கள் ரத்தமும் கண்ணீரும் சிந்தியிருக்கிறார்கள். அவர்களுக்கு இந்து என உணரும் எவரும் கடமைப்பட்டிருக்கிறார்.”

இறுதியாக இரண்டு கேள்விகள் மட்டுமே என்னிடம் மிஞ்சி இருக்கிறது, இதற்கான நேர்மையான பதிலில் தான் நான் உங்களைப் புரிந்து கொள்வது உள்ளடங்கி இருக்கிறது,

கேள்வி ஒன்று:
சாதியை ஒழிக்க வேண்டும் என்று உண்மையிலேயே நீங்கள் விரும்புகிறீர்களா?

கேள்வி இரண்டு:
மதம் குறித்த “கட்டமைக்கப்பட்ட உங்கள் மனநிலை” அதை உண்மையிலேயே அனுமதிக்குமா?

கை.அறிவழகன்

அன்புள்ள அறிவழகன்,

பெங்களூரில் உங்களை நேரில்சந்தித்து விவாதித்தமையால் அதற்கு முன்னர் வந்த உங்கள் கடிதத்துக்கு விரிவான பதில் போட முனையவில்லை. ஆனாலும் அக்கடிதம் பதிவாகவேண்டுமென இப்போது தோன்றியமையால் இக்கடிதம்.

நீங்கள் சொல்லும் கருத்துக்கள் ஈவேரா அவர்கள் முன்வைத்த நோக்கைச் சார்ந்தவை. அவற்றை பெரியாரியம் என்ற நாம் சொல்லலாம். சொல்லபப்ட்ட சில வருடங்களுக்குள்ளாகவே அவரது மாணவர்களால் நிராகரிக்கப்பட்ட தரப்பு அது. அவர்கள் ஒன்றே குலம் ஒருவனே தேவன் என திருமூலருக்குச் சென்றுவிட்டார்கள். ஆனால் தமிழ் சிந்தனையில் அது இன்றளவும் ஆழமான பாதிப்பை ஏற்படுத்தி ஒரு சிந்தனைப்பள்ளியாகவே உள்ளது

அதன் முடிவுகளை நீங்கள் முழுமையாக நம்பி அதில் இருந்தே பேச ஆரம்பிக்கிறீர்கள். பெரியாரியக் கருத்துக்களை இவ்வாறு சுருக்கலாம் – உங்கள் கடிதத்தில் இருந்து:

1. சாதி என்பது ஒரு சமூகத் தீங்கு. அதன் ஒரே நோக்கம் அடிமைப்படுத்தல் சுரண்டல்.

2 சாதியை உருவாக்கியவர்கள் சமூக அதிகாரத்தை கையில் வைத்திருந்தவர்கள். உயர்சாதியினராக அவர்கள் தங்களைச் சொல்லிக்கொண்டார்கள்

3 சமூகம் நால்வருணமாக அவர்களால் பிரிக்கப்பட்டது. அதன் பின்னர் அது மேலும் பல்லாயிரம் சாதிகளாக பிரிந்தது. இந்த சாதியமைப்பு இந்தியாவுக்கு மட்டுமே உரியது

4 ஆகவே அது இந்துமதத்தின் சிருஷ்டி. அதை நியாயப்படுத்தவே இந்து நூல்கள் அனைத்தும் எழுதப்பட்டுள்ளன.

5 அதன் அதிகாரம் பிராமணர்களிடம் இருந்தது.

6 சாதியை நிலைநாட்டவே மதம் உருவாக்கப்பட்டது. மதத்தின் மையம் கடவுள். நம்பிக்கை ஆன்மீகம். ஆகவே மதம் கடவுள் ஆன்மீகம் ஆகிய மூன்றும்தான் சாதிக்கு ஆதாரமாக அமைகின்றன.அவை மோசடியானவை.

7. இந்துமதத்தில் சாதியை வலியுறுத்தும் கருத்தியல் மட்டுமே உள்ளது

8 ஒடுக்கப்பட்ட மக்கள் தங்களை ஒடுக்கும் சாதி என்ற அமைப்பை துறக்கவேண்டும். அதற்கு சாதி என்ற தன்னிலையை அவர்கள் இழந்தாகவேண்டும். அதுவே அவர்களுக்கு விடுதலை.

9 அவ்வாறு துறப்பதற்கு அவர்கள் முதலில் மதம் கடவுள் ஆன்மீகம் மூன்றையும் துறந்தாகவேண்டும்.

இந்த அடிப்படைகளில் இருந்து ஆரம்பித்து நீங்கள் ஒரு முரண்பாட்டைக் கண்டுபிடிக்கிறீர்கள். அதாவது இனக்குழு அடையாளங்களுடன் பொருத்திக்கொள்வது நாகரீக மனிதனின் இயல்பாக இருக்காது என்று நான் சொல்கிறேன். அதே சமயம் பிராமணர்கள் இந்துப்பண்பாட்டின் நிலைச்சக்திகள் என்றும் சொல்கிறேன்

ஆகவே ஒரு ஐயம் எழுகிறது உங்களுக்குள். நான் இந்துப்பண்பாட்டை தூக்கிப்பிடிக்கிறேன். ஆகவே அதனுடன் 'இணைபிரியாது' கலந்துள்ள சாதியத்தை என்னால் விடமுடியாது

அவற்றில் இருந்தே நீங்கள் அந்த கடைசி வினாக்களை கேட்கிறீர்கள் இல்லையா?

நான் என் பதில்களைச் சொல்லி விடுகிறேன். ஒன்றை நீங்கள் ஒத்துக்கொள்வீர்கள் நான் எழுத்து ஒன்று வாழ்க்கையும் நம்பிக்கையும் பிறிதொன்று என இருப்பவனல்ல. நான் என்ன நம்புகிறேனோ அதைச் சொல்வேன். அது பிற்போக்கு என சொல்லப்பட்டாலும் எனக்கு ஒரு கவலை இல்லை. எந்த முத்திரையையும் பயமும் இல்லை.

ஆகவே உங்கள் முதல் கேள்விக்குப் பதில் சாதியை ஒழிக்கவேண்டும் என்று நான் உண்மையிலேயே விரும்புகிறேன். அது சென்ற நிலப்பிரபுத்துவகாலத்து பண்பாட்டு அடையாளம். அதற்கு இன்று சமூகப் பண்பாட்டு பங்களிப்பேதும் இல்லை. ஆகவே அது இன்று ஒரு சுமை. ஆகவே அது அழிய வேண்டும். என்னைப்பொறுத்தவரை அந்த முடிவுக்கு நான் வந்தபின் என் தனிவாழ்க்கையிலும் உறவுகளிலும் என் குழந்தைகள் விஷயத்திலும் எங்கும் சாதிக்கு இடமில்லை. இன்றுவரை அப்படித்தான். சாதி என்றாலே சீறிப்பாயும் பெரும்பாலான பகுத்தறிவு முற்போக்கினர் அப்படி அல்ல என நீங்கள் அறிவீர்கள் அல்லவா?

இரண்டு மதம் சார்ந்து கட்டமைக்கப்பட்ட மனநிலை ஏதும் என்னிடம் இல்லை. ஆகவேதான் சம்பிரதாய மதவாதிகளுக்கு உவப்பற்றவனாக எப்போதும் இருந்து வந்திருக்கிறேன். நான் மதத்தின் அமைப்பை நிராகரிப்பவன், அதன் தத்துவ ஆன்மீக சாராம்சத்தை மட்டும் உள்வாங்கிக்கொள்ள முயல்பவன். இந்த வேறுபாட்டை எப்போதுமே நான் தெளிவுபடுத்திக்கொண்டிருக்கிறேன். மதம் என்பது பதில்களால் ஆனது தத்துவமும் ஆன்மீகமும் கேள்விகளால் ஆனவை என்பதே என் அறிதலாகும்

உங்களுக்கும் எனக்குமான முக்கியமான கருத்துவேறுபாடுகள் எல்லாமே நீங்கள் கொண்டுள்ள எளிமையான கறுப்புவெள்ளை சித்திரத்தால் உருவாகக்கூடியவை. அவை ஈவேரா அவர்களால் எந்தவகையான வரலாற்று நோக்கும் தத்துவ நோக்கும் இல்லாமல் உருவாக்கப்பட்டவை. அவை சமூகம் மற்றும் கருத்தியலின் பிரம்மாண்டமான இயக்கத்தை மிக எளிமைப்படுத்திவிடுவதான் தவறான முன்முடிவுகளும் கசப்புகளும் உருவாகி விடுகின்றன என்பதே என் எண்ணம். இதை பல கட்டுரைகளில் முன்னரே சொல்லியிருக்கிறேன்.

என்னுடைய நோக்கு சமூகவியல் ஆய்வுகளுக்கு எம்.என்.ராய், அம்பேத்கர்,டி.டி.கோஸாம்பி,கே.தாமோதரன், இ.எம்.எஸ் போன்றவர்களின் ஆய்வுமுறையைச் சார்ந்தது. நான் எப்போதுமே இவர்களையே மேற்கோள் காட்டுகிறேன். மார்க்ஸியத்தின் தத்துவ கருவியான முரணியக்க பொருள்முதல்வாதமே எனக்கும் கருவி.

ஆனால் தத்துவ- ஆன்மீக தளத்தில் மார்க்ஸியத்தின் முன்முடிவுகளை நான் நிராகரிக்கிறேன். அதாவது தத்துவத்தையும் கலைகளையும் ஆன்மீகத்தையும் வெறும் பொருளியல் இயக்கத்தைக் கொண்டு

விளக்கிவிட முடியாதென்பதே என் எண்ணமாகும். அவை பொருளியல்கட்டுமானத்தின் மீதுள்ள மேற்கட்டுமானங்கள் மட்டுமே என்ற மார்க்ஸிய கொள்கையை என்னால் ஏற்க முடியவில்லை. நான் அவற்றுக்குள் அவற்றுக்கான தர்க்கமுறை உண்டு என நினைக்கிறேன். அவற்றை அந்த தர்க்க முறையில் முடிந்தவரை புறவயமாக ஆராய முயல்கிறேன். இந்த நோக்கைப் பகிர்ந்துகொள்ளும் நவீன மார்க்ஸியர்களும் உண்டு. கீதையையே நான் முரணியக்க விதிகளின்படி ஆராய்வதை நீங்கள் காணலாம்.

ஆகவே என்னுடைய ஆய்வுமுறை என்பது கறுப்புவெள்ளையாக ஆக்குவது அல்ல. மாறுபட்ட சமூக அதிகாரங்களும் கருத்துக்களும் ஒன்றுடன் ஒன்று முரண்பட்டு அந்த விசையால்தான் இயங்கிக்கொண்டிருக்கின்றன என்று நான் நினைக்கிறேன். எல்லா சமூக அமைப்புகளுக்கும் கருத்துக்களுக்கும் அவற்றுக்கான ஒரு பங்களிப்பு உள்ளது. எதுவுமே முழுமையாக கரியது எதிர்மறையானது அல்ல. ஒன்றை அதைவிட மேலான இன்னொன்று முரண்பட்டு வெல்கிறது. விளைவாக புதியது உருவாகிறது. இது முடிவிலாது நிகழ்கிறது.

நம்சூழலில் இந்த விஷயங்களை விவாதிப்பதற்கான இந்த மாபெரும் புரிதல்தடை நம் மார்க்ஸியர்களால் உருவானது. மார்க்ஸியத்தை முரணியக்க பொருள்முதல்வாதமாக தத்துவார்த்த நோக்கில் அவர்கள் இங்கே அறிமுகம் செய்யவில்லை. அதைக்கொண்டு சமூக ஆய்வுகளை பெருமளவில் செய்யவும் இல்லை. ஓரளவு விதிவிலக்குகள் கைலாசபதி சிவத்தம்பி ஆகிய இருவருமே. முழுக்க முழுக்க அன்றாட அரசியல் சார்ந்த நோக்கே இங்கே பெரிதாக இருந்தது.

ஆகவே இங்கே மார்க்ஸியம் அளித்த மாபெரும் ஆய்வுக்கருவியான முரணியக்க நோக்கு பயன்பாட்டுக்கு வரவில்லை. ஈவேரா அவர்களின் எளீய கறுப்புவெள்ளைவாதம் பரவலாகியது. அது மிக எளிமையானதென்பதனாலேயெ அதற்கு ஆதரவு அதிகம். அதை எதிர்ப்பவர்களை எளிதில் எதிரிகளாக முத்திரை குத்த அதில் இடமிருக்கிறது. ஆகவே அது எதனுடனும் விவாதிப்பதில்லை. மார்க்ஸியக் கல்வி இல்லாத நிலையில் இங்குள்ள மார்க்ஸியர்கள்கூட மெல்லமெல்ல பெரியாரியர்களின் மொழியில் பேச ஆரம்பித்துவிட்டார்கள்.

என்னுடைய ஆய்வு நோக்கில் பெரியாரியக் கருத்துக்களாக நீங்கள் ஏற்றுக்கொண்டிருப்பவை எவையுமே ஏற்றுக்கொள்ளக்கூடியன அல்ல. அவை குத்துமதிப்பான சமூக நோக்குடன் மேலோட்டமான கோபதாபங்களுடன் முன்வைக்கப்பட்டவை. ஆகவே பயனற்றவை. நான் ஏற்கனவே சொன்னதுபோல, ‘அறுவைசிகிழ்ச்சைக்கு கடப்பாரையை’ பயன்படுத்தியவை

**1.** சாதி என்பது ஒரு சமூக தீங்கு மட்டுமே என்ற கோணம் சமகாலத்தைய மனப்பதிவை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு உருவானது. இந்தியாவின் மார்க்ஸிய வரலாற்று ஆய்வாளர்கள் எவரும் அந்த நிலைப்பாடு எடுத்ததில்லை. அது சென்ற நிலப்பிரபுத்துவ காலத்தைய ஒரு சமூக ஏற்பாடு. அதற்கு அக்காலத்தில் சமூக பங்களிப்பு இருந்தது. எந்த ஒரு சமூக அமைப்பும் அடிபப்டையில் உபரி வளங்களை சுரண்டி மைய அமைப்பை உருவாக்குவதற்காகவே உருவானது. சாதியும் அப்படித்தான். உற்பத்தி – வினியோகம் – உபரித்தொகுப்பு ஆகியவற்றில் பங்களிப்பு இல்லாத ஓர் அமைப்பு நீடிக்க முடியாது

**2** சாதி உருவாக்கப்பட்டது அல்ல. எந்த சமூக அமைப்பும் உருவாக்கப்பட முடிவது அல்ல. அவை சமூகத்தின் பொருளியல் இயக்கத்தின் போக்கில் உருவாகின்றவை. அவற்றை அதிகாரம் திருத்தி அமைக்கிறது. தொகுக்கிறது. அதன் மூலம் அதிகாரத்தை அடைபவர்கள் மேலே அமர்கிறார்கள். நிலப்பிரபுத்துவ காலகட்டத்தில் நிலமே அதிகாரத்தையும் அதன் மூலம் சமூகப்படிநிலைகளையும் தீர்மானித்தது

**3** இந்தியச் சமூகம் பல்லாயிரம் இனக்குழுக்கள் மற்றும் பழங்குடி இனங்களின் தொகுப்பாக பல ஆயிரம் வருடங்களில் மெல்லமெல்ல திரண்டு வந்த ஒன்று. அந்த பழங்குடி அடையாளங்களே சாதிகளாக தொகுக்கப்பட்டன. வர்ணங்கள் சாதிகளாக ஆகவில்லை. சாதிகள்தான் பின்னர் வர்ணங்களாக தொகுக்கப்பட்டன. இத்தகைய பிறப்பு அடிப்படையிலான இனக்குழுப்பிரிவினைகள் இல்லாத மானுட சமூகமே இல்லை. அது நிலப்பிரபுத்துவ காலகட்டத்தின் அடிப்படையான ஒரு அமைப்பு

**4** ஆகவே சாதி முறை இந்து மதத்தின் சிருஷ்டி அல்ல. பழங்குடிகள் திரண்டு இந்திய சமூகம் உருவானபோது கூடவே உருவாகி வந்ததே இந்து மதம். அதன் பன்மைத்தன்மை அவ்வாறுதான் உருவானது. அதற்கு மையமோ

கட்டமைப்ப்போ அதிகாரக்கட்டுப்பாடோ என்றுமே இருந்ததில்லை. அதில் பழங்குடிச்சமூகத்தின் எல்லா நல்ல விஷயங்களும் கெட்ட விஷயங்களும் உள்ளன. அதில் உயர்பண்பாடும் உண்டு அடித்தளப்பண்பாடும் உண்டு.

**5** இந்துமதத்தின் அதிகாரம் பிராமணர்களிடம் என்பது சரித்திர உண்மை அல்ல. நிலமும் அரசும் யாரிடம் இருந்தது என்று பார்த்தாலே உண்மை தெரியும். பலநூற்றாண்டுக்காலம் அது ஷத்ரியர்களின் கைகளில் இருந்தது. சிலநூற்றாண்டுக்காலம் வணிகர்களின் கைகளில் இருந்தது. பக்தி இயக்கத்தின் காலகட்டத்தில் சூத்திரர் கைக்கு வந்தது. பிராமணர்களை இந்த சக்திகள் பயன்படுத்திக்கொண்டன. பிராமணர்கள் இவர்களையும் பயன்படுத்திக்கொண்டார்கள்.

**6** மதம் என்பது சாதியை உருவாக்க உருவாக்கப்பட்டது அல்ல. அல்லது வேறு எந்த சமூக அதிகாரத்தை உருவாக்கவும் அது உருவாக்கப்படவில்லை. அது உருவாக்கபடவே இல்லை, உருவானது. அதற்கான தேவை இருந்தது. மதம் உருவாவதற்கு மிகச்சிக்கலான பல சமூக- பண்பாட்டு காரணங்கள் உள்ளன. பிறப்பு, இறப்பு, வாழ்க்கையின் பொருள் ஆகியவை சார்ந்த தனிமனிதனின் அந்தரங்கமான ஆன்மீகக் கேள்விகளுக்கு பதில் அளித்தலும் அற அடிப்படைகளை நிறுவுதலும், பண்பாட்டுக்கூறுகளை தொகுத்தலும் என மதத்துக்கு பல பணிகள் உண்டு.

மதம் சமூக அதிகாரத்தையும் அரச அதிகாரத்தையும் நிறுவும் கருவியாகவும் பயன்படும். அந்த அம்சம் இல்லா மதமே இல்லை. சமணமும் பௌத்தமும்கூட. ஆகவே மதத்தில் நமது சென்றகாலம் முழுக்க உள்ளது. சென்றகாலத்தின் பண்பாட்டுசெல்வமும் சென்ற கால அதிகாரக்கருத்துக்களும் அதில் உள்ளன. அது சென்றகாலகட்டத்தின் அறத்தை முன்வைக்கும் அமைபபகவும் இருந்hதது. ஆகவே மார்க்ஸ் 'மதம் இதயமற்ற உலகின் இதயம்' என்றார். மதத்தை பகுப்பாய்வுசெய்து அதன் சிறந்த தத்துவ பண்பாட்டுக்கூறுகளை ஏற்றுக்கொள்வதும் அதன் எதிர்மறை அம்சங்களை களைவதுமே இன்றைய தேவை. அதுவே உண்மையான பகுத்தறிவு.

**7** இந்துமதத்தில் சாதியக் கருத்துக்கள் உள்ளன. ஆனால் கூடவே உயர்தத்துவம் உள்ளது. நுண்கலைகள் உள்ளன. பேரிலக்கியங்கள் உள்ளன. நாத்திக சிந்தனைகளும் இறையிலா சிந்தனைகளும் உள்ளன. பிராமண சிந்தனைகளுக்கு நிகராகவே பிராமண எதிர்ப்புச் சிந்தனைகளும் அதில்

உள்ளன. நம் மொழியும் சிந்தனையும் அதற்குக் கடன்பட்டுள்ளது. எல்லா மதங்களும் அப்படியே. கிரேக்க மதம் அடிமைமுறையை நியாயப்படுத்தியது. ஆனால் அதுதான் மேலைச்சிந்தனைக்கே அடித்தளம்.

கடந்தகாலத்தை ஒட்டுமொத்தமாக நிராகரிப்பது என்பது எந்த அறிவார்ந்த சமூகத்திலும் இல்லாத விஷயம். குளிப்பாட்டிய நீரோடு பிள்ளயையும் தூக்கி வீச என்னால் இயலாது. ஈவெரா மதத்தை மட்டுமல்ல தமிழ் மொழியையே ஒட்டுமொத்தமாக நிராகரிக்கத்தான் சொன்னார். அதை அவரது வாரிசுகள் என்ன காரணத்தால் ஏற்றுக்கொள்ளவில்லையோ அதே நியாயம்தான் எனக்கு இந்து மத விஷயத்திலும்.

**8** ஒடுக்கப்பட்ட இந்திய சாதிகள் சாதி அடையாளத்தை துறப்பதில்லை. அவர்களே தங்கள் சாதி அடையாளத்தை மேலும் வலியுறுத்துகிறார்கள். அது ஏன் என்ற நோக்கே இன்று தேவை. காரணம் சாதியிலதான் அவர்களின் அதுவரையிலான பண்பாட்டு வேர்கள் உள்ளன. அவர்களின் மூதாதையரின் சிந்தனைகள் உள்ளன. அது அவ்ர்கள்மேல் திணிக்கப்பட்ட அடையாளம் அல்ல. அதன் படிநிலைதான் அவர்கள்மேல் திணிக்கப்பட்டது. அது அவர்களிiன் தொன்மையான பழங்குடி வேர்களின் வளaர்ச்சியடைந்த வடிவம்

ஆகவே சாதியை ஒட்டுமொத்தமாக துறக்கவேண்டும் என்ற அறைகூவல் பொருளற்றது. ஏன் ஒட்டுமொத்தமாகத் துறக்க முடியவில்லை , சாதி என்ற பல நூற்றாண்டுக்கால துறக்கவேண்டியவை எவை என்ற ஆராய்ச்சியே இன்று தேவை. இல்லையேல் சாதி எதிர்ப்புக் கூக்குரல் மட்டும் எங்கும் ஒலிக்கும், சாதி அபப்டியே இருக்கும்.

**9** கடவுள் ஆன்மீகம் மதம் ஆகியவை சமூகச்சூழல்களினால் ஏற்கப்பட்டவை அல்ல. சமூகச்சூழல்களினால் துறக்கப்படக்கூடியவையும் அல்ல. அவற்றின் பங்களிப்பு முற்றிலும் வேறு தளத்தில் உள்ளது. தனிமனிதனுக்கு தன் வாழ்க்கையின் சாராம்சம் பற்றிய கேள்விகள் இருக்கும் வரை அவையும் இருக்கும். அவை இருப்பதோ அழிவதோ தத்துவத்தளத்தின் நிகழும் வள்ர்ச்சி மாற்றங்களினால் மட்டுமே நிகழும்.

இதுவே என் கருத்து. பொதுவாக நான் பெரியாரியர்களிடம் விவாதிப்பதை தவிர்க்கிறேன். காரணம் அது ஒரு புறவயமான அறிவார்ந்த தன்மை கொண்ட அறிவியக்கம் அல்ல. அது தனிமனித மனம் சார்ந்த வெறுப்பில்

கட்டமைக்கப்பட்டது. மேலும் நடைமுறையில் சாதிவெறியர்களான பிற்படுத்தப்பட்டோர் சமூக அதிகாரத்தைக் கைப்பற்றும் பொருட்டு தங்களை ஒளித்துக்கொண்டு கையாளும் கருவியும்கூட

இனி உங்கள் ஐயம். இனக்குழு சார்ந்த அடையாளங்கள் நிலப்பிரபுத்துவகாலம் சார்ந்தவை. அவற்றை இன்றைய மனிதன் சுமந்தால் சிந்தனையில் முன்னகர்வே இருக்காது. இது என்கருத்து. அதற்கும் பிராமணர்கள் இந்து மதத்தின் நிலைச்சக்திகள் என்பதற்கும் என்ன முரண்? நிலைச்சக்தி [Static force] என்றால் மார்க்ஸிய நோக்கில் என்ன என்று நீங்கள் புரிந்துகொள்ளவில்லை. எந்த ஒரு அமைப்பிலும் அதன் அமைப்பை நிலைநிறுத்தும் ஆற்றல் ஒன்று உண்டு. அது மாற்றங்களுக்கு எதிரானது. செயல் சக்தி அதை எதிர்த்தே முன்னகர முடியும். அவ்வாறே வளர்ச்சி சாத்தியம்

அதனால் நிலைச்சக்தியை தேவையற்றது என ஒரு மார்க்ஸிய ஆய்வாளன் சொல்லமாட்டான். அது இல்லையேல் செயல்சக்தியும் செயல்பட முடியாது. முரணியக்கத்தின் மறுமுனை அது. இது அந்த அடித்தளம் மீதே இயங்க முடியும். ஒரு அமைப்பின் வடிவத்தை நிலைநிறுத்துவதும் அதை அழியாமல் காப்பதும் நிலைச்சக்தியே. பிராமண சக்திக்கு எதிராகவே வேதாந்தம் அத்வைதம் முதல் பின்னாளைய பக்தி இயக்கங்கள் வரை இந்து மதத்தில் உதித்தன. அவற்றின் முரணியக்கமே அதை முன்னால் கொண்டுசென்றது. ஆனா அதுதான் இஸ்லாமிய தாக்குதல்களில் இருந்து இந்து மரபை காத்து நின்றது -சந்தேகமிருந்தால் அம்பேத்காரின் நூல்களை வாசித்துப்பாருங்கள்.

இந்து மரபில் இணைபிரியாது சாதியம் உள்ளது என நான் ஏற்கவில்லை. இந்துமரபு முழுக்க பிற்போக்கானது என நான் எண்ணவில்லை -ஏனென்றால் நான் அதை ஆராய்ந்து அறிவேன். அதன் உயர்தத்துவமும் கலைச்சிகரங்களும் மானுடத்துக்கு பெரும் சொத்து என்றே நினைக்கிறேன். எந்த கடந்தகால கருத்தமைவும்போலவே அதிலும் மானுடவிரோத அம்சங்கள் இருக்கின்றன. சாதியம் உள்ளிட்ட பல அம்சங்கள் கலந்துள்ளன. அவற்றை நீக்கி அதை அறிவதே இன்றைய சவால்

சாதியத்தை விலக்கி நான் இந்து மரபில் இருந்து அத்வைதத்தை பெறுகிறேன். எப்படி என்றால் ஸ்டாலினையும் மாவோவையும் போல்பாட்டையும் விலக்கிவிட்டு எப்படி மார்க்ஸியத்தில் இருந்து முரணியக்கப் பொருள்முதல்வாதத்தை பார்க்கிறேனோ அப்படி.

# (4) சாதியும் கதைகளும்

ஜெ

நலமா?

மயில்கழுத்து கதையைப் படித்துக் கொண்டிருந்தேன்.
எனக்கு ஒரு நீண்ட நாள் ஆசை. கனவு என்று சொல்லவேண்டும். ஜாதிகள் அற்ற சமுதாயத்தைப் பார்க்கவேண்டும். அது தான் அறம் அல்லவா?

இதை ஒரு கற்பனை வாதமாகவும் மட்டும் எடுத்துக் கொண்டு ஆரயலாம். மனிதர்கள் ஜாதியை புறக்கணித்தாலொழிய ஜாதியம் ஒழியாது. ஜாதியம் சம்பந்தப்பட்ட ஏற்ற தாழ்வுகள் உண்மையாக நீங்க வேண்டுமென்றால், ஜாதியைப் பற்றி பேசாமலிருப்பதுதான் அதற்குச் சிறந்த வழி. (சற்றே நாம், ஜாதியத்தை ஆதாயத்திற்குக் கருவியாக பயன்படுத்தும் கும்பலை ஒதுக்கி, ஒரு ஐடியலிஸத்தை இந்த தர்கத்திற்கு உள்ளீடாக எடுத்துக் கொள்வோம்)

அரசாங்கம், ஜாதியம் மூலமாக உருவாக்கப்பட்ட பொருளாதார ஏற்ற தாழ்வுகளைச் சமன் படுத்துகிறதென்று என்று கிளம்பி, அதில் வெற்றி பெற்றதோ இல்லையோ, உணர்வு சம்பந்தப்பட்ட தளங்களில் அதற்கு எதிர்மறை விளைவுகளை எற்படுத்தியுள்ளது. அவர்கள் ஏன் படிவங்களில் தேவையில்லாத இடங்களிலும் "ஜாதி" என்று கேட்கிறார்கள் என்று தெரியவில்லை.

சரி. சமுதாயத்தை முன்னகர்த்த வேண்டிய இலக்கியவாதிகளாவது இந்தப் பணியை செய்வார்களா என்று சிந்தித்துப் பார்க்கிறேன். செய்யமுடியுமா? ஒரு கதாபாத்திரம் உருவாகும் பொழுது ஜாதியம் சார்ந்து தான் உருவாக்கவேண்டுமா? ஜாதி அடையாளங்கள் இல்லாமல் அமைத்தல் இயாலாத காரியமா?

மயில கழுத்தில் ராமனும், பாலசுப்ரமணியனும் (தி.ஜாவும், சுராவும்) நிஜ பாத்திரங்களாதலால் அவர்கள் பேச்சு வழக்கு ஏற்று கொள்ள முடிகிறது. ஆனால் இந்த வரிக்ளைப் பாருங்கள்:
"அக்ரஹாரம் முழுக்க தெரு நிறைத்து கோலம்போட்டிருந்தார்கள். நிறைய பிராமணப் பையன்கள் சட்டை போடாத உடம்பில் பட்டைபட்டையாக விபூதி குழைத்து பூசி பெரிய பலாச்சுளைக் காதுகளுடனும் எண்ணை ஒட்டிய

தலைமயிருடனும் உரக்க சிரித்து விளையாடிக்கொண்டிருந்தார்கள். ”
இந்த வரியில் ”நிறைய பையன்கள்” என்று சொல்லியிருந்தால் எந்த வகையில் கதையின் தன்மையை குறைத்துக் காட்டியிருக்கும்? இது தவிர்க்க முடியாததா? இப்படி எழுதுவதால் நாம் ஜாதியத்தை அழிக்காமல் (பிரஞ்கையில்லாமலே) பாதுகாத்து அல்லவா வருகிறோம்?

இல்லை நான் “naive” ஆக சிந்திக்கிறேனா?

(உங்கள் கதையை உதாரணத்திற்காக இங்கே குறிப்பிடுகிறேனே தவிர இது பிற எழுத்தாளர்களின் கதைக்கும் பொருந்தும் என நினைக்கிறேன்.)

Bags [பகவதிப்பெருமாள்]

அன்புள்ள பகவதிப்பெருமாள்,

பொதுத்தன்மை கொண்ட கேள்வி என்பதனால் நேரடியாக கறாராக இதற்கு பதிலளிப்பதைத் தவறாக எடுத்துக்கொள்ள மாட்டீர்கள் என்று நினைக்கிறேன். நம் சூழலில் ஜாதி பற்றிச்சொல்லப்படும் பொதுக்கருத்துக்களின் அடிப்படையில் ஓர் உறுதியான முன்முடிவை உருவாக்கிக்கொண்டு இந்த வினா எழுப்பப்பட்டிருக்கிறது. ஜாதியை ஒழிக்க ஒரே வழி அதைப்பற்றி எவரும் எதுவும் பேசாமலிருப்பதுதான் என்பதில் உங்களுக்கு ஐயமே இல்லை. இருந்தாலும் இது ஓர் விவாதம் என்பதனால், விவாதங்களில் எனக்கு நம்பிக்கை இருப்பதனால் இந்த நீண்டபதில்.

இத்தகைய ஒரு கேள்வியை எழுப்புவதற்கு முன்னர் சாதி என்ற சமூக அமைப்பைப்பற்றி, அதன் உருவாக்கத்தையும் சமூகப் பங்களிப்பையும் பற்றி, ஒரு வரலாற்றுரீதியான புரிதலை உருவாக்கிக்கொள்ள முயல்வதே நாம் செய்யவேண்டியது. அந்த விரிவான அடிப்படையில் நின்றபடியே இதைப்பற்றிப் பேசுவது பொருள் உள்ளதாகும். ஆனால் நம் அறிவுஜீவிகளின் விவாதங்களில்கூட ஒருபோதும் ஒரு பின்புல வாசிப்பின் வலு இருப்பதில்லை. என் இணையதளத்தில் இது சார்ந்து நான் எழுதிய பல கட்டுரைகள் உள்ளன.

*

சாதி இந்தியச் சமூகத்தில் ’சிலரா’ல் உருவாக்கப்பட்ட ஒரு ’தீய’ அமைப்பு அல்ல. அல்லது தீய நோக்குடன் உருவாகி வந்த அமைப்பும் அல்ல. பள்ளிக்கூடங்களின் பேச்சுப்போட்டிகளுக்காக நமக்கு அளிக்கப்பட்ட எளிமையான கருத்துக்களின் அடிப்படையில் உயிர்வாழும் ஒரு

பிரம்மாண்டமான சமூகத்தின் பலநூற்றாண்டுக்கால வரலாற்றை ஆராய்வதை நாம் பொதுவிவாதங்களில் செய்துவருகிறோம். இந்தத் தளத்தில் சிந்திப்பதற்கு விரிவான சமூகவியலாய்வுமுறைமைகள் உள்ளன. அந்த முறைமைகளைச் சார்ந்து நிகழ்த்தப்பட்ட விரிவான நூல்கள் உள்ளன. சாதியைப்பற்றி பேசாமலிருப்பதல்ல, நேர்மாறாகச் சாதியை விரிவான வரலாற்றுபின்புலத்தில் வைத்துப் புறவயமாக ஆராய்ச்சிசெய்வதென்பதுதான் நம்முடைய பண்பாட்டாய்வில் இன்று முக்கியமான நிகழ்வாக உள்ளது. உதாரணமாக டாக்டர் எஸ். ராமச்சந்திரன் அவர்களின் ஆய்வுகளைச் சுட்டிக்காட்டலாம்.

சாதி நம்முடைய வரலாற்றின் தொடக்கத்தில் பழங்குடிகளின் குல, இனக்குழு அடையாளமாக இருந்தது. இன்றும் உலகமெங்கும் உள்ள எல்லா பழங்குடிகளும் குலக்குழுக்களாகவும் இனக்குழுக்களாகவும் பிரிந்துதான் உள்ளன. குடும்பங்கள் குலங்களாகி குலங்கள் இனக்குழுக்களாவது என்பது பழங்குடிச்சமூகத்தின் ஒரு வளர்ச்சிப்போக்கு. அதன் தங்கிவாழ்தலுக்கும் வெற்றிக்கும் அது தேவையாகிறது என்பதனாலேயே அது நீடித்தது, நீடிக்கிறது

அதன்பின்னர் உருவாகி வந்த நிலப்பிரபுத்துவ காலகட்டத்தில் அன்றைய உற்பத்திமுறைக்கேற்ப அது மாற்றி அமைக்கப்பட்டது. அதில் மேல் கீழ் என்ற அடுக்குகள் உருவாக்கப்பட்டன. அடுக்கதிகாரம் [ Hierarchy ] உருவாகி நிலைநிறுத்தப்பட்டது. இதன் விளைவாகக் கீழே உள்ளவர்களின் உழைப்பை மேலே உள்ளவர்கள் சுரண்டித் தங்களிடம் தொகுக்க முடிந்தது. அவ்வாறாக செல்வம் சேர்ந்து மையத்தில் குவிந்தது. அதன் விளைவாக நம்முடைய நிலப்பிரபுத்துவ அரசுகள் உருவாகி வந்தன. அதாவது மன்னராட்சியும் பேரரசுகளும்.

அந்த பேரரசுகளின் பொருளாதார அடித்தளத்தை நிலைநாட்டும் கருத்தாக சாதி இருந்தமையால் அதற்கு விரிவான கருத்தியல் விளக்கங்கள் அளிக்கப்பட்டன. அது மதத்தாலும் ஆசார நம்பிக்கைகளாலும் நிலைநாட்டப்பட்டது. பல ஆயிரம் வருடம் இது நீடித்தமையால் அது ஒரு வாழ்க்கைமுறையாக ஆகியது. நம்பிக்கைகளாகவும் உணர்வுகளாகவும் மனதில் வேரூன்றியது. ஆழ்மனதில் ஊறியது. இந்த நீண்ட நிலப்பிரபுத்துவகாலகட்டம் உருவாக்கிய பண்பாட்டு அடையாளங்கள் அனைத்துமே சாதியுடன் பின்னிப்பிணைந்துள்ளவையாக ஆயின. நம்

கடந்தகால வாழ்க்கையின் எந்த ஒரு விஷயத்தையும் சாதியில் இருந்து நம்மால் பிரித்துப்பார்க்க முடியாத நிலை உள்ளது.

சாதி இன்றும் இந்தியாவில் ஒரு யதார்த்தம். இன்றும் கோடிக்கணக்கான இந்திய மக்கள் தங்களைத் தங்கள் சாதி சார்ந்தே அடையாளப்படுத்திக்கொள்கிறார்கள். சாதியாகவே திரள்கிறார்கள். இன்றும் இந்திய ஜனநாயகம் சாதியாகத் திரளும் மக்களின் அரசுமுறையாகவே உள்ளது. அந்தச் சாதியடையாளம் அவர்களை வேறு எங்கோ எவரோ முத்திரை குத்தியதனால் உருவானது அல்ல. அவர்கள் தங்களுக்கென தாங்களே உணரும் சுயம் அதுதான். அதற்கு பழங்குடிப்பின்புலத்தில் வேர் உள்ளது என்பதனால்தான் அதை அவர்களால் எளிமையாக விட்டுவிட முடியவில்லை. இந்தியாவில் சாதி ஏன் இருக்கிறதென்றால் இங்குள்ள கோடானுகோடி மனிதர்கள் அதை இழக்க விரும்பவில்லை, தங்கள் முழு இருப்பாலும் அதைத் தக்கவைத்துக்கொள்ளப் போராடுகிறார்கள் என்பதனால்தான்,

ஒரு சாதி எந்த அளவுக்குச் சாதிப்படிநிலைகளில் கீழே இருக்கிறதோ அந்த அளவுக்கு அது தன் சாதியடையாளத்தைப் பேணிக்கொள்ள விரும்பும். சாதிப்படிநிலைகளில் மேலே சென்றுவிட்ட சாதிகளே தங்கள் சாதியடையாளத்தை கொஞ்சம் நெகிழ்வாக வைத்திருக்கின்றன. அச்சாதிகள் பெற்ற ஐரோப்பிய கல்வியும் , செல்வ நிலையை மட்டுமே அடையாளமாகக் கொண்ட முதலாளித்துவ மதிப்பீடுகளும் அதற்குக் காரணம். இதெல்லாம் நம் கண்முன் உள்ள யதார்த்தங்கள். ஆம், இந்தியாவின் எளிய குடிமகனின் சுய அடையாளம் சாதியே. அவனிடம் சென்று அவனது சாதியை துறந்துவிடு என்று என்று சொல்லும் எந்த அரசியல் கட்சியும் இன்றில்லை. காரணம் அது ஒரு ஆழமான சமூக யதார்த்தம் என அவர்கள் அறிவார்கள்.

ஏன் சாதாரண இந்தியன் சாதியுடன் தன்னைப் பிணைத்துக்கொள்கிறான்? அவனை அடிமைப்படுத்திப் பழமையில் கட்டிப்போட்டிருக்கும் ஒரு தீய விஷயத்தைப்பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரியாது, ஏனென்றால் அவன் ஒரு அடிமுட்டாள், நமக்கு தெரியும் – ஏனென்றால் நாம் 'ஆங்கில' கல்வி பெற்ற புத்திசாலிகள், அவனுக்கு உண்மையை எடுத்துச் சொல்லி வெளிச்சம்காட்டும் 'புனிதக்கடமை' நமக்குள்ளது என்றெல்லாம் எண்ணிக்கொள்ளும் அகந்தை நமக்கிருந்தால் நாம் இந்தியாவைப்பற்றி

பேசாமலிருப்பதே இந்தியாவுக்குச் செய்யும் நல்ல விஷயமாகும். இந்தவகையான எளிய அகந்தைகளால் இந்தியச் சமூகம் ஏற்கனவே போதிய அளவு சீரழிக்கப்பட்டாயிற்று.

சாதி இந்தியாவின் சமூகப்பரிணாம வளர்சிதைப்போக்கில் மெதுவாக பற்பல நூற்றாண்டுக்காலகட்டத்தில் உருவாகி வந்த ஒன்று. அதற்கு ஒரு பொருளியல் பங்களிப்பும், சமூகப்பங்களிப்பும் இல்லாமல் அது இத்தனை நாள் நீடிக்காது என்று புரிந்துகொள்வதே சமூகவியல் சார்ந்த சிந்தனையின் ஆரம்பபப்டியாகும். அதை மார்க்ஸியத்தின் பாலபாடம் எனலாம்- நம் மார்க்ஸியர்கள் இன்றுகூட கற்றுக்கொள்ளாத ஒன்று.

சாதியின் பொருளியல் பங்களிப்பு மிக விரிவானது என்றாலும் சுருக்கமாக மூன்று விஷயங்களைச் சொல்லலாம்.

> ஒன்று அது அன்றைய சூழலுக்கு உகந்த ஒரு உழைப்புப்பங்கீட்டை உருவாக்கியது. ஒவ்வொரு தொழிலுக்கும் அதற்கான தொழிலாளர்கள் பிறப்பிலேயே உருவாகி வந்தார்கள்.
>
> இரண்டு, அது உழைப்பாளர் குழுக்களை [ Guilds] உருவாக்கி பிறந்ததுமே ஒருவர் அவருக்கான தொழிற்கல்வியை இயல்பாகப்பெற வழிசெய்தது. விளைவாக திறமையான தொழிலாளர்கள் உருவானார்கள்.
>
> மூன்று, அது உழைப்பின் மேல்- கீழ் அடுக்கை நிலைநாட்டில் மேலே உள்ளவர்கள் கீழே உள்ளவர்களின் உழைப்பில் பெரும்பகுதியை தாங்கள் எடுத்துக்கொள்வதற்குரிய சுரண்டல் கட்டமைப்பை உருவாக்கியது [எந்த பொருளியல்சமூகத்திலும் இப்படி செல்வம் கீழிருந்து மேலெ சென்று குவிய ஏற்ற ஒரு அமைப்பு கண்டிப்பாக இருக்கும்]

சாதியின் சமூகவியல் பங்களிப்பு இன்னும் நுட்பமானது. சாதியமைப்பு ஒவ்வொரு சாதிக்கும் உரிய சமூக இடத்தை வரையறைசெய்தமையால் சமூக இடத்துக்காக சாதிகள் ஒன்றுடன் ஒன்று மோதிக்கொள்வது இல்லாமலாயிற்று. எந்த ஒரு உறுதியான சமூக அமைப்பும் முதலில் உருவாக்குவது உள்சமூக அமைதியைத்தான். ஏதேனும் வகையில் சாதிய அமைப்பு , அதாவது மேல் கீழ் என்ற பொதுப்புரிதல், உருவாகாத பழங்குடிச்சமூகங்கள் இடைவெளியில்லாத மோதல்களால் ஆனவை. இதை

வடகிழக்கு மாகாணங்களை அல்லது பல ஆப்ரிக்க நாடுகளைக் கண்டால் அறியலாம். அப்படித்தான் இங்கும் இருந்தது. சாதியமைப்பே அந்த அமைதியின்மையை இல்லாமலாக்கி நிலப்பிரபுத்துவ அமைப்பின் ஒழுங்கை உருவாக்கியது. ஒரு சாதி பொது சாதிய அமைப்பில் தன் இடத்தை புரிந்துகொண்டு ஏற்கும்போதே நிலப்பிரபுத்துவ சமூக அமைப்பு உருவாகிறது. ஆகவே சாதி என்ற அமைப்பு பழங்குடி சமூக திரளில் இருந்து உருவான மிகப்பெரிய முன்னகர்வாகும்.

சாதி மனிதர்களைத் தங்கள் குடும்பம்,குலம் என்ற சிறிய சுய அடையாளங்க்களில் இருந்து விடுவித்து இன்னும் விரிவான ஒட்டுமொத்தமான ஒரு சுய அடையாளத்தை அவர்களுக்கு அளித்தது. அந்த சுயம் உற்பத்தி சார்ந்ததாகவும் இருந்தது. ஆகவே அது ஒரு வெற்றிகரமான சமூக அமைப்பாக நீடித்தது

நிலப்பிரபுத்துவ சமூகம் பிறப்பின் அடிப்படையில் உருவாக்கப்பட்ட அமைப்புகளால் ஆனதாகவே என்றும் எங்கும் இருந்துள்ளது. இதற்கு விதிவிலக்கான சமூகமே உலகில் கிடையாது. சாதி என்பது இந்தியாவுக்கு மட்டும் உரிய சொல் என்பதனால் உலகளாவிய கலைச்சொல்லான இனக்குழு என்பதை சோவியத் நூல்கள் குறிப்பிட்டன. அதுவே இப்பிரச்சினையை உலகளாவிய தளத்தில் பேசுவதற்கு உதவியானதாகும். இனக்குழுப் பிரிவினைகள் இல்லாத சமூகங்களே இல்லை.

பின்னர் முதலாளித்துவம் வந்தது. முதலாளித்துவம் இயந்திரங்களை நம்பியிருக்கும் உற்பத்திமுறையின் அடிப்படையில் ஆனது. ஆகவே நேரடியான மானுட அடிமைகள் தேவையில்லாதவர்களாக ஆனார்கள். நிலப்பிரபுத்துவத்தின் உற்பத்திமுறை, தொழிற்சாலைகள் என்ற நவீன உற்பத்தி முறையால் இல்லாமலாயிற்று. நிலப்பிரபுத்துவம் உருவாக்கிய சமூக அடுக்குமுறை காலாவதியாகி, உழைப்பின் சந்தைமதிப்புக்கு ஏற்ப ஒரு சமூக அடுக்குமுறை உருவாகி வந்தது. விவசாயியை விட மெக்கானிக் மேலானவனாக ஆனதை உதாரணமாகச் சுட்டிக்காட்டலாம். விளைவாக, சாதி போன்ற அமைப்பு தேவையற்றதாக ஆகியது. முதலாளித்துவம் வலுப்பெறும்தோறும் சாதியமைப்பு அழியும். அந்த இடத்தில் வேறுவகையான உழைப்புச்சுரண்டல் அல்லது உபரி சேமிப்பு முறை வந்து சேரும்.

இதுதான் இந்தியாவில் பல படிகளாக நிகழ்ந்துகொண்டிருக்கிறது. எங்கே நவீன உற்பத்திமுறை வருகிறதோ அங்கே சாதியமைப்பின் பிடி தளர்கிறது. தொழில்நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் இடையேயான வேறுபாடு இதுவே. இந்த வளர்ச்சிப்போக்கில், இன்னும் சில வருடங்களில், சாதியமைப்பின் அடிப்படைகள் அழியும் என நினைக்கிறேன். சாதி உருவாக்கிய அடுக்கதிகாரம் மறையும். மேல் கீழ் என்ற நிலை இல்லாமலாகும். உழைப்பின் சந்தைமதிப்பை மட்டுமே மனிதர்களை மேலே கீழே என அடுக்கும் அளவுகோலாகக் கொள்ளும் சமூகம் வரும். ஆனால் அப்போதும் சாதி இருக்கும். பண்பாட்டு அடையாளமாக. சுய அடையாளமாக.

சாதி எதற்காக உருவானதோ அந்த நோக்கம் இல்லாமலாகும்போது அது அழியும். அதை அழிக்கவேண்டுமென்றால் அந்த நோக்கம் காலாவதியாகும்படிச் செய்வது மட்டுமே வழி. எங்கே நிலப்பிரபுத்துவ உற்பத்தி முறை அழிகிறதோ அங்கே சாதிமுறை அழியும். ஆனால் அங்கே புதிய ஏற்றத்தாழ்வு முறை உருவாகி வரும். கூவம் கரையில் குடிசைவாசிகளுக்கும் நட்சத்திர விடுதிவாசிகளுக்கும் இடையேயான தூரம் பிராமணனுக்கும் தலித்துக்கும் இடையே உள்ள தூரத்தை விட பலமடங்கு அதிகம். மற்றபடி கொள்கையளவில் சாதியை ஒழிப்பதெல்லாம் வெறும் பள்ளிக்கூட முழக்கம் மட்டுமே.

சாதியைப் பற்றி பேசாமலிருக்கவேண்டுமென்றால் சாதியை உருவாக்கிய நிலப்பிரபுத்துவக் கட்டத்தைப்பற்றியே பேசாமலிருக்க வேண்டும். இன்றுவரையிலான வரலாற்றைப் பாரம்பரியத்தை முற்றாகத் தவிர்க்கவேண்டும். சாதியை உருவாக்கிய அதே சமூக அமைப்புதான் நம் இசையை, இலக்கியத்தை, கலைகளை, மதத்தை எல்லாம் உருவாக்கியிருக்கிறது. அவை ஒன்றுடன் ஒன்று நுட்பமாகப்பின்னிப்பிணைந்தவை. சாதியைப்பற்றி பேசாமல் நம் வரலாற்றை புரிந்துகொள்ள முடியாது. நாம் வாழும் சமூகச்சூழலை அறிய முடியாது

இலக்கியம் என்பது இன்னும் அணுகி வாழ்க்கையை பார்க்கும் கலை. ”மயில் கழுத்து” கதையையே எடுத்துக்கொள்வோம். எதற்காக அக்ரஹாரம் என்று சொல்லவேண்டும்? குடியிருப்பு என்று சொன்னால் போதும். எதற்காக சுப்பு அய்யர் என்று சொல்லவேண்டும், சுப்பு என்றால்

போதும். அதாவது ஆண்கள் பெண்கள் என்று மட்டும் சொன்னால் போதும், இல்லையா?

மன்னிக்கவும், அப்படி இலக்கியம் எழுதப்படமுடியாது. இலக்கியம் பொதுமைகளால் அல்ல நுண்மைகளாலேயே உருவாக்கப்படுகிறது. ஏன் பெரிய காதுகள் கொண்ட பிராமணப்பிள்ளைகள் என்று சொல்ல வேண்டும். அங்கே காதுக்கு என்ன வேலை? அந்த காட்சியின் நுட்பம் ஒருவாசகன் மனதில் உருவாகவேண்டியிருக்கிறது. எந்த காட்சித்தகவல், எந்த ஒலித்தகவல், எந்த படிமம் அதை உருவாக்கும் என்று சொல்லமுடியாது. அந்த இடத்தில் கற்பனையில் தன்னை நிறுத்திக்கொண்டு அப்போது தன்னிச்சையாக மனதில் எழுவதை சொல்லிக்கொண்டே போவதுதான் எழுத்தாளன் செய்யக்கூடியது. அப்படி மனதில் எழும் கட்சி-ஒலி-படிமங்களுக்கு ஆழ்மனம் சார்ந்த ஒரு காரணம் இருக்கும். அந்தக் காரணமே வாசகன் மனதிலும் அந்தச்சித்திரத்தைக் கொண்டு சென்று சேர்க்கிறது.

சாதியைப் பேசாமலிருப்பது என்பது அதைப் பொத்தி வைப்பதற்குச் சமம். ஒன்றைப் பேசாமலிருப்பது என்பதே நிலப்பிரபுத்துவ கால மனநிலை என்பதை நாம் உணரவேண்டும். காமத்தை, உறவின் விசித்திரங்களை எல்லாம் பேசாமலிருப்பதை ஒரு வழக்கமாக முன்வைத்த காலம் போய்விட்டது. எல்லாவற்றையும் புறவயமாக அறிவுபூர்வமாக விவாதிப்பதன் மூலம் அதைக் கடந்துசெல்வதையே இந்த நூற்றாண்டு தன் பொது வழிமுறையாகக் கொண்டுள்ளது. பள்ளியில் பாலியல்கல்வி கொடுக்கவேண்டும் என்கிறோம். ஆனால் சாதியை அப்படியே மூடி வைக்கவேண்டும் என்று நினைக்கிறோம். மூடிவைக்கப்படும் எந்த விஷயமும் வளரும். அறிந்து கொள்ளப்படும் விஷயமே கடந்துசெல்லப்படும்

என் படைப்புகளில் நான் எதை அறியவிரும்புகிறேனோ அவற்றை எல்லாம் பட்டவர்த்தனமாக பேச விரும்புபவன். சாதிகளை, மதங்களை, ஆழத்து மன இயக்கங்களை, அடித்தள வாழ்க்கையை. ஏழாம் உலகம் படித்துவிட்டு இதையெல்லாம் ஏன் எழுதவேண்டும் என்று கேட்டவர்களே அதிகம். ஜி.நாகராஜன் சொன்னதுபோல இருக்கிறது, ஆகவேதான் என்று பதில் சொன்னேன். அதையே இங்கும் சொல்கிறேன்

# (5) சாதி- இரு கேள்விகள்

ஜெ ,

பகவதிக்கு சாதி குறித்து நீங்கள் எழுதிய கடிதம் கண்டேன் , சாதியை பற்றி எனக்குள் இருந்த ஐயங்களைத் துடைத்தவை சிறிலுக்கு அளித்த பதில்கள் ,

தொடர்புடைய , நீண்ட நாட்களாகக் கேட்க நினைத்த கேள்வி உண்டு,

படைப்பில் சாதி பற்றிய வசைகள் ஏன் வருகின்றன ? பாத்திரங்கள் பேசுவதை ஜெயமோகன் பேசுவதாக நினைத்துகொண்டு கேட்கவில்லை .

உதாரணமாக காடு நாவலில் குட்டப்பன் பேசும் ஜாதி , மதம் குறித்த வசைகள், இவை ஏன் தேவை நாவலில் ?

என்னைத் தெளிவாக்கிக் கொள்ள உதவுங்கள் .

(காடு நாவலுக்கு இணையத்தில் யார் விமர்சனம் எழுதினாலும் கோவை இணையர்கள் இரண்டு பேர் ஜெயமோகன் சாதிவெறியர் என "நிரூபிக்க" இதைக் குறிப்பிடுவார்கள், சாதியை ஒழிக்கவாம் , தமிழகத்தில் இரட்டை டம்ளர் முறையை 2 வருடங்கள் முன்புவரை பேணிவந்த மாவட்டம் இது , இன்னும் எந்த கிராம கோவில்களிலும் தலித்கள் நுழையவிடாமல் வருடம் இரண்டு முறை பிரச்சனை நடக்கும் மாவட்டம் இது , இந்த ஜாதியை எல்லாம் ஒழிக்க தோன்றாது போல , இலக்கியத்தில் ஜாதியை ஒழித்தால் எல்லாம் சுபம் )

அரங்கசாமி

அரங்கசாமி,

நம் சூழலில் மக்கள் சாதிகளாகவே வாழ்கிறார்கள். சாதிக்குள் நின்றே சிந்திக்கிறார்கள். சாதியையே தங்கள் சுயம் என்று அடையாளப்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். 'நாங்க நாடாக்கமாரு அப்டி நெனைக்கிறதில்லை' என்று பேசாத ஒரு சாதாரண நாடாரை நீங்கள் பார்க்கமுடியாது.

இந்த சுய அடையாளத்தை நகைச்சுவையாக ஆக்குவதன் மூலம் அதில் உள்ள வேறுபாட்டை அல்லது இடைவெளியை தாண்டிச்செல்ல முயல்வதையும் கிராமத்தில் காணலாம். பத்மநாப புரத்தில் ஒரு காட்சி . பஸ்

நின்றதும் மூன்று பேராக நின்றவர்களில் ஒருவர் கேட்டார். [மூன்று ஜட்டமுமே நல்ல பூஸ்]. 'ஒருநாயருக்கும் ரண்டு நாடான்மாருக்கும் சீட்டு உண்டா சார்?' நெல்லைப்பக்கம் மரைக்காயர்களும் பிள்ளைவாள்களும் மாறி மாறி நக்கல் செய்து பேசுவதை 'கௌரவமாக' பதிவு செய்துகொள்ள முடியாது.

ஒருவரை அவரது சாதி சார்ந்து அடையாளப்படுத்துவது நம் சூழலில் வழக்கம். சாதிப்புத்தி என்ற கருதுகோள்தான் இங்கே மனிதர்களைத் தீர்மானிக்கக்கூடியதாக இருக்கிறது. 'சமயவேல் வீட்டிலே சாப்பிட்டேன். ஆசாரிமார் மீன்குழம்பு நல்லா வைப்பாங்க' என்று கோணங்கி சொன்னான். இயல்பான கிராமத்து மனிதனாக அவன் எனக்கு அறிமுகமான நாட்கள். 'ஏல, இது நாயுடு ஓட்டல். இவனுக கறிக்குழம்பு வச்சு வௌங்கினாப்லதான். பாயி ஓட்டல் இருந்தா சாப்பிடுவோம். இல்லேன்னா தயிர்சாதம் போரும்' என்றான் ஒருமுறை. இதெல்லாமே ஒருவகை நாட்டுப்புற யதார்த்தங்கள்.

சாதிப்புத்தி என்பதை எதிர்மறையான ஒரு விஷயமாகப் பார்க்க நாம் சொல்லப்பட்டிருக்கிறோம். கிராமத்தில் அது அப்படி அல்ல. மக்கள் சாதிகளாக வாழும்போது, அவர்களின் குலதெய்வங்களும் குடும்பதொன்மங்களும் அவர்கள் ஆழ்மனங்களைத் தீர்மானிக்கும்போது அவர்களின் மனமும் ஆளுமையும் பழக்கவழக்கங்களும் அதையொட்டி உருவாகின்றன. கையில் வாளுடன் நிற்கும் குலதெய்வங்களைக் கொண்ட நாயரும் தேவரும் மஞ்சள்பொங்கல் நைவேத்யம் சாப்பிடும் குலதெய்வத்தைக் கொண்ட ஆசாரிமாரிடமிருந்து வேறுபடத்தான் செய்வார்கள். [ பிள்ளைமார் உளுந்தங்களி சாப்பிட்டாலே போதையாயிடுவானுக- பின் தொடரும் நிழலின் குரல் நாவலில் கதிர்] அவர்களின் மனமும் உணர்ச்சிகளுமல்ல இவர்களுடையது.

இந்த அடிப்படையில் உறவுகளையும் மனிதர்களையும் சாதி சார்ந்து அணுகுவது கிராமத்து மக்களுக்கு ஒரு நடைமுறை யதார்த்தமாக , அவர்களே வாழ்க்கையில் இருந்து பழகிக் கற்ற ஓர் உண்மையாக இருக்கிறது. குட்டப்பனும் செல்லையா பெருவட்டரும் எல்லாருமே அந்த உலகுக்குள் வாழ்பவர்கள். அவர்கள் அப்படித்தான் வாழ்க்கையை அணுகினார்கள். அப்படித்தான் பேசுவார்கள். அதுவே யதார்த்தம். அதை நுட்பமாகவும் முழுமையாகவும் பதிவு செய்வதற்கு பெயர்தான் இலக்கியம். வாழ்க்கை அப்படி இருக்கும் வரை இலக்கியம் அதைக் காட்டத்தான் செய்யும். குட்டப்பன் ஒரு கணம் கூட தன்னை நாடார் என உணராமலில்லை.

அவன் வாழ்க்கைப்பார்வையே அதிலிருந்துதான். அவன் விருப்பும் வெறுப்பும் அதை வைத்துத்தான். அதை இல்லாமலாக்கிவிட்டு அவனை இலக்கியத்திற்குள் கொண்டு வரமுடியாது.

இலக்கியம் வாழ்க்கையைக் காட்டுகிறது. எழுத்தாளனின் விருப்பு வெறுப்புகளைக் காட்டும் உதாரணங்களை அல்ல. அவனுடைய சொந்தக் கருத்துக்களின் அடிப்படையில் செய்யப்பட்ட செயற்கையான நிகழ்வுகளுக்கு இலக்கியத்தில் இடமில்லை. சாதி மத அடையாளம் அற்ற 'கந்தன் ஓர் உழவன். இவன் தினமும் ஏர் பூட்டுவான்' என்பது போன்ற கதைகளைப் பள்ளிக்கூட பாடப்புத்தகத்தில் வாசித்தற்கு மேலே ஒன்றும் தெரியாத வாசகர்கள் உருவாக்கும் அபத்தமான கருத்துக்கட்டுப்பாடுகளுக்குள் இலக்கியம் நிற்காது. இலக்கியம் எளிமையான 'நாலாப்பு' கருத்துக்களை இடம்சுட்டி பொருள் விளக்கம் தருவதற்குரிய களம் அல்ல. வாழ்க்கையை உண்மையின் வீச்சுடன் காணவும் அதைப்பற்றி விரிவாக சிந்திக்கவும் மூளைத்திராணி உள்ள முதிர்ந்த மனிதர்களுக்கானது.

மேலும் ஒன்று, இந்த கருத்துக்களில் உள்ள மிகப்பெரிய முட்டாள்தனம் என்பது, ஒருகதையில் உள்ள எல்லா கதாபாத்திரங்களின் பேச்சுகளையும் ஆசிரியரின் 'கருத்துக்களாக' வாசித்து புரிந்துகொள்வது. ஆம், 'நாலாப்பு' மனநிலை.

ஒரு புனைகதை என்பது பல்வேறு குரல்களால் ஆனது. எழுத்தாளன் ஒரு கருத்தை எழுதுவதில்லை, ஒரு வாழ்க்கைச்சூழலை எழுதுகிறன். அதில் உள்ள பல்வேறுபட்ட கருத்துநிலைகள், பல்வேறு உணர்ச்சிநிலைகள், பல்வேறு வாழ்க்கைத்தருணங்கள் வாழ்க்கையில் இருந்து எடுக்கப்பட்டு செறிவாக்கம் செய்யப்பட்டவை. அவை வாசகனுக்கு உண்மையான வாழ்க்கைக்கு நிகரான ஒரு வாழ்க்கையனுபவத்தை அளிக்கின்றன. உண்மையான ஒரு வாழ்க்கையனுபவத்தை அந்த வரிகளில் இருந்து கற்பனை செய்து அனுபவிக்க வேண்டியது வாசகனின் பொறுப்பு. ஓர் உண்மையான சொந்த வாழ்க்கையனுபவத்தில் இருந்து எப்படி சிந்தனைகளை விரிவாக்கம் செய்துகொள்வானோ அப்படிச் சிந்தனைகளை விரிப்பது அவன் செய்யவேண்டியது.

தமிழிலக்கியத்தில், என்று யதார்த்தவாதம் நேர்மையான தீவிரத்துடன் எழுதப்பட்டதோ, அன்றே அது நம் மக்களின் சாதிசார்ந்த

வாழ்க்கைநோக்குப் பற்றிய நுண்ணிய அவதானிப்புடன் பதிவுசெய்வதாகவே இருந்தது. இன்றே இந்த அசடுகளை எதிர்கொள்ள வேண்டிய நிலை இருக்கிறதென்றால் புதுமைப்பித்தனை என்னதான் சொல்லியிருக்க மாட்டார்கள்? கு.அழகிரிசாமி, ந.பிச்சமூர்த்தி,கி.ராஜநாராயணன் வரை நம்முடைய எல்லா எழுத்தாளர்களும் இந்த இணைய அசடுகள் கண்ணில் படாமல் சிற்றிதழ்களில் எழுதித் தப்பினார்கள் என்று தோன்றுகிறது.

இவை இலக்கியவாசிப்புக்கு அல்ல, சாதாரணமான ஐந்தாம் வகுப்பு கதை வாசிப்புக்கே தேவையான வழிமுறைகள். கொஞ்சம் புத்திசாலியான ஒரு ஐந்தாம் வகுப்பு குழந்தைக்கு இவற்றைச் சொல்லித்தரவேண்டியதில்லை. ஆனால் தமிழில் நாம் இலக்கியமும் கருத்தியலும் விவாதிக்க கிளம்பி வரும் மக்குகளுக்கு இந்த ஆரம்பப் பாடத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லவேண்டியிருக்கிறது. இந்த நிலை வேறு எந்த சூழலிலும் இருக்குமா எனத் தெரியவில்லை. தமிழின் பொது அறிவுச்சூழல் எந்த அளவுக்கு சூம்பிப்போன நிலைக்கு கொண்டு வந்து விடப்பட்டிருக்கிறது என்பதற்கு இது சிறந்த உதாரணம்

ஜெ

ஜெ,

எந்த தர்கத்திலும் ஒரு பக்க நிலைப்பாடு எடுப்பது எண்ணங்களைக் கட்டுப்படுத்தி விடும் என்று எப்பொழுதும் எனக்கு நானே சொல்லி வருபவன். ஆனால் சில சமயம் என்னையும் அறியாமல் ஒரு பக்கம் சாய்ந்து விடுகிறேன். ஜாதியின் சமூக பங்களிப்புகளைக் கணக்கிலெடுக்கத் தவறிவிட்டேன்.

மேலும் "மனிதர்கள் ஜாதியை புறக்கணித்தாலொழிய ஜாதியம் ஒழியாது. ஜாதியம் சம்பந்தப்பட்ட ஏற்ற தாழ்வுகள் உண்மையாக நீங்க வேண்டுமென்றால், ஜாதியைப் பற்றி பேசாமலிருப்பதுதான் அதற்குச் சிறந்த வழி." என்று நான் கூறியது நீங்கள் சொல்வது போல் "புனிதக் கடமை" என்று கையிலெடுத்துக் கொள்ளும் "அகந்தை" தான். அதற்கு தகுந்த, தெளிவான பதில் – "சாதி எதற்காக உருவானதோ அந்த நோக்கம் இல்லாமலாகும்போது அது அழியும். அதை அழிக்கவேண்டுமென்றால் அந்த நோக்கம் காலாவதியாகும்படிச் செய்வது மட்டுமே வழி."- இந்த மொத்தக்

கட்டுரையின் சுருக்கமாக இதை பார்க்கிறேன். ஆனாலும் இந்த இடத்தில் எனக்கு எதிர்மறையாக ஒரு கேள்வி தோன்றுகிறது – "அப்படியென்றால் சமூக பங்களிப்பு உள்ள ஜாதி அமைப்பை கட்டி காப்பது நம் கடமையாக அல்லவா இருக்க வேண்டும்? இது பற்றி சிந்தித்து வந்த அறிவுலகம் (உங்களைப் போல் அல்லாமல்) ஏன் இதை துணிந்து முன் வைக்கத் தயங்குகிறது?" அல்லது அறிந்திருந்தும் "பழமைவாதி" என்ற முத்திரை பதிந்துவிடும் என்ற பயத்தினாலா?

இலக்கியத்தில் சாதி இல்லாமல் எழுதுவது என்பது என்னுடைய விதண்டாவாதம் தான் என்று மிக சமீபத்தில் "புலி நகக் கொன்றை" நாவலை படிக்கும் பொழுது புரிந்துக் கொண்டேன். அங்கே ஜாதி இல்லாமல் அந்தக் கதையே பி.ஏ.கிருஷ்ணன் உருவாக்கியிருக்கமுடியாது.

பகவதிப்பெருமாள்

பக்ஸ்,

சாதியின் சமூக- பண்பாட்டு பங்களிப்பு என்பது இப்போதும் நீளக்கூடிய ஒன்று அல்ல. நேற்று நிகழ்ந்தது. நம் கையில் வந்துசேர்ந்துள்ள பண்பாட்டில் ஆழமாக வேரூன்றியிருப்பது. இன்றைய காலகட்டத்தில் வேகமாக பிடி தளர்வது.

சாதி சார்ந்த பாரம்பரியத்தில் இரு கூறுகள் உள்ளன. ஒன்று அதன் பண்பாட்டு அடையாளத்தின் இறந்த கால நீட்சி. அது நம்மை நம்முடைய வரலாற்றுக்கு முற்பட்ட தொன்மையில் கொண்டுபோய் பிணைக்கிறது. அது நம் சுயத்தை ஒருவகையில் வரலாற்றின் போக்கில் வைத்து தீர்மானிக்கிறது. இதை அறிவதும், அதன் உணர்வுகளை உள்வாங்குவதும் நம்மை நாம் அறிய உதவும். இலக்கியம், கலைகள் எல்லாமே அதற்கான கருவிகள்.

ஆனால் சாதி இன்றும் வாழ்நதாக வேண்டிய ஒன்றல்ல. அது நிலப்பிரபுத்துவ கால அமைப்பு. இது முதலாளித்துவம். சாதி தன் பங்களிப்பை ஏற்கனவே செய்துவிட்ட ஒன்று. காலாவதியான ஒன்று ஒரு நிகழ்காலச்சூழலில் எதிர்மறையான பங்களிப்பை ஆற்றக்கூடும். நேற்றைய அதே சுரண்டல் அடுக்கதிகாரம் இன்றும் நீடிக்கவேண்டும் என்று கோருவதற்கு வழிகோலக்கூடும். அது பழைமைவாதம், மூடத்தனம்.

ஆகவேதான் நான் என் வாழ்கையில் சாதி அடையாளத்தை ஏற்கவில்லை. சாதிக்குள் மணம் செய்துகொள்ளவில்லை. சாதிக்குள் பிள்ளைகளை

வளர்க்கவில்லை.சாதியை எவ்வகையிலும் கடைப்பிடிக்கவில்லை. நாளை கடைப்பிடிக்கப்போவதுமில்லை.

அதேசமயம் சாதியின் வரலாற்றையும், அதன் தொடர்ச்சியையும் அறிய எப்போதுமே கவனம் கொள்வேன். ஆம், அறிவது அதை கடந்துசெல்வதற்காகத்தான்.

# (6) சாதியும் ஜனநாயகமும்

மதிப்பிற்குரிய ஜெயமோகன் அவர்களுக்கு,

நான் காஞ்சிபுரம் மாவட்டத்தின் ஒரு கிராமத்தில் ஏரிப்பாசனத்தை நம்பியிருக்கும் விவசாயக் குடும்பத்தைச் சார்ந்தவள். உங்களுக்குக் கடிதம் எழுதும் தகுதி கூட எனக்கில்லையென்றே நினைக்கிறேன். உங்களைப் போல இரவும் பகலும் நான் வாசிக்க / எழுத நினைத்துக்கூட பார்த்ததில்லை.

சின்மயி பற்றிய பதிவில் நீங்கள் குறிப்பிட்டுள்ளதைப் பற்றி எனக்கு மேலும் சில விளக்கங்கள் தேவையென்பதால் இதை எழுதுகிறேன். சின்மயி / கைதாயிருப்பவர்கள் பிரச்சனை பற்றி எனக்குப் பேச ஏதுமில்லை. அது அவர்களின் சொந்தப் பிரச்சனை என்றே கருதுகிறேன். இந்த விவகாரத்தால் சின்மயி அவர்களின் சில ட்வீட்களைப் படிக்க நேர்ந்தது. இட ஒதுக்கீட்டிற்காகக் குரல் கொடுக்கும் தலைவர்களை Bull Crap என சொல்லியிருக்கிறார். இதை எந்த அறத்தின்படி சரியென்பீர்கள். அவர் மேலும் யாருக்கும் யாரும் குறைந்தவர் அல்ல என்றும் அதனால் இட ஒதுக்கீடு தேவை இல்லை எனவும் சொல்லியிருக்கிறார்.

எங்கள் கிராமத்தில் நவராத்திரியின் போது அம்மன் (உண்மையில் சீதை) தினமும் வீதியுலா வருவது வழக்கம். சிறு பிள்ளைகள்தான் சாமியைத் தூக்கி வருவார்கள். அப்படி வரும்போது ஒரு நாள் வைஷ்ணவரான அர்ச்சகர் என் தம்பியின் கை பட்டதற்காகப் பெரிய சண்டையை உருவாக்கினார். மறுபடி குளித்துவிட்டுத்தான் அர்ச்சனையைத் தொடர்ந்தார். இது நடந்த ஆண்டு 2000. நான் எப்படி அனைவரும் சமம் என ஒப்புக் கொள்ள முடியும்?

நான் பொறியியல் கல்லூரியில் சேர்ந்ததும் இட ஒதுக்கீட்டால்தான். இல்லையென்றால் இந்நேரம் எந்த வீட்டில் எத்தனை குழந்தைகளைப் பெற்று அல்லாடிக் கொண்டிருந்திருப்பேன் எனத் தெரியாது. நாங்கள் கனவிலும் கண்டிராத வாழ்க்கையை இப்போது வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

ஆனால் எங்கள் வாழ்க்கையின் துயரங்களை அறியாதவர்கள், இட ஒதுக்கீடும் மாமிசம் உண்ணுதலும் தவறென்று சொல்வது எப்படி அறமாகும்? நாங்கள் விதியின் வசத்தால் இப்படி வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என நினைத்த நாட்கள் உண்டு. அது துயரமான வாழ்க்கையென்பதே தெரியாத காலம் உண்டு. என் தாய்க்குப் பிறந்த 6 குழந்தைகளில் உயிரோடு இருப்பது

3 மட்டுமே. சத்துணவு போதாமை காரணமென சொல்ல வேண்டியதில்லை. மாதம் ஒரு நாளோ இல்லை இரண்டு மாதத்திற்கு ஒரு நாளோ கிடைக்கும் புலால்தான் எங்களுக்குக் கிடைத்த புரதமாக இருக்கும். 400 மில்லி தண்ணீர் கலந்த பால் வாங்கி அதில் மேலும் தண்ணீர் ஊற்றிக் குடித்தவர்கள் நாங்கள். எங்களுக்கு 2 ஏக்கர் நிலமுண்டு. ஆனால் அதை எத்தனையோ தருணங்களில் இழந்து இருப்போம். 2 ஏக்கர் நிலமிருப்பதால் நாங்கள் உண்மையிலேயே இன்று பணக்காரர் தான் என நினைப்பதுண்டு. ஆனால் சிறு வயதில் என் அம்மா கடனுக்காகத் தற்கொலைக்கு முயன்றது கூட உண்டு. அந்த இரண்டு ஏக்கரில் இதுவரை நல்ல விளைச்சல் என்ற ஒன்று இருந்ததேயில்லை.

போவோர் வருவோர் எல்லாம் இட ஒதுக்கீடு தவறென்று சொல்லும் போது நெஞ்சில் அழுத்தும் ஒரு வலியைக் கடந்து போவது சாதாரணமில்லை. உடன் படித்த / பணி புரியும் பிராமணர்கள் (பெண்களும் ஆண்களும்) கணக்குப் போடும் வேகத்தைப் பார்த்து வியந்த நாட்கள் நிறைய. ஆனால் பிராமணர்களுக்குக் கணக்கு இயற்கையிலேயே சுலபமாக வரும் என மேலோட்டமாக சொல்லிச் செல்லும் வேளைகளில் எனக்கும் சொல்லத் தோன்றும் நாற்றெடுத்து நட, களையெடுக்க, அறுக்க சுலபமாக வருமென்று. பெருமையாகக் கருதியிருப்பார்களா?

இட ஒதுக்கீடு பெற்ற நிறையப் பேர் இப்படி மௌனமாக இவர்கள் சொல்வதைக் கேட்டுக் கொண்டுதானிருக்கிறார்கள் என்றே நினைக்கிறேன். இட ஒதுக்கீட்டை ஆதரித்துப் பேசுவதே அறிவீனம் என நினைக்கும் இடத்தில் தான் நான் இருக்கிறேன். நான் இதற்காக அழுத இரவுகள் உண்டு. அறம் அறம் எனப் பேசும் உங்களுக்கு இதெல்லாம் தெரியாதா? திராவிட இயக்கங்களின் மேல் ஆயிரம் குறைகள் சொன்னாலும், நாங்கள் இட ஒதுக்கீட்டுக்காக அவர்களுக்கு ஓட்டு போடுவதில் தவறென்ன இருக்கிறது. நடைமுறை வாழ்க்கையில் ஆதிக்க சாதிகளின் கொடுமை உடல் ரீதியிலானது என்றால் கருத்தியல் தளத்தில் எங்களை தினம் தினம் எங்களின் உணவுக்காகவும் இட ஒதுக்கீட்டுக்காகவும் ஏசும் பிராமணர்களின் இம்மாதிரியான பேச்சுகள் ஏன் ஆபாசமாகக் கருதப்படக்கூடாது?

பிராமணர்கள் தமிழின் இலக்கியங்களிலும், கலைகளிலும், கல்வியிலும் சென்றிருக்கும் தூரம் அளவிடமுடியாதது. ஆனால் நாங்கள் அங்கு வர இட

ஒதுக்கீடு இல்லாமல் முடியுமா? மன உறுதி வேண்டும், அனைவரும் சமம் என எழுதி விட்டால் பிரச்சனை தீர்ந்ததா?

இதை நீங்கள் சின்மயி பிரச்சனையாகக் கருத வேண்டாம் என வேண்டுகிறேன். சின்மயியைவிட அதிகமான எல்லைக்கு சென்று கருத்துகள் சொன்ன பல பேர் இணையத்தில் உண்டு. நீங்கள் இட ஒதுக்கீடு பற்றிப் பேசியிருக்கிறீர்களா என தெரியாது. இருந்தால் சுட்டி தரவும். தயவு செய்து என் பெயர்/மின்னஞ்சல் முகவரியை வெளியிட வேண்டாம். எனக்கு யாருடனும் விவாதிக்கும் திறனும் அறிவும் இல்லை என்றே நினைக்க விரும்புகிறேன். இது கோஸ்வாமி போன்றவர்கள் மட்டுமே செய்தியாகும் நாடு. நீங்கள் இந்தக் கடிதத்தை உதாசீனப் படுத்தினாலும் நான் இதை மறுபடி வேறொருவருடன் பேசப் போவதில்லை.

நன்றி,

க

அன்புள்ள க,

உங்கள் உணர்ச்சிகளைப் புரிந்துகொள்கிறேன்.

இட ஒதுக்கீடு பற்றி நான் நெடுநாட்களாகத் திட்டவட்டமாக என் கருத்துக்களைத் தெரிவித்து வருகிறேன். என் கருத்துக்களை நான் நினைப்பதைவிடவும் தீவிரமாகச் சொன்னவை .’நூறுநாற்காலிகள்’,’வணங்கான்’ போன்ற கதைகள். அவற்றை நீங்கள் வாசிக்கலாம். இடஒதுக்கீட்டை இந்தியசமூகத்தின் மிகச்சிறந்த சமூகமுன்மாதிரி அமைப்பாக நினைக்கிறேன். இன்னும் இட ஒதுக்கீட்டுமுறை அமலாகாத உலகின் பலநாடுகள் இந்தியாவை அதில் முன்மாதிரியாகக் கொள்ளவேண்டுமென விரும்புகிறேன்.

இங்கே நான் சொல்லக்கூடியவை அவற்றுக்கு மேலேசென்று யோசிக்கவேண்டிய விஷயங்கள். ஒடுக்கப்பட்ட சாதிகளில் பிறந்த ஒருவர் வரலாற்றுணர்வும் நீதியுணர்வும் கொண்டிருந்தாரென்றால் பரிசீலிக்கவேண்டியவை. சுயநலத்தை மட்டுமே அவர் தன் நிலைப்பாடாகக் கொண்டிருந்தாரென்றால் இதை அவர் யோசிக்கவேண்டியதில்லை.

**சாதியமைப்பு பற்றி...**

இந்தியசமூகத்தின் சாதியமைப்பு என்பதை திராவிட இயக்கத்தவரின் மேலோட்டமான வெறுப்பரசியலினூடாக அன்றி அம்பேத்கார் முதல் டி.டி.கோஸாம்பி வரையிலான பேரறிஞர்களின் சமநிலை கொண்ட, விரிவான வரலாற்றாய்வுநோக்கினூடாக அணுகக்கூடிய ஒருவரை உத்தேசித்தே இதை எழுதுகிறேன்.

இந்திய சமூகம் சாதிச்சமூகமாக உருவானதை யாரோ சிலர் செய்த சதிவேலை என்று அணுகுவது முதிர்ச்சியான வரலாற்றுநோக்கல்ல. வரலாற்றில் ஒரு சமூக அமைப்பு உருவாகி வருவதென்பது மிகச்சிக்கலான பல்வேறு காரணிகளின் பின்னல் வழியாகத்தான். அது எவராலும் திட்டமிட்டு உருவாக்கப்படுவது அல்ல. ஒரு நிலப்பகுதியின் இயற்கைச்சூழல், அங்கே உருவாகிவந்த மானுட இனங்களின் இயல்பு ஆகியவற்றுடன் சம்பந்தப்பட்டது அது.

மானுடநாகரீகம் உருவானவரலாற்றைப் பார்த்தால் இரண்டு வலுவான போக்குகள் நம் கண்ணுக்குப்படும். ஒன்று, ஈவிரக்கமற்ற வாழ்க்கைப்போட்டி. வலுவானவர்கள் எளியவர்களை வென்று அடக்கி சுரண்டி சமூகங்களை, அரசுகளை, சாம்ராஜ்யங்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். நாம் பண்பாடு என்று சொல்லக்கூடிய அனைத்துமே அந்தக் குரூரமான சுரண்டலின் விளைவாக உருவானவைதான்

இன்னொரு போக்கும் வரலாற்றில் உள்ளது. இந்த அடக்குமுறையும் சுரண்டலும் நிகழ்ந்துகொண்டிருந்தபோதே மனிதன் மெல்ல மெல்ல தன்னுடைய அறவுணர்வை உருவாக்கி வளர்த்துக்கொண்டே வந்தான். நீதி என்றும் அன்பு என்றும் சமத்துவம் என்றும் பல விழுமியங்களை உருவாக்கிக்கொண்டிருந்தான். படிப்படியாக அவற்றை மானுட மனங்களில் நிறுவிக்கொண்டே இருந்தான்.

ஒட்டுமொத்த வரலாற்றையும் இந்த இரு போக்குகளின் முரண்பாடாகப் புரிந்துகொள்ளலாம். ஆதிக்கத்துக்கும் நீதியுணர்வுக்கும் இடையேயான போராட்டம், அநீதிக்கும் நீதிக்கும் இடையேயான போராட்டம் என்று நாம் சாதாரணமாக இதைச் சொல்கிறோம்.

பொதுப்பேச்சில் அநீதி பெருத்துவிட்டது , கலிகாலம் என்றெல்லாம் சொல்லிக்கேட்டிருப்போம். ஆனால் வரலாற்றைப்பார்த்தால் படிப்படியாக நீதியின் தரப்பு வென்று மேலெழுந்து வருவதைத்தான் காண்கிறோம். வரலாற்றில் எப்போதும் இன்றுள்ளதுபோல நீதியும் சமத்துவமும் கருணையும் இருந்ததில்லை. நாளை இதைவிட மேலான சமூகமே உருவாகும்.

மனிதனை மனிதன் அடிமையாக்கிச் சுரண்டுவதற்கு மிக விரிவான வரலாற்றுப்பின்னணியும் காரணங்களுமுண்டு. நான் முடிந்தவரை எளிமையாகச் சொல்கிறேன். மனிதர்கள் வாழ்வதற்கான கடும்போட்டியில் குழுக்களாக ஆனார்கள். ஒவ்வொரு குழுவும் இன்னொரு குழுவைவிட வலிமைபெற்றாகவேண்டுமென்ற கட்டாயம் இருந்தது. அதற்கான வழி என்பது மேலும்மேலும் அதிகமான செல்வத்தை சேர்த்துக்கொள்ளுதல்.

செல்வத்தைச் சேர்த்துக்கொள்வதற்கு எளிய வழி வலிமைகுறைந்தவர்களைக் கொள்ளையடித்தல். சமீபகாலம்வரைக்கும்கூட பழங்குடிகளின் இயல்பு இதுவாகவே இருந்தது. சங்ககால இலக்கியம் முழுக்க நாம் காண்பது இந்தக் கொள்ளையைத்தான். ஆகோள்பூசல் என்று இதை சங்கப்பாடல்கள் சொல்கின்றன. எந்தக் குழு அல்லது குடி இப்படி மூர்க்கமாகக் கொள்ளையடித்து வலிமை பெற்றதோ அதுவே நீடித்தது. பிற குடிகள் அழிந்தன. புறநானூறை மட்டும் வைத்து அப்படி அழிக்கப்பட்ட குடிகளின் ஒரு பட்டியலைப் போட்டுவிடலாம். நாமெல்லாருமே அந்த சமரில் வென்றவர்களின் வாரிசுகள்தான்.

விவசாயமும் தொழிலும் ஆரம்பித்தபோது கொள்ளையை விட லாபகரமானது அடிமைகளை வைத்துக்கொள்ளுதல் என்ற புரிதல் உருவானது. அடிமைகளின் உழைப்பில் இருந்து பெறப்பட்ட உபரி செல்வம்தான் அரசாங்கங்களை உருவாக்கியது. செலவம் அதிகரிக்க அதிகரிக்க அரசுகள் பேரரசுகளாக மாறின.

அடிமைமுறை உலகமெங்கும் இரு வகையில் இருந்துள்ளது. போரில் பிடிக்கப்பட்டு அடிமைகளாக்கப்பட்ட அன்னியர் ஒருவகை.தங்கள் சமூகத்திலேயே ஒரு சாராரை அடிமைகளாக ஆக்கி அவர்களை சுரண்டுவது இன்னொரு வகை. இரண்டுமே உலகிலுள்ள எல்லா சமூகங்களிலும் இவ்விருமுறைகளும் இருந்துள்ளன. நாம் காணும் எல்லா நாகரீகங்களும் அரசாங்கங்களும் இந்த சுரண்டலின் விளைவாக உருவாகி வந்தவைதான்.

ஒரு மக்கள் கூட்டத்தை அடிமைகளாக ஆக்கி நிறுத்துவதற்கு பிறப்படிப்படையில் அவர்களை பகுத்து இழிசினராக முத்திரைகுத்தி விலக்குவது வெற்றிகரமான வழிமுறை. உலகின் எல்லா சமூகங்களிலும் சாதிக்கு நிகரான பிறப்புசார்ந்த அடிமைமுறை இருந்துள்ளது. ஏதேனும் ஒருவகையில் தீண்டாமை நிலவாத சமூகங்களே இல்லை.

தமிழ்ச்சமூகத்தை எடுத்துப்பார்த்தால் சங்ககாலத்திலேயே இழிசினர் என்ற சொல் புழக்கத்திற்கு வந்துவிட்டது. புறநாநூற்றில் இழிசினர் என்றும் புலையர் என்றும் மக்களைச் சுட்டும் வரிகளை காணலாம்.தொழும்பர் என்றும் உரிமைமாக்கள் என்றும் அடிமைகள் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம்.

இந்தவகையான சுரண்டலுடன் நீதியுணர்ச்சி மோதிக்கொண்டே இருந்திருக்கிறது. நீதியுணர்ச்சி வளரவளர நாம் நம்முடைய சமூக அமைப்பிலுள்ள அநீதியை நாமே காண ஆரம்பித்தோம். மெல்ல மெல்ல அதிலிருந்து விடுபட்டு இன்னும் மேலான சமூக அமைப்புகளை உருவாக்க ஆரம்பித்தோம்.

சாதிமுறை என்பது மனிதர்களைக் கீழ் கீழாக அடுக்கி உருவாக்கப்பட்டது. நம் சமூகம் இப்படி நூற்றாண்டுகளாக உருவாகி வந்துகொண்டே இருக்கிறது. மையச்சமூகத்தின் ஆதிக்கத்தின் கீழே எந்தச்சாதி கடைசியாக வருகிறதோ அதுவே தாழ்ந்த சாதி. அதன் உழைப்பை மேலே உள்ள சாதிகள் உறிஞ்சி மேலே உள்ள அரசுக்குக் கொடுக்கின்றன. அவ்வாறுதான் தமிழகத்தில் அரசுகளும் பேரரசுகளும் உருவாயின. இதைத்தவிர ஏதேனும் காரணத்தால் நிலத்தை இழந்து தோற்கடிக்கப்பட்ட சாதி காலப்போக்கில் அடிமைச்சாதியாக ஆவதும் உண்டு.

இன்றைய நம் நீதியுணர்ச்சியின்மீது நின்றுகொண்டு பார்த்தால் மனிதனை மனிதன் சுரண்டி ஒடுக்கும் முறை நம்மை மனம்கொதிக்க வைக்கும். அது இயல்பு. ஆனால் அதன் மறுபக்கமும் நம் பார்வைக்குப் படவேண்டும். அத்தகைய சுரண்டல் இருந்தமையால்தான் பேரரசுகள் உருவாயின. பேரரசுகளிடம் இருந்த பெரும் நிதிவசதியால்தான் பெரும் ஏரிகளும் கால்வாய்களும் வெட்டப்பட்டன. ஏராளமான நிலம் விவசாயத்துக்குக் கொண்டுவரப்பட்டது. பெரும் மரக்கலங்கள் கட்டப்பட்டு உலகளாவிய வணிகம் உருவானது. கட்டுமானம் மருத்துவம் போன்ற அறிவியல்துறைகள் வளர்ந்தன. கலையிலக்கியமும் சிந்தனையும் வளர்ந்தன. இவையெல்லாமே

அடிமைச்சமூகங்களின் குருதியை உண்டு வளர்ந்தவை. ஆம், அப்படித்தான் வரலாறு செயல்பட்டுக்கொண்டிருந்தது.

அடிமைமுறை இல்லாமலானதற்குப் பல காரணங்கள். அறவுணர்வின் வளர்ச்சி ஒரு முக்கியமான காரணம். இயந்திரங்கள் வந்தது இன்னொரு காரணம். வேறுவகையில் பொருளியல்சுரண்டலை நிகழ்த்தும் சாத்தியங்களை முதலாளித்துவம் கண்டடைந்தது பிறிதொரு காரணம். அடிமைமுறை, அடிமைச்சமூகங்கள் தேவையில்லாமலான ஒரு காலகட்டத்தில் நின்று நாம் பேசுகிறோம்.

ஆனால் சமூகங்களை அடிமைகளாக ஆக்கிய அந்த மனநிலையும் அதை உருவாக்கிய கருத்தியலும் அவ்வளவு சீக்கிரம் போய்விடாது. அவை நூற்றாண்டுகளாக நம் சமூகமனதில் நீடித்தவை. நமக்கு சிறுவயதிலேயே கற்பிக்கப்பட்டவை. அவை தொடர்ச்சியான சமூகக்கல்வி மூலம், நீடித்த சமூக மாறுதல்மூலம்தான் அகலமுடியும். உலகமெங்கும் இதற்கிணையான பிறப்படையாளம் சார்ந்த உயர்வுதாழ்வுமனப்பான்மைகள், ஆசாரங்கள் ஏதேனும் வடிவில் தொடரத்தான் செய்கின்றன.

இவ்வளவு நீளமாக நான் சொல்லியிருப்பது சில ஒற்றைவரிகளை நிலைநாட்டும்பொருட்டுதான். சமநிலை கொண்ட ஒரு நவீன மனிதர், ஒருபோதும் தான் வாழும் சமூகத்தின் அமைப்புக்குத் தன் சமூகத்தில் ஒரு சாராரைக் குற்றம்சாட்ட மாட்டார். அச்சமூக அமைப்பு ஒரு வரலாற்று நிகழ்வு என எடுத்துக்கொள்வதே அவர் செய்யக்கூடியது.

அக்குற்றச்சாட்டை நாம் ஒருவர் மீது சுமத்தும்போது நமக்கு நியாய உணர்வு இருந்தால் நாமும் குற்றவாளியே என உணர்வோம். இந்தியாவில் சாதிக்கொடுமையை செய்யாத எந்தச் சாதியும் இல்லை. ஐயமிருந்தால் உங்கள் சொந்த வீட்டை கவனியுங்கள். நீங்கள் எந்தச் சாதியாக இருந்தாலும் சரி, உங்களுக்குக் கீழே உள்ள சாதியை உங்கள் பெற்றோர் எப்படி நடத்தினார்கள், நடத்துகிறார்கள் என்று பாருங்கள். உங்கள் நீதியுணர்வு கூசிச்சுருங்கும்

பொதுவாக நாம் நமக்கு மேலிருக்கும் சாதியினர் நமக்கிழைத்த அநீதிகளை மட்டுமே நினைவுகூர்கிறோம். கோபம் கொள்கிறோம். நாமும் நம் முன்னோரும் இன்றும் இழைத்துவரும் கொடுமைகளை வசதியாக மறந்துவிடுகிறோம். தமிழக பிற்பட்ட சாதியினரிடம் இருக்கும் இந்த

இரட்டைநிலை துணுக்குறச்செய்வது. தலித்துக்களை வெறுத்து ஒடுக்கி அவமதித்து அதை நியாயப்படுத்திக்கொண்டே அவர்கள் பிராமணர்களை சாதியவாதிகள் என முத்திரை குத்துவார்கள்.

நான் உயர்சாதியில் பிறந்தவன், ஆனால் நீங்கள் சொல்லும் அதே சாதிய அவமதிப்பை நானும் உணர்ந்திருக்கிறேன். ஒரு பிராமணர் சாப்பிடும் தட்டைத் தொட்டுவிட்டேன் என்பதற்காக. இந்தியாவின் பெரும்பாலான சாதியினர் உயர்சாதியினரிடம் இழிவை அனுபவித்திருப்பார்கள். கீழே உள்ள சாதியை விலக்கியும் வைத்திருப்பார்கள்.

மலைக்கிராமங்களில் செல்லும்போது பழங்குடிகள் சொல்லும் சாதிக்கொடுமைகளைக் கேட்க நேரும். பெரும்பாலான கொடுமைகள் தமிழகத்தின் தலித் சாதியினரால் செய்யப்படுபவை. தீண்டாமை உட்பட. தலித் சாதியினரிலேயே சக்கிலியர் போன்ற சாதியினர் இன்றும் அவர்களுக்கு மேலே உள்ள சாதியினரிடமிருந்து தீண்டாமைக்கொடுமையை அனுபவிக்கிறார்கள். இது நாம் அனைவருமே பொதுவாகப் பங்கிட்டுக்கொள்ளும் கடந்தகால நாற்றம். நாம் ஒன்றாக வெளிவந்தாகவேண்டிய இருள்.

நாம் நம் இருண்ட இறந்தகால மனநிலைகளில் இருந்து சுயபரிசோதனையால் நமது சுய முயற்சியால் மெல்ல மெல்ல வெளிவந்தாகவேண்டியிருக்கிறது. உயர்சாதியினர் தங்களை ஒடுக்குகிறார்கள் என்று புகார் சொன்ன ஈழவர்களிடம் ‘நாம் முதலில் தலித்துக்களை நம்மவர்களாக நினைப்போம், அப்போது நம் தார்மீகநிலை மேலே செல்லும், நம் சமத்துவம் நம்மைத் தேடிவரும்’ என்று சொன்ன நாராயணகுருவின் வழிமுறையையே நான் முன்னுதாரணமானதாக முன்வைப்பேன்.நான் அந்த குருமரபைச் சேர்ந்தவன்.

நாம் வெளியே வந்ததைப்போல அனைவரும் வெளிவந்திருக்கவேண்டுமென்பதில்லை. ஒருவர் நேற்றுவரை இருந்த சமூகமனநிலையை இன்றும் கொண்டிருந்தால் அவர் பண்பாட்டுப்பயிற்சி அற்ற பின்தங்கிய மனமுடையவர் என்றே பொருள். அவர் தன்னுடைய பின் தங்கிய கருத்துநிலையைப் பொதுவில் வைப்பாரென்றால் அதைக் கண்டிக்கவேண்டும் என்பது நாகரீகமுடையவரின் கடமை. அவரிடம் நெருக்கமிருந்தால் அவருக்கு உண்மையைக் கற்பிக்க முயலவேண்டும். அது சாத்தியமில்லை என்றால் அவரை முழுமையாக உதாசீனம் செய்துவிடலாம்.

அதில் நாம் புண்படுவதென்பது நம்முடைய பண்பாட்டுப்புரிதலும் வரலாற்றுப்புரிதலும் குறைவு என்பதாகவே பொருள்படும். விஷயமறிந்த ஒருவர் விஷயமறியாமல் உளறும் ஒருவரைக்கண்டு ஏன் புண்படவேண்டும்?

## இட ஒதுக்கீடு பற்றி

இடஒதுக்கீடுக்காக திராவிட இயக்கத்துக்கு நன்றி சொல்வதைப்போல நகைச்சுவை ஏதுமில்லை. இட ஒதுக்கீட்டில் திராவிட இயக்கத்தினரின் பங்களிப்பு என ஏதாவது இருக்குமென்றால் அது தமிழகத்தில் பிற்பட்ட சாதியினரின் இட ஒதுக்கீடுக்காகக் குரல் கொடுத்தது மட்டுமே. தலித்துக்களுக்கு இட ஒதுக்கீடு அளிக்கப்பட்டபோது 'தன் மக்களுக்கு' ஒன்றும் கிடைக்கவில்லை என்று புலம்பியவர் அதன் தலைவர் ஈ.வே.ரா

இடஒதுக்கீடு என்பது உண்மையில் இந்தியாவைப் பிரித்தாள்வதற்காக பிரிட்டிஷார் கொண்டுவந்த ஒன்று. ஒடுக்கப்பட்டவர்களுக்காக அது கொண்டுவரப்படவில்லை. பிரிட்டிஷாரை ஆதரித்த சீக்கியர், இஸ்லாமியர் முதலிய முன்னேறியவர்களுக்க்காகவே கொண்டுவரப்பட்டது.

பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தில் ஒடுக்கப்பட்டவர்களுக்கோ தலித் மக்களுக்கோ அவ்வரசு எந்த நன்மையையும் செய்யவில்லை. அவர்களுக்காக எந்த சீர்திருத்தத்தையும் கொண்டுவரவில்லை. பிரிட்டிஷ் ஆதிக்கமென்பது நேரடியான உயர்சாதி ஆதிக்கமே. சொல்லப்போனால் பிரிட்டிஷ் ஆதிக்க காலகட்டம் அளவுக்கு உயர்சாதியினர் முழுமையான அதிகாரத்துடன் விளங்கிய எந்த காலகட்டமும் இந்திய வரலாற்றில் இல்லை.

பிரிட்டிஷார் வருவது வரை இந்தியப்பெருநிலத்தில் எல்லா சாதிகளும் ஆதிக்கத்துக்கான போராட்டங்களில் ஈடுபட்டிருந்தன. ஒரு சாதி ராணுவபலம் கொண்டுவிட்டால் அது ஆதிக்கத்தை உருவாக்க முடியுமென்ற நிலை இருந்தது. இந்திய வரலாற்றில் மாடுமேய்த்த யாதவர்களும் நாயக்கர்களும் பெரிய சக்தியாக எழுந்து ஆதிக்கத்தை உருவாக்கியிருக்கிறார்கள். பல சிறிய சாதிகள் கூட அப்படி மேலெழுந்து வந்திருக்கின்றன

பிரிட்டிஷார் இந்தியாவில் இருந்த அத்தனை ஆதிக்கசக்திகளையும் அப்படியே அங்கீகரித்தனர். அவர்களுக்கு பிரிட்டிஷ் மைய அரசின்

மகத்தான ராணுவ பலத்தைப் பின்பலமாக அளித்தார்கள். ஆகவே இந்தியாவில் எந்த ஒரு சாதியும் புதியதாக மேலெழுந்து வரமுடியாமலாயிற்று. பல சிறு ஆதிக்கங்கள் முழுமையாக அழிக்கப்பட்டன. இந்தியாவில் நிலத்தின் மீது சமூகத்தின் எல்லா சாதியினருக்கும் இருந்த கூட்டான உரிமை பறிக்கப்பட்டு நிலம் முழுக்கமுழுக்க உயர்சாதியினருக்கு உரிமையாக்கப்பட்டது

அதன்விளைவாக இந்தியாவின் ஒடுக்கப்பட்ட தாழ்த்தப்பட்ட மக்கள் முழுமையாகவே உயர்சாதியினரான சிற்றரசர்கள், ஜமீந்தார்கள் மற்றும் கிராமத்தலைவர்களின் அடிமைகளாக விடப்பட்டனர். அந்த ஆதிக்கவர்க்கத்தினர் தனக்கு உரிய வரியைக் கொடுத்தால் மட்டும் போதும் என பிரிட்டிஷ் அரசு நினைத்தது. அந்த வரியை ஏற்றிக்கொண்டே சென்றது. அதன் மூலம் இந்தியாவின் மொத்த விளைச்சலையும் அள்ளிக்கொண்டு சென்றது.

விளைவாக உலகவரலாற்றிலேயே பெரிய பஞ்சங்கள் உருவாயின அந்தப் பெரும் பஞ்சங்களில் இந்திய மக்கள்தொகையில் நாலில் ஒருபங்கினர் செத்தழிந்தார்கள். கோடிக்கணக்கானவர் நாடுவிட்டு ஓடினார்கள். அவர்கள் அனைவருமே ஒடுக்கப்பட்ட சாதியினர். தொண்ணூறு சதவீதம்பேர் தலித்துக்கள். இந்திய வரலாற்றில் தலித்துக்களுக்கு நிகழ்ந்த மாபெரும் கொடுமை இந்தப் பஞ்சங்களே.

தலித்துக்களுக்கான இட ஒதுக்கீடு பிரிட்டிஷாரால் ஒரு தந்திரோபாயமாகவே அறிவிக்கப்பட்டது. அவர்களை இந்திய சமூகத்தின் மைய ஓட்டத்தில் இருந்து பிரித்துத் தங்களுக்கான ஆதரவாளர்களாக ஆக்க முடியும் என்பதற்காக. தலித்துக்களுக்கு அளிக்கப்பட்ட ஒதுக்கீடு அவர்களை இந்திய சமூகத்தில் இருந்து பிரித்துத் தனியாக இருக்கும்படியானதாக அமைய பிரிட்டிஷார் முயன்றார்கள்.

எப்படிக் கிடைத்தாலும் எல்லா சலுகைகளும் தங்கள் சமூகத்துக்குத் தேவை என்ற நிலைப்பாட்டில் அம்பேத்கார் இருந்தார். அதற்காக அதி தீவிரமாகப் போராடினார். ஆனால் இட ஒதுக்கீடு தலித்துக்களுக்கு இந்து சமூகத்தின் அங்கத்தினர் என்ற நிலையிலேயே அளிக்கப்படலாம் என்றும் சலுகைகள் மூலம் தலித்துக்கள் இந்திய சமூகத்தில் இருந்து பிரிக்கப்பட்டால் அது அவர்களுக்கு மேலும் எதிர்விளைவையே உருவாக்கும் என காந்தி நினைத்தார். இது அவர்களிடையே நிகழ்ந்த முரண்பாடு.

ஏனென்றால் காந்திக்குத் தெரியும், மேலும் சில ஆண்டுகளில் இந்தியா சுதந்திரம் பெறும் என்று. பிரிட்டிஷார் அளித்த சலுகைகளை உயர்சாதியினர் ரத்துசெய்தால் வலிமையற்ற சிறுபான்மையினரான தலித்துக்கள் எதுவுமே செய்யமுடியாதென்று அவர் அறிந்திருந்தார். அச்சலுகைகளை இந்தியாவின் உயர்சாதியினர் மனமாற்றம் அடைந்து தலித்துக்களுக்கு அளித்துப் பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டுமென சொன்னார். அவ்வாறு இந்துக்களான இந்தியர் அளிக்கும் சலுகைகளே தலித்துக்களுக்கு நீடிக்கும் என்று எண்ணினார்

இந்தியா சுதந்திரம் பெற்றபோது தன்னுடன் முரண்பட்டு அரசியலில் தோற்று ஒதுங்கி இருந்த அம்பேத்காரை அழைத்து சட்டஅமைச்சராக்கி அவர் கையாலேயே இட ஒதுக்கீட்டைக் கொண்டுவர வழியமைத்தவர் காந்திதான். அன்று அதற்கு உயர்சாதியினரின் எதிர்ப்பு இருந்தது. அதை ஒன்றுமில்லாமலாக்கியது காந்தியின் அபாரமான மக்கள்செல்வாக்கு. பழங்குடியினருக்கான இட ஒதுக்கீட்டுக்காகக் குரல்கொடுத்தவர்கள் காந்தியவாதிகள்தான்.

ஆகவே இட ஒதுக்கீடு என்பதற்காக எவருக்காவது நன்றி சொல்லவேண்டும் என்றால் அது காந்திக்கும் அம்பேத்காருக்கும் மட்டுமே.காந்தியின் குரலாக ஒலித்து, தேர்தலில் வென்று இட ஒதுக்கீட்டுக்கு மக்களாதரவைப் பெற்றுத்தந்த நேருவுக்கு அடுத்தபடியாக நன்றி சொல்லவேண்டும்..

இட ஒதுக்கீடு வந்தபின் ஒவ்வொரு சாதியும் தனக்குரிய பங்குக்காக முண்டியடித்தது. சண்டை போட்டது. இன்று இப்படி சண்டை போட்டு தங்கள் சாதிக்கு சில சலுகைகளைப் பெற்றுத்தந்தவர்களை இடஒதுக்கீட்டின் தந்தைகள் என நினைக்கும் வழக்கம் இந்தியா முழுக்க எல்லா சாதியினரிடமும் உள்ளது. அவர்களுக்கு காந்தியும் அம்பேத்காரும் ஒரு பொருட்டல்ல.

**ஜனநாயகம் பற்றி…**

உங்கள் கடிதத்தின் தன்னிரக்கத்தை விலக்கி வைத்து அதன் உள்ளடக்கத்தை நீங்களே இன்னொருவாராக நின்று வாசித்துப்பாருங்கள். உங்களுக்கே அதிர்ச்சியாக இருக்கும். இந்தியாவில் இன்று இட ஒதுக்கீட்டை

ஆதரிக்கும் சாதிகள்தான் மிகப்பெரும்பான்மை. மிகமிகச்சிறுபான்மையினரே இட ஒதுக்கீட்டால் லாபம் அற்ற உயர்சாதியினர். கண்டிப்பாக இட ஒதுக்கீடு அவர்களுக்கு இழப்பே. அவர்களிலும் உங்களைப்போலவே ஏழைகள் ஏராளமானவர்கள் இருக்கிறார்கள்.

அவர்களில் கணிசமானவர்கள் தங்கள் மூதாதையர் செய்த ஒடுக்குமுறைக்கு பிராயச்சித்தமாக இட ஒதுக்கீடு இன்று தேவைதான் என்று ஏற்றுக்கொண்டவர்கள்தான். இந்தியாவில் இட ஒதுக்கீட்டுக்காகப் போராடிய பலர் உயர்சாதியினர். இட ஒதுக்கீட்டுக்காகப் போராடுபவர்களுக்கு வாக்களிப்பவர்களும் அவர்களே.

ஆனால் அவர்களில் ஒரு சாரார் இடஒதுக்கீட்டில் தாங்களுக்கு இழப்பு ஏற்பட்டிருப்பதற்காக வருந்தலாம். இட ஒதுக்கீடு தவறு என எண்ணலாம். அதில் மிகச்சிலர் அதைச் சொல்லவும் செய்யலாம். ஜனநாயக முறைப்படி தங்கள் கருத்தைச் சொல்லவும் அதைபரப்பவும் அவர்களுக்கு எல்லா உரிமையும் உள்ளது. இந்தியாவின் மக்கள்தொகையில் பெரும்பான்மையினர் அவர்கள் சொல்வதை ஏற்றுக்கொண்டால் அவர்கள் ஆட்சியைக் கைப்பற்றி இட ஒதுக்கீட்டை ரத்தும் செய்யலாம். அதுதானே ஜனநாயகம் என்பது?

ஆனால் இடஒதுக்கீட்டின் பலனைப்பெற்றுவரும் சாதியைச் சேர்ந்த நீங்கள், மிகப்பெரும்பான்மைத் தரப்பைச் சேர்ந்த நீங்கள், அப்படி ஒரு வாதத்தைச் சொல்லவோ , அந்தரங்கமாக உணரவோ கூட அவர்களுக்கு அனுமதி இல்லை என்கிறீர்கள். வரலாற்றுணர்வில்லாமலோ அல்லது வேறு காரணத்தாலோ அப்படிச் சொன்ன ஒரு பெண்ணை பாலியல் ரீதியாக வசைபாடுவதும் அவமதிப்பதும் நியாயமே என நினைக்கிறீர்கள் என்றால் அது எந்தவகை ஜனநாயகம்?

சில வருடங்களுக்கு முன் இடஒதுக்கீட்டுக்கு எதிராக வாதாடினார் என்பதற்காக ஒரு வழக்கறிஞர் கொலைநோக்குடன் தாக்கப்பட்டார். தமிழகத்தின் பெரும்பான்மைச்சாதியினரான அறிவுஜீவிகள் அதை ஆதரித்தனர். நான் அவ்வழக்கறிஞரின் தரப்பை ஏற்றுக்கொள்பவனல்ல. ஆனால் அவர் தாக்கப்பட்டதைக் கொடூரமான ஜனநாயகக் கொலையாகவே நினைக்கிறேன். தங்களுக்குத் தேவையானபோது பேசப்படுவதல்ல

ஜனநாயக உரிமை, தன் எதிரிக்காகவும் அதே ஜனநாயக உரிமையை அளிக்கும்போதே நாம் உண்மையான ஜனநாயகவாதிகளாக ஆகிறோம்.

நீங்கள் ஜனநாயகத்தில் எளிய நம்பிக்கையாவது கொண்டிருந்தால் ஒருவர் இட ஒதுக்கீட்டுக்கு எதிராகப்பேசினால் அவரிடம் வாதிட, அவரை உங்கள் தரப்புக்கு மாற்ற மட்டுமே முயல்வீர்கள். அவர் அப்படி நினைப்பதே தவறு என்றும் ,அவரது எண்ணம் உடனடியாக அடக்கப்படவேண்டும் என்றும், அதற்கு வன்முறை அவதூறு எல்லாம் ஆயுதமாக்கப்படலாமென்றும் நினைத்தால் நீங்கள் என்ன நியாயத்தைப்பேசிக்கொண்டிருக்கிறீர்கள்?

நம் முன் இரு வழிகள் உள்ளன. முன்னரே சொன்ன இரு போக்குகளில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பது. ஒன்று அடக்குமுறை மற்றும் அதிகாரத்தின் வழி. நேற்று ஆதிக்கசாதி ராணுவவல்லமையால் உங்களை அடக்கிச் சுரண்டியது. பதிலுக்கு இன்று எண்ணிக்கைபலத்தால் ஜனநாயக அதிகாரத்தை அடைந்து நீங்கள் அவர்களை அடக்கி சுரண்டவேண்டும் என நினைக்கலாம். அவர்கள் கொஞ்சம் எதிர்ப்புத் தெரிவித்தால்கூட அவர்களை ஒடுக்கவேண்டுமென ஆசைப்படலாம். அதை நீங்கள் சொல்கிறீர்கள் என்றால் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை.

இரண்டாவது போக்கு என்பது அறத்தின் வழி. அதை நீங்கள் நம்பினால் இன்று நீங்கள் கேட்கவேண்டியது ஆதிக்கத்தை அல்ல சமத்துவத்தைத்தான். அது உங்கள் உரிமைக்காக மட்டுமல்ல உங்களை நேற்று ஒடுக்கிய சாதிகளின் உரிமைகளுக்காகவும் குரல்கொடுக்கும் மனநிலையையே உங்களிடம் உருவாக்கும். அவர்களின் குரலையும் அந்த மனம் கவனிக்கும். அவர்களையும் புரிந்துகொள்ள முயலும். அவர்களிடம் உங்கள் வரலாற்று நியாயங்களைச் சொல்லி புரியவைக்க, அவர்களை வென்று அழைத்துக்கொண்டு இன்னும் மேலான ஓர் அறம் திகழும் உலகை நோக்கிச் செல்லவே முயலும்.

நம்பமுடியாத ஒடுக்குமுறைச்சூழலில் பிறந்து வளர்ந்தும்கூட அப்படிப்பட்ட மனம் கொண்ட இலட்சியவாதிகளான பலரை நான் இன்று அறிவேன். அவர்கள்தான் என் நம்பிக்கை. அவர்கள் அம்பேத்காரைத் தலைவராகக் கொண்டவர்கள். எந்த திராவிட இயக்கத்தலைவரும் அந்த ஜனநாயக உணர்வைக்கொண்டவர் அல்ல.

ஆகவே கெ, தயவுசெய்து வெறுப்பின் மொழியில் பேசும் குரல்களில் இருந்து வெளியே வாருங்கள். ஒடுக்கப்பட்டவர்கள் விடுதலை பெறவேண்டியது புதிய ஒடுக்கப்பட்டோரை உருவாக்குவதற்காக அல்ல.. ஒடுக்கப்பட்டவர்களே இல்லாத சமூகத்தை உருவாக்குவதற்காகத்தான். அது அகிம்சையால், புரிந்துகொள்ளுதலால் மட்டுமே முடியும்.

நீங்களும் திராவிட இயக்கத்தில் இருந்து கொஞ்சம் நகர்ந்து அம்பேத்கார் அருகே வந்தால் அந்த நியாயத்தைப் புரிந்துகொள்ள முடியும். நேரடியாக அம்பேத்காரின் நூல்களைப் படியுங்கள். நம் காலகட்டத்து போதிசத்வனின் பெருங்கருணை உங்களையும் ஆட்கொள்ளட்டும்

# (7) சாதி,சமூகம்-கடிதம்

அன்பின் ஜெ..

மிக நீண்ட நாட்களுக்குப் பிறகு மீண்டும் இந்தப் பொருள் பற்றி எழுதியிருக்கிறீர்கள்.. உங்கள் தரப்பின் எல்லாத் திசைகளையும் அணைத்து எழுதியிருக்கிறீர்கள்.

இத் தலைப்பில், லௌகீக இயங்குதளத்தில் சில விஷயங்கள் சொல்ல இருக்கின்றன எனக்கு.

நிச்சயமாக, "க" அவர்களின் தன்னிரக்கம் தவிர்க்கப் பட வேண்டியது. அதே சமயம், அவமதிப்பை எதிர்கொள்வது ஒரு அவசியமான skill தான்.

உதாரணமாக, இந்த வாரம், சென்னையில் சதுர்மாஸ்ய விரதம் கொண்டு தங்கியிருக்கும் ஸ்ருங்கேரி ஸ்வாமிகளைப் பார்க்க என் மகனைக் கூட்டிக் கொண்டு சென்றேன். அதற்கு சில வாரங்கள் முன்னால், அவர் "ஸத் சிஷ்யன்" என்னும் தலைப்பில், மிக எளிதான மொழியில், மிக அருமையாகப் பேசியிருந்தார். எங்கள் மகனோடு உரையாடலில், இது பற்றிப் பேசியிருந்தோம்.

பின், இந்த வாரம், குருவுக்கு பாத பூஜை செய்யலாம் என்று அவனை அழைத்துச் சென்றோம். எல்லாக் குழந்தைகள் போல அவனுக்கும் பல கேள்விகள் இருந்தன. அவன் மனுஸ்ம்ருதியைப் பற்றிச் சொல்லிவிட்டு, ஏன் "பாத பூஜை" செய்கிறோம் என்று கேட்டான்.

அவனுக்கு மனுஸ்மிருதி ஒரு காலாவதியான தத்துவம் என்று விளக்கி விட்டு, பாத பூஜை என்பது, குருவின் முன் தன் அனைத்து அகங்காரங்களையும் நீக்கி விட்டு, முழுமையாக அவர் முன் தன்னை அர்ப்பணிப்பது என்று சொல்லிவிட்டு, ஜென் கதையான, overflowing tea cup கதையையும் சொல்லி அழைத்துச் சென்றோம்.

சங்கராச்சாரியரின் சன்னிதியில் சட்டை அணிந்து செல்ல அனுமதில்லை. இருவரும் அங்க வஸ்திரம் அணிந்திருந்தோம். மகனைப் பார்வையிட்ட அந்தப் பூசாரி, "உபநயனம் செய்ய வில்லையா.. பாத பூஜை செய்ய முடியாது" என்று சொலலி விட்டு என்னைப் பார்த்தார். என் அங்கவஸ்திரத்துக்குள் பூணூல் தெரியவில்லை போல. அதற்குள் பூஜை செய்ய உட்கார்ந்தாயிற்று.

என் அங்கவஸ்த்ரத்துக்குள் அவர் பூணூலைத் தேடிக் கொண்டிருப்பது போல் எனக்குள் மனவிஸ்கி (எவ்வளவு நாள் தான் பிராந்தியையே உபயோகிப்பது?)

மனதுக்குள்"நீ என்ன ஸாரே.. உங்க ஆச்சாரியார்.. அவங்க பாட்டன் பூட்டனுக்கே இந்த பித்துப் போனதில்லை.." என்று சிரித்துக் கொண்டேன். எல்லா (எனதும் சேர்த்து)உடலுக்குள்ளும் கொஞ்சம் மலம் இருக்கும் என்று சொன்ன தத்துவ ஞானி கமலஹாஸனை நினைத்துக் கொண்டேன். பாத பூஜை கொஞ்சம் மனம் குவியாமல்தான் நடந்தது.

'உபநயனம்" என்னும் சொல், அவனைச் சுருக்கி விட்டது. பூஜைக்காகத் தயாராக நின்ற அந்த சிறுவனின் மனதில் வருத்தம்தான்.

இதுதான் உண்மை நிலை. இதைச் சொன்னால், நீ, உன் தந்தை, உன் பாட்டனார் செய்யவில்லையா என்று கேட்பீர்கள். செய்தார்கள். அதற்கான, பிராயச்சித்தம் – என்னால் முடிந்தவரை, மனிதரைக் கீழோர் மேலோர் என்று நடத்தாமல் இருத்தல், சமூகத் தட்டின் கீழ் நிற்பவர்களுக்கு உதவி செய்தல் முதலியன செய்யலாம். (எங்கள் வீட்டில் தங்கி வேலை செய்யும் பெண்மணியின் தங்கை மகனுக்கு உதவி செய்யும் போதுதான் அவர்களின் ஜாதி பற்றி அறிய நேர்ந்தது. நீங்களும், நானும் மகிழும் உண்மைதான் அது.)

ஆனால், இப்படியெல்லாம் நடந்து கொண்டால், நாட்டில் சாதிபேதம் இருக்காது என்றெல்லாம் நினைத்துக் கொண்டு, வண்டியில் நம்ம்பி ஏறி உட்கார முடியாது. அது இருக்கும். இந்து மதத்தின் நிலைச்சக்திகளின் கர்ப்பக் கிருகத்தில் ஆலகால விஷமாக. சென்னை போன்ற பிராமணப் பெரும்பான்மை இருக்கும் நகரங்களில் மிக நாகரீகமாக. சிறு நகரங்களிலும், கிராமங்களிலும், பிராமணர்கள் அல்லாத ஜாதிகளில் மூர்க்கமாக.

சென்னை வந்த புதிதில், வாடகை வீடு பார்க்கச் செல்லும் போதெல்லாம், என் மனைவியை முன்னிறுத்துவேன். அவரிடம் சிரிக்கும் முகங்கள், என்னைப் பார்த்ததும் கொஞ்சம் சுருங்கும். "இந்த dog ஐப் பார்த்தால், நம்மாள் மாதிரி இல்லையே" என்ற ஒரு எச்சரிக்கைத் தொனி இருக்கும் பார்வையில். "நாங்க வெஜிடேரின்களுக்குத் தான் வாடகைக்கு விடறது" என்பார்கள்.. நல்ல பிள்ளை மாதிரி தலையாட்டுவோம். இல்லையெனில், மாம்பலம், மயிலையில் வீடு கிடைக்காது.

அதே போல், கோவையில் படிக்கும் போது, பல்கலையின் மிகச் சிறந்த மாணவிகளில் ஒருவரான என் மனைவி, அவர் முற்படுத்தப்பட்ட ஜாதி

என்னும் காரணத்தினால், அவர் ஒதுக்கப்பட்டார். அது கவுண்டர்கள் / நாயுடுக்களின் கோட்டை.

நடைமுறையில், இதை மிகச் சாதுர்யமாகத் தான் கையாள வேண்டும். இங்கு தத்துவங்கள், புரட்சி முழக்கங்கள் செல்லுபடியாகாது. 'அய்யோ, நான் ஏழை.. பிற்படுத்தப் பட்ட ஜாதி.. அல்லது முற்படுத்தப் பட்ட ஏழை' போன்ற ஒப்பாரிகள் வெறும் தோல்வியாளர்களுக்கே பொருந்தும்.

இங்கே செயல் திறன் தான், பாதிக்கப் பட்ட எல்லோருடைய ஆயுதமாக இருக்க வேண்டும். கூடவே தன்னம்பிக்கையும், தன் மேல் மரியாதையும். இதைத் தான் "க" அவர்களுக்குச் சொல்லுவேன்.

22 ஆண்டுகளில், பிராமணக் கம்பெனிகளில், பிராமணன் அல்லாதவனாக, பஞ்சாபிக் கம்பெனிகளில் மதராஸியாக, ஒரு ஒதுக்கப் பட்டவனாக, புலம்பி, அது கை கொடுக்காமல், ஒரு நல்லாசிரியனின் கைகளில் விழுந்து, "செயல் திறனே" எனது முகம் எனத் தெளிந்து, எழுந்து நிற்க 15 ஆண்டுகள் ஆயிற்று. எனது, அனுபவம், "க" அவர்களுக்கு அவர் லௌகீக வாழ்க்கையின் நேரத்தை மிச்சப் படுத்த உதவட்டும் என்னும் எண்ணத்தினால் இதை எழுதுகிறேன்.

அதே சமயத்தில், செயல் திறன் லௌகீக வெற்றியில் முடியும் போது, அதை மிகச் சாதுர்யமாகக் கையாளவும் தெரியவேண்டும். இதன் மிகச் சிறந்த உதாரணங்களாக பராக் ஒபாமாவையும், ரஹ்மானையும் சொல்லலாம்.

தனது வெற்றியை, அமெரிக்கா என்னும் மண் எல்லோருக்கும் தரும் சம வாய்ப்பு என்று, தம் நாட்டின் பெருமையாக ஒபாமா சொல்வது உலகின் மிக Smart ஆன statement. இன்றும் அமெரிக்காவில் சம உரிமை என்பது நடைமுறையில் உண்மை இல்லை. ஆனால், இச்சமமில்லா நிலையை உடைத்துக் கொண்டெழும் வீரிய வித்துக்களைத் தடை செய்ய முடியாத சட்ட உரிமைகள் இன்று உள்ளன. அவர் வெற்றி பெற்ற இரவை மீண்டும் நினைத்துக் கொள்கிறேன். உலகின் அடிமைத் தளைகள் அனைத்தையும் தகர்த்தெறிந்து, அவர்களின் பிரதிநிதி, லௌகீக உலகின் தலைநகரில் முடி சூடிக் கொண்ட அந்த வரலாற்றுக் கணத்தை எப்போது நினைத்துக் கொண்டாலும், மனம் நெகிழ்கிறது. அவர், பதவிப் பிரமாணம் எடுத்துக் கொள்ள நடந்து வரும் அந்தக் காட்சியைக் கண்ட போது, 'மண்ணுலகில், இன்று தேவன் இறங்கி வருகிறான்' என்ற பாடல் மனதில் ஒலித்தது.. (என்ன இருந்தாலும், நாம் சினிமாச் சமூகமல்லவா?). உள்ளூர் ஒப்பீட்டில் சொல்ல

வேண்டுமெனில், எம்.எஸ் அம்மா, ம்யூசிக் அகாடமியின் தலைவரானதைச் சொல்லலாம்.

அதே போல் ரஹ்மானின் அந்த ஆஸ்கர் பேச்சு. ‘எனக்குப் பல வழிகள் இருந்தன. நான் அன்பைத் தேர்ந்தெடுத்தேன். இங்கே வந்தேன்’. இந்த மூன்று வாக்கியங்கள், அவர் பெற்ற ஆஸ்கர் விருதை விட அதிக மதிப்புடையதாக நான் கருதுகிறேன். ஏனெனில், ஆஸ்கர் விருது பெற்று, உலகின் வெளிச்சத்தில் அவர் நிற்கும் அந்தக் கணம், அவர் ஒரு இசையமைப்பாளாராக மட்டும் மக்களால் பார்க்கப் பட மாட்டார். ஒரு இஸ்லாமியராகவும் அவர் பார்க்கப் படுவார். இஸ்லாமியர் என்றால் தீவிரவாதி என்று பார்க்கும் லௌகீக உலகுக்கு முன் ‘அன்பு’ என்னும் ஆயுதத்தை அவர் பிரயோகித்தார். முழுக்க உடையணிந்த ஜார்ஜ் மன்னருக்கு முன் அரையாடையில் சென்ற அந்த குஜராத்திக் கிழவரைப் போல். இசை வாழ்க்கையில் அவர் பாதையை மேலெடுத்துச் செல்ல அது நிச்சயம் ஒரு பாஸிட்டிவ் மூவ்.

அதே சமயம், செயல் திறன் இருந்தும் தோல்வியுறும் கணங்கள் உண்டு. அப்போது, ஜாதியும், மதமும் சுட்டிக் காட்டப் பட்டு, எள்ளல்கள் வரும். வலிக்கும். உடலில் அடிபட்டு, வலிக்கும் போது, அவ்வலியைச் சமாளிக்க, உடல், இன்பம் தோன்றும் ஹார்மோன்களை உற்பத்தி செய்து உதவும். அதே போல், மனம் வலிக்கும் போதெல்லாம், வலிந்து, அதை ஏற்றுக் கொண்டு சிரிக்கும் மனநிலையை உருவாக்கிக் கொள்ள வேண்டும். தோலைக் கொஞ்சம் தடியாக வைத்துக் கொள்ள வேண்டும்.

ஏனெனில், வரலாறு வெற்றி பெற்றவர்களால் உருவாக்கப் படுகிறது.

அன்புடன்

பாலா

அன்புள்ள பாலா,

நீங்கள் சொல்லும் ஒவ்வொன்றையும் நான் ஏற்றுக்கொள்கிறேன். ஒன்றைத்தவிர.

நீங்கள் ஏன் சிருங்கேரி சங்கராச்சாரியாரிடமோ அல்லது காஞ்சி சங்கராச்சாரியாரிடமோ செல்ல வேண்டும்? அவர்கள் ஸ்மார்த்த பிராமணர்களின் மடாதிபதிகள். அவர்களுக்கு அவர்களின் மடம் சார்ந்த ,

சாதி சார்ந்த தொன்மையான ஆசாரங்கள் உள்ளன. அவர்கள் அதை எளிதில் மீறமுடியாது, ஏனென்றால் அந்த சம்பிரதாயங்களுக்காகவே அந்த மடங்கள் அமைந்துள்ளன.

நீங்கள் அங்கே சென்று பாதபூஜைக்காக நிற்கையில் 'நானும் ஸ்மார்த்தனே' என்று சொல்ல முற்படுகிறீர்கள். உண்மையா என அவர்கள் பூணூலைப் தேடுகிறார்கள்.

தமிழகத்திலுள்ள எல்லா மடங்களும் வெவ்வேறு சாதிகளுக்குரியவை. சைவ மடங்களில் சிவ தீட்சை இருக்கிறதா எனப் பார்ப்பார்கள். கூடவே எங்கே இருந்து வருகிறீர்கள் என்று கேட்பார்கள். அதன் வழியாக அவர்களின் 'பூணூலை' அவர்களும் தேடுவார்கள்

விஷ்ணுபுர ஆராய்ச்சிக்காக ஒரு சைவ மடம் சென்றபோது என் அப்பா பெயர் கேட்டார்கள். 'பாகுலேயன்பிள்ளை' என்று சொன்னதும் ஒருவர் கண்கள் மின்ன என்னை நூலகம் வரை கொண்டுசென்றார். ஆனால் வயசான இன்னொருவர் 'அது நம்ம ஆளுங்க பேரில்லியே' என கண்டுபிடித்துவிட்டார்.

குரு என்பவர் ஆசாரங்களைக் கடைப்பிடிக்கும் அமைப்பின் தலைவரல்ல. அப்படிப்பட்டவர் ஆசாரங்களைக் கறாராக கடைப்பிடிப்பவர்களுக்கு ஆசார விஷயத்தில் குரு, அவ்வளவுதான்.

ஆன்மீக குரு என்பவர் சீடனின் ஆன்மீக நாட்டத்தை மட்டுமே பார்ப்பவர். அவனுடைய அர்ப்பணிப்பையும் தேடலையும் மட்டுமே தனக்கான காணிக்கையாகக் கொள்பவர். அங்கே நீங்கள் தேடியிருக்கவேண்டும். அந்த சன்னிதிகளில் உங்கள் மகனை கொண்டு நிறுத்தியிருக்கவேண்டும்.

அமெரிக்கா மட்டுமல்ல இந்தியாவும் அதேபோல சமவாய்ப்புகளின் நாடுதான் என்றே நினைக்கிறேன். அமெரிக்கா வளர்ந்த நாடென்பதனால் வாய்ப்புகளின் எண்ணிக்கை அதிகம், அவ்வளவுதான்

இங்கு எல்லாருக்கும் ஒரே வாய்ப்பு என நான் சொல்லவில்லை. அது எங்குமே சாத்தியமல்ல. லௌகீக வாழ்க்கை என்பது முண்டியடித்து, முட்டிமோதி வென்று செல்வதற்கான ஒன்றாகவே உள்ளது. அதற்காக நான், நம்மவர் என ஒவ்வொருவரும் நினைப்பது இயல்பானது. பிறரை அவரது சாதியோ மதமோ இனமோ நிறமோ எதைக் காரணம் காட்டியாவது வெளியே தள்ள முனைவதும் வழக்கம்தான்.

அதைத் தனித்திறமைகள் மீறிச்சென்று தன் இடத்தை அடைய சட்டபூர்வமாக வாய்ப்புண்டா என்பதே முதல் கேள்வி. ஒரு குழுவாகத் திரண்டு உரிமைகளுக்காகப் போராடவும் வெல்லவும் சமூக அனுமதி உண்டா என்பது அடுத்த கேள்வி. அவ்விரு வழிகளும் அமெரிக்காவை விடவும் இந்தியாவில் அதிகமென்பதே என் எண்ணம்.

அமெரிக்கக் கறுப்பர்கள் ஒரு பெரும் சமூகமாக சட்டபூர்வமாக ஒடுக்கப்படுகிறார்கள் என நான் நினைக்கிறேன்.அவர்களை குற்றச்சமூகம் என முத்திரையிட்டு, சிறு குற்றங்களுக்குக் கூட அவர்களை சட்டபூர்வமாகத் தண்டித்து, ஒட்டுமொத்த அடையாள அட்டையில் அவர்கள் செய்யும் குற்றங்களைப் பதிவுசெய்து, அந்த அட்டை வழியாகவே அவர்களை மதிப்பிட்டு அங்குள்ள அரசு அவர்களை சட்டபூர்வமாக ஒடுக்குகிறது.

அரசாங்க சட்டங்களாலேயே மறைமுகமாக உருவாக்கப்படும் கறுப்பர்சேரிகள் அங்குள்ளன, நான் சென்றிருக்கிறேன். ஏழெட்டுவயதுக்குள் எப்படியோ ஒரு குற்றமுத்திரையைப் பெற்றுவிடும் ஒரு கறுப்புக்குழந்தை வாழ்நாளெல்லாம் குற்றவாளி முத்திரையுடன் வாழ நேர்வதைக் கண்டிருக்கிறேன்.

இங்குள்ள ஒடுக்குமுறை சட்டபூர்வமானதல்ல. நமது அரசியல் சட்டம் ஒடுக்குமுறைக்கு எதிரானது. ஒடுக்கப்பட்டவர்களின் பக்கம் வெளிப்படையாகவே நிலைகொள்வது. ஏனென்றால் ஒடுக்கப்பட்ட மக்களின் தலைவரால் உருவாக்கப்பட்டது அது.[அதை சிலர் இது பாரபட்சமானது என்று சொல்வதையும் கேட்டுக்கொண்டுதான் இருக்கிறேன்]

நம் ஒடுக்குமுறை சமூகரீதியானது. நூற்றாண்டுகளின் மனநிலையின் எச்சம் அது. அதைக் கருத்தியல் ஆற்றல் மூலம், ஒருங்கிணைந்த செயல்பாடுகள் மூலம், பொருளியல்தள வெற்றிகள் மூலம் வென்றுசெல்ல எல்லா வாய்ப்புகளும் திறந்திருக்கின்றன. அவ்வெற்றி மெதுவானதாக இருக்க ஒடுக்கப்பட்ட மக்கள் ஒருங்கிணைய முடியாமல் அவர்களுக்குள் இருக்கும் பேதங்கள் முக்கியமான காரணம். ஒருங்கிணைய முடிந்த அனைவரும் மேலே சென்றிருக்கிறார்கள். அதற்கான நூற்றுக்கணக்கான உதாரணங்கள் கண்முன் உள்ளன.

# (8) சாதியாதல்

மரியாதைக்குரிய ஜெயமோகன் அவர்களே,|

வணக்கம். நெடுநாட்கள் உங்களின் தளத்தில் வாசகனாக இருக்கிறேன். நீங்கள் வாசகர்களுடன் கொண்டுள்ள தொடர்பினை நினைத்து வியந்துள்ளேன். மற்ற எழுத்தாளர்கள் உங்களைப் போல இல்லை.நீங்கள் வாசகர்களுடன் நெருக்கமாக உள்ளீர்கள், நல்ல நண்பனாக அவர்களின் ஐயத்தினைக் களைகின்றீரகள், வழிகாட்டுகின்றீர்கள். அது போல எனக்கும் என் குலத்திற்கும் உங்கள் வழிகாட்டல் இப்போது தேவைப்படுகிறது. ||

செய்தி 1 –

சற்று நாட்களுக்கு முன் முகநூல் சோழிய வெள்ளாளர் குழுமம் என்பதில் பிரபல எழுத்தாளர் நாஞ்சிலின் மகள் 600க்கு 596 மதிப்பெண்கள் எடுத்திருந்தும் மருத்துவப் படிப்பில் சேர முடியாமல் துன்பப்பட்டார் என்று படித்தேன். வெறும் நான்கு மதிப்பெண்களே குறைவாக எடுத்த அந்தப் பெண் மருத்துவப்படிப்பிற்காக எத்தனை துயர்களைத் தாண்டிப் படித்து எழுதி இத்தனை அரிய மதிப்பெண்ணைப் பெற்றிருக்க வேண்டும். அந்தப் பெண் பிள்ளைமார் என்றும், அதனால் அந்தப் பெண்ணுக்கு சலுகை கூடக் கிடைக்காமல் போனது எனவும் படித்தேன். மிகவும் வேதனையாக இருந்தது. இப்படி

செய்தி 2 –

பிள்ளைமார் என்றதுமே பெரிதும் நினைவுக்கு வருபவர் வ.உ.சிதம்பரனார். அவரைப் பற்றி அதிக மக்களுக்குக் கப்பலோட்டியது மட்டுமே நினைவில் இருக்கிறது. மற்ற பெருமைகளையெல்லாம் இங்கு மறைத்து சமூகத்திற்கான குறியீடாக மாற்றிவிட்டார்கள். நாடே கொண்டாட வேண்டிய அவரைப் பிள்ளைமார் சமூகம் மட்டுமே கொண்டாடும் அவல நிலை பற்றி வேறொரு இடத்தில் படித்தேன்,.

வன்னியர், தேவர் முதலானோரில் பல மன்னர்கள் ஆட்சி செய்துள்ளார்கள். நானும் வரலாற்றைத் தேடிப்பார்த்தேன் எந்தப் பிள்ளைமாரும் அரசனாக இருந்ததாகத் தெரியவில்லை. மருதநாயகம் பிள்ளை என்பவர் கூட முகமதியராக மாறிவிட்டார். (வேறு மன்னர்கள் பிள்ளைமார்களில் இருந்தால்

கொஞ்சம் குறிப்பிடுங்கள் தெரிந்துகொள்கிறேன்) இப்படி வரலாறு காலம் தொட்டோ யாரையும் அடிமை செய்யாமல் வாழும் இனம் பிள்ளைமார் இனம் மட்டுமே. அப்படியிருக்கும் போது இப்போதெல்லாம் வ.உ.சியை பிள்ளைமார்கள் வணக்குவது கூடாது என்று என்று கோசம் போடுகிறார்கள். ஒற்றுமையாக இருக்கவேண்டிய பிள்ளைமார்கள் எப்போதுமே இதைப் பற்றிய சிந்தனையின்றி, தங்களுடைய வேலைகளில் மட்டுமே கவனமாக உள்ளார்கள். அதற்கு வரலாற்றில் பிள்ளைமார்கள் பெருமையாக வாழ்ந்துள்ளார்கள், அவர்கள் ஒடுக்கப்படவில்லை என்று நண்பர் ஒருவர் கூறினார். ஒடுக்கப்பட்ட சமூகத்தில் மட்டுமே வீரமும், ஒற்றுமையும் இருக்கும் என்பது உண்மையா எனத் தெரியவில்லை. ஆனால் பிள்ளைமார்களையும் பெரும் சாதி வெறியர்களாக இன்று காட்டும் போக்கினை அரசு கடைப்பிடிக்கிறது. வ.உ.சியின் சிலை ஓரிடத்தில் அசிங்கப்பட்ட போது கூட உண்ணாவிதம் இருந்துதான் எதிர்ப்பு பிள்ளைமார்களால் தெரிவிக்கப்பட்டது. எந்த நேரத்திலும் ஆயுதம் ஏந்துவதைப் பிள்ளைமார்கள் விரும்புவதில்லை. ஆனால் ஏன் பிள்ளைமார்களின் மீது மட்டும் காழ்ப்புணர்வோடு செயல்படுகின்றார்கள் என்று தெரியவில்லை.

உ.வே.சாமிநாத ஐயரை அறிந்தவர்களுக்குத் தமிழ்த்தாய் வாழ்த்து எழுதிய மீனாட்சி சுந்தரம் பிள்ளையைத் தெரியாது. பென்னி க்விக் பற்றித் தெரிந்தவர்களுக்கு முல்லைப்பெரியாறு அணையைத் திட்டமிட்டு வகுத்த முத்துஇருளப்ப பிள்ளையைத் தெரியாது. கட்டபொம்மனைப் பற்றித் தெரிந்தவர்களுக்குக் கூட தாணுப்பிள்ளையைத் தெரியாது. இப்படி பிள்ளைமார் வரலாறு மட்டும் எங்கும் புதையுண்டு காணப்படுகிறது. இவர்களைப் பற்றிய செய்திகளை மக்களிடம் கொண்டு சென்றால் சாதி வெறியன் என்ற பட்டம் எனக்குக் கிடைக்கிறது. என் இனத்தின் பெருமையை நான் உலகிற்கு தெரியப்படுத்த ஆசைப்படுகிறேன். என்னால் தோல்வியை மட்டுமே காணமுடிகிறது. இரட்டை மலை சீனிவாசனுக்கும், பசும்பொன்தேவருக்கும் கொடுக்கப்படும் மரியாதை , பிள்ளைமார் இனத்திற்குக் கிடைக்க வேண்டும் என்று நினைத்தல் என் தவறா?.

மரியாதையுடன்,
மருத பிள்ளை

அன்புள்ள பிள்ளைவாள்,

நீங்கள் ஒரு பிள்ளைவாளாக உணர்வதிலும் அதை சொல்வதிலும் பிள்ளைநலத்துக்காகப் பாடுபடுவதிலும் பெரிய பிழை என ஏதும் இல்லை. அதைத்தான் இங்கே பெரும்பாலானவர்கள் செய்கிறார்கள்.

ஆனால் பிரச்சினை அது அல்ல. நீங்கள் யார் என்ற கேள்வி கேட்கப்படும்போது அதற்கு நீங்கள் அளிக்கும் பதில் என்னவாக இருக்கிறது என்பதுதான். அதாவது நீங்கள் உங்கள் சுயத்தை எப்படி வரையறை செய்கிறீர்கள் என்பதுதான்

நீங்கள் பிறந்த சாதியை வைத்து மட்டுமே உங்கள் சுயத்தை நீங்கள் அடையாளப்படுத்துகிறீர்கள். உங்களுடைய கல்வி, தொழில், தனித்திறமைகள் எதுவும் அங்கே முன்னால் வரவில்லை. அதாவது உங்கள் சுயம் நீங்கள் உருவாக்கிக் கொண்டது அல்ல, உங்களுக்கு அளிக்கப்பட்ட்து மட்டுமே, இல்லையா?

இவ்வாறு நீங்கள் ஒரு அடையாளத்துடன் உங்களை முன்வைக்கும்போது உங்களைப் பிறர் எப்படிப் புரிந்துகொள்வது? ஒரு மனிதனை அவனுடைய சொந்த ஆளுமையை வைத்து மதிப்பிடும்போதுதான் அவனுக்குரிய உண்மையான மதிப்பு வெளிப்படுகிறது. அது உங்களுக்குக் கிடைக்க வேண்டுமென நீங்கள் ஆசைப்படக்கூடாது, அவ்வளவுதான்

இப்படிச் சொல்கிறேன், ஒரு விவாதத்தில் உண்மை ஒரு பக்கம் இருக்கிறது, பிள்ளைவாள்களின் நலம் இன்னொரு பக்கம் இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். நீங்கள் எந்தத் தரப்பை எடுப்பீர்கள்? நியாயம் ஒருபக்கம் இருக்கிறது பிள்ளைவாள்களின் தரப்பு மறுபக்கம் இருக்கிறது என்றால் எதை ஆதரிப்பீர்கள்?

உண்மையையும் நியாயத்தையும் ஆதரித்தால்தான் நீங்கள் தனிப்பட்ட ஆளுமை உடைய மனிதர். அங்கே மனிதர் என்ற அடையாளம் மேலே வருகிறது.
பிள்ளைவாள்களை ஆதரித்தால் மனிதர் என்ற அடையாளம் மட்டும் மேலே வருகிறது. உங்களிடம் உண்மையும் நியாயமும் இருக்குமெனப் பிறர் நம்ப மாட்டார்ர்கள்.

நீங்கள் பிள்ளைவாள் நலன்களை மட்டுமே நாடுவீர்கள் அதை உண்மை என்றும் நியாயம் என்றும் உலகம் நம்பவேண்டுமென்று நினைத்தீர்கள் என்றால் கொஞ்சம் பேராசை அல்லவா அது?

ஆகவே சாதி சார்ந்த , மதம் சார்ந்த, இனம் சார்ந்த அடையாளங்களை சிந்தனையாளர்கள் ஏன் துறக்க விரும்புகிறார்கள் என்று தெரிகிறதல்லவா? உண்மை, அறம், நியாயம் என்னும் விழுமியங்களைச்சார்ந்து தன்னை முன்வைக்க விரும்பும் எவரும் அந்த அடையாளங்களை நிராகரிப்பார்கள். ஏனென்றால் உண்மை அறம் நியாயம் போன்றவை அவர்களை மனிதர்கள் என்ற நிலை நோக்கி விரிவாக்கம் செய்கின்றன. சாதி, மதம், இனம் போன்ற அடையாளங்கள் குறுக்குகின்றன.

கடைசியாக ஒன்று, இந்தக்குறுக்கல்போக்கு தொடங்கிவிட்டால் ஒரு இடத்தில் நிற்காது. சென்றுகொண்டே இருக்கும். மனிதர்களை சாதி, மதம், இனம் சார்ந்தெல்லாம் பிரிக்க ஆரம்பிப்பவர்கள் மேலும் மேலும் பிரிவினைகளை அதற்குள் செய்துகொண்டே செல்வதைக் காணலாம். ஏனென்றால் ஒரு அளவுகோலின் அடிப்படையில்தானே இந்தப் பிரிவினை செய்யப்படுகிறது. அந்த அளவுகோலை மேன்மேலும் கறாராக அவர்கள் பயன்படுத்துவார்கள். அதனடிப்படையில் 'தூய' அடையாளம் கொண்டவர்களைக் கண்டுபிடிப்பார்கள்.

நான் இதை மீளமீள கவனித்திருக்கிறேன். ஒருவர் தன்னைப் பிள்ளைவாள் என்றால் அடுத்துக் கொஞ்சம் பழகியதும் 'நாங்கள்லாம் திண்ணவேலி சைவம்லா...அவாள்லாம் கார்காத்தார்...கார்காத்தார்னா நல்ல வேளாளன் கெடையாது' என்று சொல்வார்கள். சரி இன்னும் கொஞ்சம் நெருங்கினால் 'தம்பி, நல்லாக் கேட்டுக்கிடுங்க. சுத்தமான திண்ணவேலி சைவம்னா தென்காசி ஜில்லாவுக்குள்ள உள்ள நூத்தெட்டு குடும்பம்தான்...மத்த்தெல்லாம் சும்மா சோழராஜா காலத்திலே வந்து சேந்துக்கிட்டவந்தாம்லா?' என்பார்கள்

கட்டக்கடைசியில் சொந்த வீட்டுத் திண்ணையில் அதிதூய பிள்ளைவாளைக் கண்டடைவார்கள். வெளியே மொத்த உலகமும் எதிரியாக்க் கிடக்கும்

விரிவதற்கும் சுருங்குவதற்கும் எல்லையே இல்லை

# (9) சாதி-வர்ணம்-முக்குணங்கள்

அன்புள்ள ஜெயமோகன்,

பிறரிடம் கேள்விகள் கேட்கும்போது அவை அசட்டுத்தனமானவையாக அமைந்துவிட்டால் சபையில் அசடு வழிய நேரிடுமோ என்ற பெரும் தயக்கத்துடனேயே எப்போதும் என் சந்தேகங்களை முன்வைக்கிறேன்.இக்கடிதமும் அப்படியே.

நம் மரபில் மனிதர்களைப் பொதுவாக அன்பு – குரூரம்-இவை இரண்டையும் சம அளவில் கொண்டவர்கள்(தேவர்-மானுடர்-ராக்ஷசர்?) என மூன்றாகப் பிரித்திருக்கிறார்கள்.குறிப்பாக மகாபாரதக் கதாப்பாத்திரங்கள். ஆனால் மகாபாரதத்தில் சாதிப் பிரிவினை பற்றித் தெளிவான சித்திரம் இல்லை என்றே எண்ணுகிறேன். நமது மரபு குணத்தின் அடிப்படையில் மனிதனை வேறுபடுத்த முனைந்தது சாதிப் பிரிவினைக்கு முன்பா? அதற்குப் பிறகா? இவ்விரண்டும் கலந்தே இருந்தபோது (இருந்திருக்குமானால்?) தொழிலை மட்டும் அளவுகோலாகக் கருதாமல் குணத்தையும் ஒரு பொது அம்சமாக கருதி மக்களைக் குழுக்களாகப் பிரித்தார்களா? (இன்ன இன்ன கடமைகளை ஒழுக்கங்களைப் பயின்று வாழ்பவனே பிராமணன் என புத்தரில் ஆரம்பித்து ஜெயகாந்தன் வரை பலர் குறிப்பிட்டு இருக்கிறார்கள்) குணமே பிரதானமாகக் கருதப்பட்டதெனில் கூட்டு வாழ்க்கையும் தொழிலும் சாதியினால் விளைந்த நற்பயன்களும் குணப் பிரிவினையை மறக்கடிக்கச் செய்துவிட்டனவா? தயவு செய்து தெளிவுபடுத்தவும்.

அன்புடன்
கோகுல்பிரசாத்

அன்புள்ள கோகுல்,

நீங்கள் இவ்விஷயத்தைப்பற்றி இந்த வினாவுடன் இருக்கையில் இதுசார்ந்து கிடைக்கும் தகவல்களை இன்னும் கொஞ்சம் வாசித்திருக்கலாம் என்று நினைக்கிறேன். நீங்கள் சாதிப்பிரிவினை, குணப்பிரிவினை போன்றவற்றைப் பலவகையில் கலந்துகொள்கிறீர்கள். உங்கள் கேள்வி ஒட்டுமொத்தமாகவே ஒரு பெருங்குழப்பம்.

இந்தியசிந்தனையில் வர்ணம் சார்ந்த ஒரு பிரிவினை தொல்பழங்காலம் முதல் காணப்படுகிறது. வர்ணத்திலிருந்து சாதிமுறை உருவானது என்பது ஆரம்பம் முதலே இந்தியவியலாளர்களான ஆய்வாளர்கள் அடைந்த தவறான புரிதல். அவர்கள் ஆராய ஆரம்பித்தபோது இரண்டும் ஒன்றாகக் கலந்து பிரிக்கமுடியாதவையாகவே இருந்தன என்பதுதான் காரணம்.

வர்ணப்பிரிவினை என்பது ஒரு கொள்கையடிப்படையிலான பகுப்பு. வர்ணம் என்ற சொல்லுக்கு நிறம் என்று பொருள். தொடக்கத்தில் அந்த நேர்ப்பொருளிலேயே இந்தப் பகுப்பு ஆரம்பித்திருக்கலாம். பின்னர் அது shades என்று ஆங்கிலத்தில் சொல்லப்படுவதற்கு நிகரான பொருளிலேயே கையாளப்பட்டுள்ளது. ஒருபோதும் நேரடியாகத் தோல்நிறத்தை அது சுட்டவில்லை.

வர்ணப்பகுப்பு இயற்கையின் இயல்பு மனித இயல்பு பற்றிய ஒரு கொள்கையின் விரிவாக்கம். இயற்கையானது நேர்சக்தி, எதிர்சக்தி, சமநிலைச்சக்தி என்ற மூன்று விசைகளால் ஆனது எனப் புரிந்துகொண்டதிலிருந்து உருவானது அந்தக்கொள்கை. நேர்ச்சக்தி என்பது மனிதர்களின் இயற்கையில் வெளிப்படுவதை ரஜோகுணம் என்றார்கள். எதிர்சக்தி தமோகுணம். சமநிலைச்சக்தி சத்வகுணம். இப்படி மனிதர்களில் வெளிப்படும் மூன்றுகுணங்களின் அடிப்படையில் நால்வர்ணம் வகுக்கப்பட்டது. தமோகுணம் கொண்டவர்கள் சூத்திரர்கள். ரஜோகுணம் கொண்டவர்கள் சத்ரியர்கள். தமோகுணமும் ரஜோகுணமும் கலந்தவர்கள் வைசியர். சத்வகுணம் கொண்டவர்கள் பிராமணர்கள் என்று பிரிக்கப்பட்டது.

குணங்களின் அடிப்படையில் பிரிக்கப்படும் நால்வருணம் என்ற அமைப்பு இந்தியசிந்தனைமுறையில் ஒரு நிரந்தரமான சட்டகமாகவே இருந்துள்ளது. மனிதர்களை மட்டுமல்ல மிருகங்களையும் தாவரங்களையும்கூட அப்படிப் பிரித்துப்பார்த்திருக்கிறார்கள். பிங்களசந்தஸ் சாஸ்திரம் போன்றவற்றில் அப்படிப்பட்ட விரிவான பிரிவினைகளைக் காணலாம். இது ஒரு புராதனமான மரபு. இயற்கையை அறியவும் பயன்படுத்திக்கொள்ளவும் அன்றிருந்தோர் கையாண்ட ஒரு முறை, அவ்வளவுதான்

இது ஒரு தத்துவார்த்தமான பகுப்பாக இருந்ததே ஒழிய எங்கும் எப்போதும் இதனடிப்படையில் சமூகம் நிரந்தரமாகப் பிரிக்கப்படவில்லை. அது நடைமுறைச்சாத்தியமும் இல்லை. உதாரணமாக சத்ரியர் என்ற சாதியே

இந்தியாவில் இல்லை. சூத்திரர் என்ற சாதியில் எவர் மண்ணைவெல்ல முடிகிறதோ அவர்களே ஆட்சியாளர்களாக ஆனார்கள். மகாபாரதத்தின் சத்ரிய வம்சம் பெரும்பாலும் சூத்ரசாதியிடமிருந்தே உதயமாகிறது. தன்னை சத்ரியனல்ல என்று சொல்லி அவமதிக்கும் சிசுபாலனைக் கொல்வதற்குமுன் கிருஷ்ணன் அதைச் சொல்கிறான், மண்ணாள்பவனே சத்ரியன் என்று.

வர்ணப் பிரிவினையின் அடிப்படையில் நூல்களில் இவர்களுக்கான தொழில்கள் ஒதுக்கப்பட்டன. ஆனால் இதுவும் கொள்கையடிப்படையில்தான், நடைமுறையில் அல்ல. உதாரணமாக இந்தியவரலாற்றில் ஒருதருணத்திலும் பிராமணச் சாதியினர் பிராமணர்களுக்கு என வர்ணாசிரமம் ஒதுக்கிய பணிகளை மட்டும் செய்ததில்லை. மகாபாரத காலம் முதலே அவர்கள் போர்செய்திருக்கிறார்கள்.நாடாண்டிருக்கிறார்கள். மிகச்சமீபகாலத்தில் நாயக்கர் ஆட்சியின்போதுகூட நியோகிபிராமணர்களே போர்த்தளபதிகளாக இருந்திருக்கிறார்கள்.ஆக இந்த வர்ணாசிரமப் பிரிவினையும் அதன் அடிப்படையிலான கடமைகளும் நெறிகளும் எல்லாமே ஒருவகையான கொள்கைகளே ஒழிய யதார்த்தங்கள் அல்ல.

சாதி என்பது முற்றிலும் வேறான ஒன்று. அது இந்தியாவின் ஆயிரக்கணக்கான பழங்குடிக்குலங்கள் நிலப்பிரபுத்துவ அடுக்குக்குள் கொண்டுவரப்பட்டபோது உருவான அதிகார அடுக்கின் விளைவாகப் பிறந்துவந்தது. நிலத்தைவென்று அதிகாரத்தை அடைந்த குலங்கள் மேல்சாதியாகவும் அவர்களால் ஆதிக்கம் செய்யப்பட்டவை கீழ்சாதிகளாகவும் உருவாயின. மிகமெல்ல பலநூற்றாண்டுகளாக நிகழ்ந்துவந்த இந்த செயல்பாடு இன்றும் தொடர்கிறது. சென்ற நூறுவருடங்களுக்குள் பல பழங்குடிக்குலங்கள் சாதிய அடுக்குக்குள் வந்திருப்பதைக் காணலாம்.

ஆகவே சாதிப்படிநிலை என்பது நிலையானது அல்ல. நிலத்தைவெல்லும்சாதி அப்படிநிலையில் மேலே செல்வதும் நிலத்தை இழக்கும் சாதி கீழே வருவதும் சாதாரணம். பல அடித்தள சாதிகள் பேரரசுகளை உருவாக்கி ஆளும்வர்க்கமாக மாறி நூற்றாண்டுகளாக ஆட்சிசெய்திருக்கின்றன.

இப்படிச் சொல்லலாம். சாதி கீழிருந்து உருவாகி வந்தது. வர்ணாசிரமம் மேலிருந்து உருவாக்கப்பட்டது. சாதிகளை மேலிருந்து புரிந்துகொள்ளவும்

வகுக்கவும் முற்பட்டவர்கள் அவற்றை வர்ணாசிரமத்தின் சட்டகத்திற்குள் அடைக்க முயன்றார்கள். அது ஒரு அதிகாரச்செயல்பாடு. சமூகத்தைப் பிரித்து அடுக்கி ஒவ்வொருவருக்கும் அதிகார அமைப்பில் ஓர் இடத்தை வகுத்தளிக்கும் முயற்சி

அதன்விளைவாகப் பூசாரிக்குலங்கள் எல்லாமே பிராமணர் என்ற வர்ணத்துக்குள் சென்றனர். இந்தியாவில் பிராமணர் என்ற அடையாளத்துக்குள் முற்றிலும் வேறுபட்ட பல்வேறு சாதிகள் இருப்பது இதனால்தான். இந்த நிகழ்வை சமீபகால உதாரணமாகப்பார்க்கவேண்டுமென்றால் வீரசைவ மரபில் வீரசைவ பூசைக்காக பசவரால் உருவாக்கப்பட்ட பிரிவினர் சில தலைமுறைக்குள் வீரசைவ பிராமணர்களாக மாறியதைச் சுட்டிக்காட்டலாம். வணிகம் செய்த சாதிகள் வைசிய வர்ணத்துக்குள் செலுத்தப்பட்டன. நாடாண்ட சாதிகள் ஷத்ரியர்களாக அடையாளம்காணப்பட்டன. உதாரணமாக, மாடுமேய்க்கும் யாதவர்கள் பேரரசை உருவாக்கியபோது ஷத்ரியர்களாக ஆனார்கள்.இவ்வாறுதான் சாதியும் வர்ணமும் ஒன்றாகக் கலந்துகுழம்ப ஆரம்பித்தன.

ஆனால் இவ்வாறு வர்ணத்தின் சட்டகத்திற்குள் சாதிகளை அடைக்கும்போக்கு ஒருபோதும் முழுமையாக நிகழ்ந்ததில்லை. சாதிகள் மாறிக்கொண்டே இருந்தன. ஒருசாதி, தான்செய்யும் தொழிலோ தன்னுடைய அதிகாரமோ மேம்படும்போது வர்ணாசிரம அமைப்பில் மேம்பட்ட இடத்தைக்கோரியது. அதை மெதுவாகப் போராடி அடையவும்செய்தது. ஷத்ரிய வைசிய அடையாளங்களுக்காக சூத்திரர் என வகுக்கப்பட்ட சாதிகள் போராடுவதை இன்றும்கூடக் காணலாம்.

சாதியை இனக்குழுக்கள் உருமாறி உருவாகிவந்த அமைப்பு என்றும் வர்ணத்தை அந்தச்சாதிகளை அதிகாரவர்க்கம் தொகுப்பதற்காக பயன்படுத்திய அமைப்பு என்றும் புரிந்துகொள்வது தெளிவைத்தரும்.

இதேபோன்ற வேறுபல பிரிவுகள் புராணங்களில் தொடர்ந்து வந்துகொண்டிருக்கின்றன. பொதுவாக அனைத்திலுமே இந்த முக்குணங்கள் என்ற அளவுகோல் இருப்பதைக் காணலாம். தேவர்கள் சத்வகுணம் கொண்டவர்கள், அசுரர் தமோகுணம் கொண்டவர்கள், மனிதர்கள் ராஜஸகுணம் கொண்டவர்கள் என்ற பிரிவினையை சிலபுராணங்களில் காணலாம். . கதகளிபோன்ற கலைகளில் கதைமாந்தர்

இவ்வாறு பிரிக்கப்பட்டு அதற்கேற்ப அவர்களின் முகங்களின் நிறங்கள் தீர்மானிக்கப்படுகின்றன. தமோகுணம் கொண்ட கதைமாந்தர் கரியவேடம். ரஜோகுணம் கொண்டவர்களுக்கு சிவப்பு. சத்வகுணத்துக்கு பச்சை. சில சிகிழ்ச்சைமுறைகளில் இப்பிரிவினை நோய்களுக்குக்கூட செய்யப்படுகிறது

இவற்றையெல்லாம் ஒன்றோடொன்று குழப்பிக்கொண்டு சிந்திப்பது வீண்வேலை. இவற்றுக்கான வரலாற்றுப்பின்புலத்தைப் புரிந்துகொண்டு இவை எவ்வாறு செயல்பட்டன என்று புரிந்துகொள்வதே ஒரு நவீனமனம் செய்யவேண்டியது.

முக்குணங்கள் என்ற பிரிவினை இந்தியசிந்தனையின் தத்துவம், மருத்துவம், யோகம் ஆகியவற்றைப்புரிந்துகொள்ளப் பயன்படக்கூடிய ஒன்று.அதைக் குறியீட்டுரீதியாக விளக்கிக்கொள்வதுதான் பயன்தரும்.

# (10) சாதி அரசியலும் ஜனநாயக அரசியலும்

அன்பின் ஜெ,

நலந்தானே.

நான் எப்போதுமே தங்கள் சாதி மற்றும் இந்திய சமூகத்தில் அதனுடைய பங்கு குறித்த கட்டுரைகளை மிக முக்கியமான அவதானிப்புகளாக கருதி வருபவன்.. என் பதின்ம வயதுகளிளிருந்தே இருந்தே சாதியும் அதன் சமூகப் பங்கும் குறித்து காந்தி அம்பேத்கர் பெரியார் மற்றும் தமிழ்நாட்டில் ஏனோ அதிகம் கவனம் பெறாத (sanskritisation என்ற ஒரு கோட்பாட்டைத் தவிர ) M .N ஸ்ரீநிவாஸ் போன்ற சமூகவியல் அறிஞர்களின் கருத்துக்களை தொடர்ந்து பயின்று வந்துள்ளேன்.இவைகளெல்லாம் என்னுள் சாதி பற்றிய ஒரு புரிதலை உருவாக்கியிருந்தன.பின் அவற்றுக்கு மிக அருகே தங்கள் அவதானிப்புகள் உள்ளது குறித்து எனக்கு பெரும் உவகையும் லேசான பெருமிதமும் கூட உண்டு. முக்கியமாக "இந்திய சமூகம் சாதிகளாகப் பிரிக்கப்பட்டது அல்ல, மாறாக சாதிகளாகத் தொகுப்பட்டது என்பது,சாதி என்பது நமது பழங்குடிப் பண்பாட்டின் மீது நிலப்பிரபுத்துவ மதிப்பீடுகள் மோதி கலந்து உருவானவை என்பதும் தற்கால ஜனநாயக முதலாளித்துவ சமூகத்தில் சாதி அடையாளம் ஒரு தனிமனிதனுக்கு தேவயில்லை என்பதும் தேவையற்றது என்பதும். தேவையானது தனி மனித சுய அடையாளமே என்பதும்.

இந்தப்பார்வை மிகச்சரியானது என்றாலும்,இதில் அழுத்தம் ஒரு பக்கமே அதிகமாக விழுவது போலும் தோன்றுகிறது.(பண்பாட்டு பக்கமாகவே.)சாதி இன்னொரு பக்கம் சமூக அரசியல் அதிகாரத்தை அடைய உதவும் முக்கிய கருவியாகவும் வரலாற்றில் இருந்து வந்திருக்கிறது.அதிகாரமும் செல்வமும் இந்திய சமூகத்தில் தொடர்ந்து ஒரு சில சாதிகளின் வசமே இருந்து வந்துள்ளதும்,அதற்கு அவர்களின் சாதியே அடிப்படையாக இருந்ததும் உண்மைதானே.இந்திய சமூக அதிகார மையங்கள் பல்வேறு சாதிகளிடையே மாறினாலும் பிராமணர்கள் முதலான சில சாதிகளே எப்போதும் அதிகார மையத்தின் அருகிலும் சமூகத்தின் மேல்தட்டிலுமே இருந்து வந்ததைக் காண முடிகிறது.இந்தப் போக்கு பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் ,அவர்கள் கொண்டு வந்த மையப்படுத்தப்பட்ட விரிவான ஒரு அரசில் அரசு இயந்திரத்தில் கிட்டத்தட்ட ஏகபோக பிராமண ஆதிக்கத்தை

உருவாக்கியதையும் மற்ற பிராமணரல்லாத நிலவுடமை மேல் சாதிகள் அதிகார மையத்திலிருந்து தள்ளியிருக்க நேர்ந்ததையும் காண முடிகிறது. இந்த இடத்தில்தான் பெரியாரின் இயக்கத்தின் முக்கியத்துவம் இருக்கிறது என்று நினைக்கிறேன்.பிராமணர்கள் அரசியல் சமூக ஆதிக்கத்துக்கு தங்கள் சாதியை பயன்படுத்துவதை கண்ட பெரியார், பிராமணரல்லாத மற்ற உயர் சாதியினர் தற்காலிகமாக இழந்திருந்த அரசியல் சமூக அதிகாரத்தை,மீட்டெடுக்க கையிலெடுத்த ஆயுதமும் சாதி (பிற்பட்டோர், திராவிட என்ற வழங்கிய) சாதி என்ற ஒன்றுதானே.

ஆனால் அதே சமயத்தில் காந்தி நேரு ,மற்றும் இந்திய இடதுசாரி இயக்கங்களின் முதல் தலைமுறை தலைவர்களின் முயற்சியால் இந்தியாவில் உருவாகி வந்த ஒரு ஜனநாயக குடிமை சமூகத்தில் சாதி ஏற்ற தாழ்வுகளைப் பாராட்டாத ஒரு மத்திய தர வர்க்கம் உருவானதும் சாதி மறையலாம் என்ற ஒரு நம்பிக்கையும் உருவாகி வந்ததாகவே நான் நினைக்கிறேன். இந்த உணர்வு ஏறத்தாழ ஒரு 20 -25 வருடங்கள் சுதந்திரத்துக்குப் பின் நீடித்தது.ஆனால் இந்தப்போக்கு மெல்ல தேக்கமடைந்து,ஒரு சராசரி இந்தியன் (தமிழன் )தன்னை ஒரு தனி மனிதனாக அடையாளம் காண்பதை விட ஒரு குழுவின்(சாதியின் ) அங்கமாக காண்பதே லாபகரமானது என்று நினைக்கவைத்து சாதிகளுக்கு புத்துயிர் அளித்தது நமது இட ஒதுக்கீடு கொள்கையும் போட்டி ஜனநாயக அரசியலும் தான் என்று நினைக்கிறேன்.

நான் எப்பொழுதுமே இட ஒதுக்கீட்டுக் கொள்கையின் ஆதரவாளன்.இந்தியா போன்ற ஒரு பரந்து விரிந்த பல்வேறு வேறுபாடுகள் நிறைந்த ஒரு பன்மை சமூகத்தில் இட ஒதுக்கீடும், மொழிவாரி மாநிலங்களுமே, இந்திய சிதறுண்டு போகாமலும் நீங்கள் எப்போதும் சொல்லி வருவது போல பல ஆப்ரிக்க நாடுகளைப் போல ரத்தக்களறி ஆகாமலும் அதிகாரப் பரவலுக்கும் காரணம் என்று நினைக்கிறேன்.

ஆனால் இட ஒதுக்கீட்டுக்காக நாம் தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்களை அடையாளம் காணும் முறை அதற்கான அலகு (yardstick )ஒரு வகையில் இடஒதுக்கீடு எனும் மருந்தை சாதி வெறி எனும் நோயாக ஆக்கி விட்டது என்று எண்ணுகிறேன்.இட ஒதுக்கீட்டுக்கு நாம் வைத்திருக்கும் அலகு தனி மனிதன் என்றல்லாமல் குழுக்கள் (சாதிகள்) என்று அமைந்தது மீண்டும் ஒரு தனி மனிதன் தன குழு (சாதி)அடையாளத்தை நாடுவதையே

முதன்மையாக்கியது.தன்னை ஒரு தனி மனிதனாக அடையாளம் காண்பதை விடவும் சாதியின் அங்கமாக அடையாளம் கொள்வதையே லாபகரமானது என்று எண்ண வைத்தது.குறிப்பாக BC மற்றும் MBC பிரிவுகள் அரசியல் சட்டத்தில் backward classes என்றே குறிப்பிடப்பட்டிருந்தாலும் நடைமுறையில் backward castes என்றே வழங்கலாயிற்று.மண்டல் கமிஷன் இதை மேலும் ஆழப்படுத்தியது.தமிழக அளவில் அரசியல் சமூக அதிகாரங்களில் கொடிகட்டிப் பறக்கும் தலைவர்கள் கூட தங்கள் பிற்பட்ட, மிக பிற்பட்ட , என்னும் சாதி அடையாளங்களைத் துறக்க விரும்பாததைக் காணலாம். இப்படியிருக்க சாதாரண மக்கள் தங்களை சுய அடையாளம் கொண்ட தனி மனிதனாக அடையாளம் காண்பதற்கான ஊக்கம் (incentive ) இந்த சூழலில் இல்லவே இல்லை. இந்தக் குறைபட்ட இட ஒதுக்கீட்டு முறையை கொஞ்சம் சீரடையச் செய்யும் creamy layerநடைமுறையைக் கூடத் தமிழகத் தலைவர்கள் எவ்வளவு மூர்க்கமாக எதிர்க்கின்றனர் என்பதையும் நாம் பார்க்கிறோம்.

ஆனால் தமிழ்நாட்டில் நடைபெறும் சாதி குறித்த எந்த உரையாடலிலும் இட ஒதுக்கீட்டின் மோசமான பக்க விளைவுகள் பற்றி ஒரு வார்த்தையைக் கூட நான் கேட்டதில்லை,இப்போதிருக்கும் இந்த இடஒதுக்கீடு தமிழகத்தின் புனிதப் பசுக்களில் ஒன்று.

சாதி ஒழிப்பு குறித்து பேசும்போது அம்பேத்கர் ":எல்லோரும் தலித்துகளை சீர்திருத்துவது குறித்தே பேசுகிறார்களே ஒழிய சாதி இந்துக்கள் திருந்தவேண்டியிருப்பதை பற்றி பேசுவதேயில்லை "என்று குறிப்பிடுவார் .

இந்து சமூகம் என்பது மிகப் பெரும்பான்மையாக இடை நிலை சாதிகளைக் கொண்டதுதான். இன்று அநேகமாக இந்திய அரசியல் சமூக அதிகாரமும் அவர்கள் கையிலே தான் உள்ளது. இந்தியாவின் மாநில முதல்வர்களின் மற்றும் பாராளுமன்ற சட்டமன்ற உறுப்பினர்களின் சாதியைக் கொண்டே இதனை நாம் உறுதிபடுத்திக் கொள்ளலாம்.இந்தியாவில் நடைபெறும் சாதி மோதல்கள் மிகப்பெரும்பாலும் இடை நிலை சாதிகளுக்கும் தலித்துகளுக்கும் என்றே இருப்பதின் பின்னணியில் நமது குறைபட்ட இடஒதுக்கீடுக் கொள்கையும் அது சாதி அடையாலத்துக்குத் தரும் புத்துயிரும் தீவிரமாக விவாதிக்கப்பட வேண்டியவை என்றே நான் கருதுகிறேன்.நடைமுறையில் இருக்கும் இடஒதுக்கீடு முறையைப் பற்றி நீங்களும் அதிகமாக எழுதியதில்லை என்றும் தோன்றுகிறது.இது குறித்து

தங்கள் கருத்தை அறிய ஆவலாக உள்ளேன்.
அன்புடன்

சுரேஷ், கோவை.

அன்புள்ள சுரேஷ்

சாதிகளின் உருவாக்கம், அதிகாரப்போக்கு குறித்த என் கருத்துக்கள் என் ஊகங்கள் அல்ல. நவ மார்க்ஸிய சிந்தனையாளர்களால் முன்வைக்கப்பட்டவை. விரிவான சமூகப்பொருளியல் ஆய்வு கொண்டவை.நான் அவற்றை மேற்கோள்தான் காட்டுகிறேன்.

இந்தியச்சமூகம் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இருவகை அரசியல்களுக்கு முன் நிறுத்தப்பட்டது. ஒன்று மக்களை தனிமனிதர்களாக, சாதி மத இன மொழி அடிப்படைகளுக்கு அப்பாற்பட்ட தனிமனிதர்களாக உருவகித்து அவ்வாறு அவர்களை உருவாக்க நினைத்த தேசிய இயக்கம். காந்தியும் நேருவும் அதன் முகங்கள்

இன்னொன்று பிரிட்டிஷ் அரசால் முன்வைக்கப்பட்ட அடையாள அரசியல். இந்தியமக்களில் உள்ள போர்ச்சாதிகளை இஸ்லாமியர், சீக்கியர், கூர்க்காக்கள் என அடையாளம் கண்டு அவர்களுக்குச் சலுகை அளித்து தங்களுடன் வைத்திருந்தனர் பிரிட்டிஷார். தேசிய இயக்கம் வலுப்பெற்று எளியமக்களை உள்ளிழுப்பதைக்கண்டபின்னர் சாதிவாரியான இடஒதுக்கீடு என்ற அடையாள அரசியலை அவர்கள் இங்கே அறிமுகம் செய்தனர்.

அடையாள அரசியல் உடனடியாக லாபமளிப்பதாக இருந்தது. சாதி, மதத்தலைவர்களாக இருந்த பிரிட்டிஷ் ஆதரவாளர்களான செல்வந்தர்களுக்குச் சாதகமானதாக இருந்தது. ஆகவே அந்த அரசியலை அவர்கள் ஆக்ரோஷமாக முன்வைத்தனர். அதை காங்கிரஸ் எதிர்த்தது. ஆனால் தலித்துக்கள் விஷயத்தில் அம்பேத்கர் முன்வைத்த நியாயத்தை உணர்ந்து காந்தி அவ்வரசியலை ஒத்துக்கொள்ள நேர்ந்தது.

சுதந்திரம் கிடைத்தபின் அரசதிகாரத்துக்கான போட்டி மட்டுமே அரசியல் என்றானது. இலட்சியங்கள் மறைந்தன. ஆகவே காந்தியும் நேருவும் பேசிய இலட்சியவாத அரசியல் பின்னடைவு பெற்றது. அடையாள அரசியல்

இந்தியாவின் ஒரே அரசியலாக ஆகியது. அடையாள அரசியலைப் பேசிய குழுக்களுக்கெல்லாம் காந்தியும் நேருவும் எதிரிகளாக ஆனார்கள். தங்கள் சாதி மத அடையாளங்களை கொண்டவர்களை மட்டுமே மக்கள் தங்கள் தலைவர்களாக ஏற்கும் ஒரு மன்நிலை வளர்ந்தது. ஈ.வே.ரா இந்தியாவின் இலட்சியவாதமற்ற அடையாள அரசியலுக்காகப் பேசியவர்களில் ஒருவர், அவ்வளவுதான்.

வேறுவழியில்லாமல் காங்கிரஸும் அடையாள அரசியலுக்குப் பணிந்தது. விளைவாக பெரும் இலட்சியவாதிகளான காமராஜ் போன்றவர்கள்கூட காலப்போக்கில் சாதியடையாளம் மட்டும் கொண்டவர்களாக ஆனார்கள். காமராஜ் இல்லை என்றால் இன்றைய கொங்குமண்டலம் இல்லை. ஆனால் கொங்குக்கவுண்டர்களுக்கு காமராஜ் சிவகாசிநாடார்களின் தலைவர் மட்டுமே. இதுவே சமகால இந்தியாவின் பெரும் வீழ்ச்சி.

இன்று இந்த அடையாள அரசியலின் முகமாக அனைவராலும் முன்வைக்கப்படும் அம்பேத்கர் உண்மையில் நவீன ஜனநாயகத்துக்கான கனவையே முன்வைத்தார். அவர் ஆக்கிய இந்திய அரசியல் சட்டத்தின் நெறிமுறைகளும் கனவும் அடையாள அரசியலுக்கு எதிரானவை. இடஒதுக்கீட்டை தலித்துக்கள் போன்ற அடித்தள மக்களுக்கான விடுதலைக்கான ஒரு தற்காலிக ஏற்பாடாகவே அவர் முன்வைத்தார். அந்த இட ஒதுக்கீடு குறிப்பிட்ட காலகட்டத்துக்குமேல் செல்லக்கூடாதென்றும், அதன் விளைவுகள் தொடர்ந்து பரிசீலனைசெய்யப்படவேண்டுமென்றும் அவர் நினைத்தார்.

அம்பேத்கர் அடையாள அரசியலின் அபாயத்தை உணர்ந்திருந்தார். குறிப்பாக இந்தியா விடுதலைபெற்றபின் வெறும் அடையாள அரசியலுக்குச் செல்வதை, சமூகமே சாதிகளாகப்பிரிவதை அவர் கவலையுடன் மட்டுமே பார்த்தார். இந்தியாவின் மொத்தச்சாதிகளும் கும்பல்களாகத்திரண்டு அதிகாரத்தை தங்கள் பலத்தின் அடிப்படையில் பிரித்துக்கொள்ளும் இன்றைய அடையாள அரசியல் அம்பேத்கரின் கனவுக்கே எதிரானது.

அம்பேத்கர் முழுமையான ஜனநாயக அரசியலை நோக்கிப் படிப்படியாக இந்தியச் சமூகம் முன்னகரவேண்டும் என்றும் அதற்கான வழியில் செய்யப்படும் ஒரு சிறிய சமரசமே தலித்துக்களுக்கான இட ஒதுக்கீடு என்றும் அவர் நினைத்தார்.

இன்று பிற்படுத்தப்பட்டோர் தங்கள் எண்ணிக்கைபலம் காரணமாக அரசியலதிகாரத்தை அடையாள அரசியல் வழியாக கைப்பற்றிக்கொண்டிருக்கிறார்கள். தலித்துக்களுக்கான இட ஒதுக்கீடு அதன் ஆரம்பகாலப் பலன்களை அளித்துவிட்டு கிட்டத்தட்ட பயனற்றுத் தேங்கிவிட்டது. அடையாள அரசியலால் ஒருங்கிணைக்கப்பட்ட சாதிவெறிமிக்க இடைநிலைச்சாதிகள் இன்று தலித்துகளுக்கெதிரான பெரும் சக்தியாகத் திரண்டிருக்கிறார்கள். அவர்க்ளிடம் போராட தலித்துக்களுக்கு அடையாள அரசியல் முற்றிலும் உதவாது என்ற நிதர்சனம் தெளிந்து வருகிறது.

இன்று நடைமுறையில் தலித்துக்களுக்கான இடஒதுக்கீடு பயனற்றிருப்பது மத்திய அரசு போன்ற துறைகளில் பணியாற்றியவர்களுக்குத்தெரியும். அவர்களுக்கான இடங்கள் நிரப்பப்படுவதில்லை. அவர்கள் அதிகாரப்பணிகளில் வந்தால்கூட முறையாகப் பணியாற்ற அனுமதிக்கப்படுவதில்லை. அவர்கள் தங்களுக்கென உருவாக்கிக்கொண்ட தனித் தொழிற்சங்கங்களுக்கு எதிராக பிற சங்கங்கள் மொத்தமும் இருப்பதனால் அவர்களுக்கு பேச்சுவார்த்தைக்கான அதிகாரமும் இல்லை.

பிற்படுத்தப்பட்டவர்கள் அதிகாரத்தைப்பிடித்தபின் தங்கள் இட ஒதுக்கீட்டை தாங்களே அதிகரித்துக்கொண்டு செல்கிறார்ர்கள். தலித்துக்களுக்கான இட ஒதுக்கீட்டில் மாற்றமே இல்லை. அவர்கள் தங்களில் தாழ்ந்தநிலையில் உள்ளவர்களுக்கு தங்கள் இட ஒதுக்கீட்டுக்குள் மட்டுமே பங்கு கொடுக்கவேண்டும் என்று நம் இடைநிலைச்சாதி அரசியல் எதிர்பார்க்கிறது. பிற்படுத்தப்பட்டோர் அரசியல் தேசிய அளவில் ஒற்றைப்படையாகத் திரள்வதனால் எதிர்காலத்தில் இன்னும் பெரிய நெருக்கடிகள் தலித்துக்களுக்கு வரும்.

இன்று அடையாள ஆதிக்க அரசியலை கையிலெடுத்திருக்கும் இடைநிலைச் சாதிவெறியர்கள் அவர்களுக்கான அடையாள அரசியலின் பிதாவாக அம்பேத்கர் அவர்களை குறிப்பிடுவது போல பெரும் வரலாற்றுச் சோகம் வேறொன்றுமில்லை.

உண்மையில் அம்பேத்கர் பற்றிய என் ஆரம்பகால எண்ணமும் அதுவாகவே இருந்தது. பின்னர் அம்பேத்கரின் நூல்களை நேரடியாக வாசிக்க வாசிக்க அம்பேத்கரின் இலட்சியவாத முகத்தை, ஞானத்தேடலின் முகத்தை தொடர்ச்சியாக மழுங்கடித்து அவரை வெறுப்பை மட்டுமே கக்கிய ஓர்

அடையாள அரசியல்வாதியாக இங்கே சிலர் சித்தரித்துவருகின்றனர் என்பதைப்புரிந்துகொண்டேன். சாதாரண அடையாள அரசியல்வாதிகளின் வரிசையில் தொடர்ந்து அம்பேத்கரைச் சேர்ப்பதன் மூலம் இதை அவர்கள் செய்துவருகின்றனர்

இந்த திரிபுக்கு நாராயணகுருவும் ஆளாகியிருக்கிறார். நாராயணகுருவை அவரது முழுமையுடன் முன்வைக்கும் பெரும் கலாச்சார இயக்கங்கள் கேரளத்தில் உள்ளன . ஆனால் தமிழகத்திலும் இந்தியாவிலும் நாராயணகுரு பிற்படுத்தப்பட்டோர் அரசியலின் அடையாளமாக மட்டும் முன்வைக்கப்படுகிறார்.

ஒருமுறை ஒரு தலித் அரசியல்வாதி நாராயணகுருவை பிற்படுத்தப்பட்டோர் அரசியலின் முகம் என கடும் கசப்புடன் அடையாளப்படுத்தியபோது எனக்கு ஏற்பட்ட அதிர்ச்சி சாதாரணமல்ல. நாராயணகுருவின் இயக்கத்தால்தான் கேரளத்தில் தலித் எழுச்சியே உருவானது. நாராயணகுருவால் தூண்டப்பட்ட கேரள தலித்தியக்க முன்னோடி அய்யன்காளியின் வாழ்க்கைவரலாற்று நூலை தமிழாக்கம் செய்து கொண்டுவர நான் முன்முயற்சி எடுத்துக்கொண்டது அதனால்தான். [நிர்மால்யா மொழிபெயர்ப்பு. தலித் இயக்கப்போராளி அய்யன் காளி. தமிழினி பிரசுரம். இப்போது எழுத்து பிரசுரம் விரிவான மறுபதிப்பைக் கொண்டுவரவிருக்கிறது]

தலித்துக்களுக்கு இன்றிருக்கும் ஒரேவழி நவீன ஜனநாயகப் பண்புள்ள சமூகத்தின் மனசாட்சியை நோக்கிச் செல்வதுதான். அச்சமூகமே தலித்துக்களின் துணைவர்களாக இருக்கமுடியும். அதற்கு அவர்கள் அடையாள அரசியலில் இருந்து வெளிவந்தாகவேண்டும். அம்பேத்கரின் ஜனநாயக இலட்சியவாதத்தை, ஆன்மீகத்தை நோக்கிச் செல்லமுயலவேண்டும்.

தமிழகத்திலும் இந்தியாவிலும் இந்த அடையாள அரசியலுக்கு எதிராக நவீன ஜனநாயக அரசியல் வலுப்பெறவேண்டும். அதற்கு இந்த அடையாள அரசியல் பிற்போக்கானது, ஜனநாயகத்துக்கு எதிரானது என்ற புரிதல் பரவலாக உருவாகவேண்டும். இந்த அடையாள அரசியல் பேசுபவர்கள் தங்களை ஒடுக்கப்பட்ட மக்களாகவும் தங்களுடையது ஒருவகை முற்போக்கு அரசியல் என்றும் பாவனைசெய்கிறார்கள். அந்த முகமூடி கிழிக்கப்பட்டாகவேண்டும்.

எதிர்காலத்தில் அது நிகழலாம்.

# (11) சாதியும் அடையாளமும்

மதிப்பிற்குரிய எழுத்தாளர் அவர்களுக்கு,

வணக்கம்.நான் உங்களுக்கு ஏற்கனவே எழுதியுள்ளேன்.

சாதி பற்றிய எதிர்வினைகள் முடிந்த பின்னே எழுத வேண்டுமெனக் காத்திருந்தேன்.தங்களின் எழுத்துகளை 80% வாசித்துள்ளேன்.எனவே இதைப்பற்றி உங்களால் மட்டுமே கூற இயலும் என்று எண்ணுகிறேன்.

நான் சாதிமறுப்பு மணம் புரிந்துகொண்டவள். சிறிய சாதிவேறுபாடுதான். எங்கள் இரு குடும்பங்களுமே திராவிட இயக்கப் பின்னணியிலானவை. பெரும் போராட்டங்களுக்குப் பின் இரு வீட்டினரும் சம்மதித்து திருமணம் செய்து வைத்தனர்.

ஏறக்குறைய உங்கள் திருமணம் போலவே நான் வீட்டிலிருந்து வெளியேறி வந்தேன்.அதன் பிறகே இரு வீட்டிலும் அழைப்பிதழ் அச்சிட்டு மணமுடித்தனர்.வட மாவட்டங்களில் எங்கள் இனத்தினர் பற்றி தாங்கள் அறிவீர்கள்.வெட்டு குத்துக்கு அஞ்சாதவர்கள். என் பிறந்த வீட்டினரின் முரட்டுத் தனங்களுக்கும் மிரட்டல்களுக்கும் சற்றும் அஞ்சாமல் என் கணவர் என்னை மணமுடித்தார்.பன்னிரண்டாண்டுகள் ஆகிவிட்டன.இப்பொழுது எல்லா உறவுகளும் சரியாகி விட்டது.

என்னுடைய மன வருத்தம் இதுதான்.முற்போக்கு சிந்தனை கொண்ட என் கணவருமே தற்பொழுது சாதிப்பற்று கொண்டு விட்டாரோ என்பதுதான்.நாற்பது வயது நெருங்குகையில் அதுவரை கொண்ட புரட்சி பகுத்தறிவு எல்லாம் கொஞ்சங்கொஞ்சமாக மறைந்து ஆதி புத்தி வந்து விடுகிறதோ என தோன்றுகிறது.என் புகுந்த வீட்டினரும் என்னை ஏற்றுக் கொண்டனர்.எல்லா மருமகள்களையும் விட என் சமையலையும் பழக்கங்களையும் அரசுப் பணியையுமே உயர்வாக கூறுகிறார்கள்.ஆனால் வீட்டில் எதாவது குலதெய்வ வழிபாடு,ஒன்று கூடுதல் என்று வரும் போது அவர்கள் சாதி வழக்கங்கள் எனக்கு தெரிந்தாலும் அங்கு நான் சற்று அந்நியமாகவே உணர்கிறேன்.

இதில் தற்போது என் கணவரும் அவர்களுடன் இணைந்து தன் சாதிப் பெருமை பேசுவதைப் பார்க்கிறேன்.அவர் என் மீது கொண்ட காதலோ

பற்றோ குறையவில்லை.ஆனால் சாதி என்று வரும்போது ஆரம்பத்தில் இருந்த அவரின் பரந்த மனப்பானமை மாறிவிட்டது.நாங்கள் இருவரும் பணிபுரிவது ஒரே வட்டத்தில்.இங்குமே அவர் சாதிப்பெண்களுக்கு கார்டியன் போல பேசுகிறார்.அவர்களுக்கு ஒன்று என்றால் மட்டும் சப்போர்ட்.எங்க சாதிப் பொண்ண வேற பையன் கட்டக்கூடாது என்கிறார்.

இத்தனைக்கும் பத்தாண்டுகளுக்கு முன் எத்தனையோ காதல் திருமணங்களை நடத்தி வைத்தவர்.குறிப்பிட்ட வயதிற்குப்பின் இப்படி நிறைய பேர் மாறுகிறார்கள்.நான் நிறைய பேரைப் பார்க்கிறேன்.நிறைய படைப்பாளிகளிலும் இந்த மாறுதல்களை அவர்களின் எழுத்துகளிலேயே உணர்ந்திருக்கிறேன்.

நீங்கள் கூறுவது போல ஆணின் காதல் பெருங்காதலாக இருக்கலாம்.ஆனால் தன் சுயத்தை இழப்பது பெண்ணே.

நான் பொது வெளியில் பலரைப் பார்ப்பவள்.என் குழந்தைகள் இருவருமே என் கணவரின் சாதி, பழக்கங்கள் என்றே வளர்கின்றனர்.இது நான் பார்க்கும் நிறைய கலப்பு மணங்களில் நிதரிசனம்.பெண்ணின் அடையாளம் அழிக்கப்படுகிறது.

காதலில் வேண்டுமானால் ஆண்கள் விட்டுத்தரலாம்.திருமண உறவில் அதுவும் சாதி மாறும் மணங்களில் அதிகம் அடையாளம் இழப்பது பெண்களே.நீங்கள் உங்கள் வாழ்வில் இல்லை என்று சொல்லலாம்.ஆனால் சாதாரண நடுத்தரக் குடும்பங்களில் இது தான் உண்மை.

என் புகுந்த வீட்டினர் எதாவது ஒரு இளம்பெண்ணைப் பற்றி அது நம்ம சாதிப் பொண்ணு,அந்த அந்தஸ்து யாருக்கு இருக்கும் என்றெல்லாம் சொல்லும் போது என் கணவரும் ஆமாம் என்று பெருமை பேசுகையில் நான் சாதி மாறி திருமணம் செய்தது தவறோ அந்தந்த இனத்தில் தான் பெருமிதமோ என்றே தோன்றுகிறது.என் கணவரிடம் கேட்டால் நான் உன்னை நல்லாத்தான வச்சிருக்கேன் என்கிறார்.

என் அனுபவத்தில் மட்டும் இதை எழுதவில்லை.மேலும் சில நண்பிகளின் அனுபவங்களும் இப்படித்தான்.(பணிபுரியுமிடத்தில் சாதி மாறி திருமணம் புரிந்த எங்களை தனி சாதியாக ஒதுக்கி விடுகின்றனர்) .என் பிறந்த வீட்டிற்கு சென்றால் என் அண்ணியும் ,சகோதரிகளும் நீ உங்க மாமியார் வீட்டு முறையில தான சாமி கும்புடுவ என்கிறார்கள்.இது பெரிய விஷயமா என்று

தோன்றலாம்.அந்த புறக்கணிப்புகளே என்னைப் போன்ற பெண்களை காயப்படுத்துகின்றன.

எங்கள் வட்டாரத்தில் என் திருமணம் புகழ் பெற்றது.எனவே நிறைய இளம் பெண்கள் காதல் பற்றி என்னிடம் ஆலோசனை கேட்பதுண்டு.

ஜெ சார் மன வருத்தத்துடன் சொல்கிறேன்.வட மாவட்டங்களில் இப் பொழுது சாதிய வேறுபாடுகள் முன்பைவிட மிக அதிகம்.நான் என்னிடம் கேட்பவர்களிடம் கூறுவது இதைத்தான் வேறு மதத்தில் வேண்டுமானால் கூட திருமணம் செய்யலாம்.ஆனால் சாதி மாறி திருமணம் வேண்டாம்.

ஏனெனில் இங்கு கிறித்தவ முதலியார்களும்.இந்து முதலியார்களும் ஒன்றாகி விடுகின்றனர்.அதே போலத்தான் கவுண்டர்,நாயுடு,கருநீகர்.ஆச்சாரி என எல்லா சாதிகளும்.

அதிகம் வாசித்து உலக இலக்கியங்களையும் உங்களையும் அறிமுகம் செய்து கொண்ட எனக்கு இந்த சாதீய போக்குகள் மன வருத்தத்தை அளிக்கின்றன

.

என் கணவர் கூறுவது போல அவரின் காதலோ,அக்கறையோ என்மீது குறையவில்லை மாறாக அதிகரித்து தான் உள்ளது.ஆனால் சாதி என்று வரும்போது அவரின் பற்று என்னை வருத்தமுற வைக்கிறது.குழந்தைகளுக்காக மௌனமாகி விடுகிறேன்.ஆனாலும் இதற்கு யாராவது பதில் கூற மாட்டார்களா என மனம் ஏங்குகிறேன்.

இத்தனை சாதி வெறி கொண்ட இந்திய சமூகத்தில் காதல் எதற்கு என்றே தோன்றுகிறது.இளம் வயதில் காதலிக்கும் ஆண் வேறு.நாற்பது வயது குடும்பத் தலைவனான ஆண் வேறு என்பதே இங்கு உண்மை.

இந்து மதத்தின் உன்னதங்களை உணர்ந்து உங்களின் எழுத்துகள் மூலம் தெளிவு பெற்றவள் என்பதால் எனக்கு இந்த சாதி வெறிகள் மனச்சோர்வை அளிக்கின்றன.இவற்றைக் களையவே முடியாதா.

ஆணும் பெண்ணும் அன்பால் மட்டுமே இணையும் உன்னதமான காதல் உணர்வு கொண்டவள் நான்.நீ நீயாக இருப்பதால் உன்னை நேசிக்கிறேன் என்பதே என் நிலை.உலகில் எத்தனையோ சமூகங்கள் அப்படி காதலைக் கொண்டாடும்போது இம்மண்ணில் மட்டும் ஏன் இந்த சாதிப்பேய்.

உங்களின் எழுத்துகளிலேயே காதலின் மேன்மையை அதிகம் உணர்ந்தவள் நான்.அனல் காற்று,காடு மற்றும் தற்போது வெண்முரசில் ராதை மற்றும் இடும்பியின் பெருங்காதலை உணர்வுபூர்வமாய் உணர்பவள் நான்.நிஜ வாழ்வில் இவைசாத்தியம் என்றே என் இளமையில் நம்பினேன்.இப்பொழுதும் அதே மாறா பிரேமையுடனே வாழ்கிறேன் ஆனால் நம் சமூகத்தில் அது சாத்தியமில்லையோ எனத் தோன்றுகிறது.

பிராமணர்கள் பற்றி நீங்கள் எழுதியதைப் படித்த பின் என் மனதில் தோன்றுபவை இவை.

நீங்கள் கூறுவது போல தமிழர்கள் வசைபாடுபவர்கள் என்பதால் இப்படி பிற சாதியை பழிக்கின்றனரா.அல்லது அது நம்முள் உறைந்த பழங்குடிப் பண்பா?

தங்களுக்கு நேரம் கிடைக்கும் போது எனக்கு பதில் அளிக்கவும்.இதை வெளியிட்டால் என் பாதுகாப்பு கருதி பெயர் வெளியிட வேண்டாம்.

நன்றி

—

அன்புள்ள —

பொதுவாக இளமைப்பருவத்தில் 'நான் வேறு மாதிரி. நான் தனித்தன்மை கொண்டவன்' என்ற எண்ணமே ஆண்களை ஆட்டுவிக்கிறது. பிறரைவிட மாறுபட்டிருக்கும் துணிச்சல் அப்போது இருக்கிறது. அது பெருமையாகவும் தோன்றுகிறது

ஆனால் வாழ்க்கையின் பிற்பகுதியில் பெரும்பாலானவர்களுக்கு அந்தத் தனித்தன்மை மிகக்குறைவே என்றும் அல்லது அது ஒரு பாவனையே என்றும் தோன்றிவிடுகிறது. அப்படித் தோன்றாதவர்கள் ஏதாவது துறையில் தனித்தன்மையை அடைந்தவர்களாக, சாதித்தவர்களாக இருப்பார்கள்

சாதிக்காதவர்கள் மீண்டும் மந்தையுடன் சென்று சேர்ந்துகொண்டு தன் இனக்குழு, மொழி, மதம் சார்ந்த பொது அடையாளங்களைச் சுமந்து மகிழ்பவர்களாகவே இருப்பார்கள். இது மிக விதிவிலக்கு

உங்கள் கணவர் அவ்வகைப்பட்ட ஓர் எளிய மனிதர் என்றே நினைக்கிறேன். அவரை பெரிதாக எண்ணவேண்டியதில்லை. அவரால் அவருக்குரியதென எதையுமே அடையமுடியவில்லை. இந்த மட்டில் இந்த அடையாள

மாற்றத்தை ஒட்டி உங்கள் மீதான அன்பையும் மதிப்பையும் இழக்காமலிருக்கிறாரே என்று எண்ணிக்கொள்ளவேண்டியதுதான்

அத்துடன் சாமானியர்களுக்கு வாழ்க்கையின் இறுதிப்பகுதியில் ஒருவகையான பாதுகாப்பின்மை உணர்வு வந்து விடுகிறது. சாதியை உதறி மணம் புரிந்த பலர் "நமக்குன்னு ஆளு வேணும் சார்" என்று சொல்வதைக் கண்டிருக்கிறேன். அது உண்மையும் கூட. ஏனென்றால் நம் சமூகம் சாதியச் சமூகம். ஒருவருக்கு ஒரு இக்கட்டில் அவன் சாதிதான் பெரும்பாலும் சமூகப்பின்புலமாக வந்து நிற்கிறது. அந்தப்பாதுகாப்பை எளிய மனிதர்கள் நாடுவதும் இயல்பே.

ஆக இதையெல்லாம் பெரிதாக எடுத்துக்கொள்ளவேண்டியதில்லை, இது ஒரு பெரும் வீழ்ச்சி என்றெல்லாம் எண்ண வேண்டியதில்லைம். அன்றாடவாழ்க்கையின் ஒரு பகுதியாக மட்டும் எண்ணிக்கொண்டால் போதும்.

பண்பாட்டு மாற்றம் போல மிகமிக மெல்ல நிகழ்வது பிறிதில்லை. அது நம் பொறுமையைச் சோதிக்கிறது. ஆனால் ஒட்டுமொத்தமாகப் பார்த்தால் பெரிய மாற்றம் நிகழ்ந்துகொண்டும் இருக்கிறது. சென்ற தலைமுறையில் நீங்கள் இப்படித் திருமணம் செய்துகொண்டிருந்தால் பெரிய சிக்கல்களைச் சந்தித்து ஒவ்வொருநாளும் வாழ்க்கை நரகமாகியிருக்கும். இப்போது சிறிய உறுத்தல்கள்தான்

நீங்களே ஒரு பெருநகரில் வாழ்ந்திருந்தால், உறவினர் சூழ இல்லாமலிருந்தால் வேறுவகையில் இருந்திருக்கும். மாற்றம் நிகழ்கிறது. நாம் எதிர்பார்க்குமளவுக்கு அல்ல.

என் உறவுச்சூழலில் இன்று மூன்றில் ஒரு பங்கு திருமணங்களே சாதிக்குள் நிகழ்கின்றன. எண்பதுகளில் கொஞ்சம் நீங்கள் சொல்லும் பேச்சுகளின் உரசல்கள் இருந்தது. இப்போது அதுவும் இல்லை. சாதி ஒரு பிரச்சினையாகவே இல்லை. ஏனென்றால் பெரும்பாலும் சாதிசார்ந்த அடையாளங்கள் கொண்ட வாழ்க்கை இங்கே இல்லை

ஆனால் பணம் முக்கியமானது. நான் என்னிடம் கேட்கும் [கேரளப் பின்னணி கொண்ட] பெண்களிடம் சொல்வது எக்காரணம் கொண்டும் உங்களைவிட பணமுள்ள ஒருவனை மணந்துகொள்ளவேண்டாம் என்பதுதான். அது

இங்கே மிமமிக பெரிய பிரச்சினை. ஒவ்வொரு நாளும்.நகையில் சாப்பாட்டில்

இந்தக்கடிதத்தை நான் எழுதக்காரணமே இன்றைக்குக்கூட அப்படி ஒரு பெரிய அழுகையை சந்தித்து சமாதானம் சொல்லி வந்ததுதான். விஷயம் இதுதான், பெண் ஒரு உயர்தர ஓட்டலில் முந்தானையால் முகத்தை ஒற்றிக்கொண்டு விட்டாள். மாப்பிள்ளை வீட்டில் நாட்கணக்காக கிண்டல். அறிவுரைகள்.

ஆக மனிதர்களிடையே இன்னொருவரை ஒரு படி கீழாக காட்டும் மனநிலை இருந்துகொண்டேதான் இருக்கும். அதன் வழியாகவே அவர்கள் மேலே செல்லமுடியும். அதை எதிர்கொண்டுதான் ஆகவேண்டும்

# (12) மன்னர்களின் சாதி

அன்புள்ள ஜெ ,

பல சாதி சங்கங்கள் சில காலமாகத் தங்களை ' ஆண்ட பரம்பரையே படையெடுக்க வாரீர் ' என்று தெருவெங்கும் போஸ்டர் அடித்து அவர்களின் சாதி மாநாட்டிற்கு அழைப்பு விடுக்கிறார்கள் . சில வருடம் முன்பு வரை அதைப் பற்றிப்பெரிதாக எடுத்துக்கொண்டதில்லை ஆனால் இன்று ஒவ்வொரு சாதியும் தங்களை ' மன்னர் பரம்பரை ' என்று கூறிக்கொள்கிறார்கள் குறிப்பாக சோழர்களையே இவர்கள் குறி வைக்கிறார்கள் . விக்கிபீடியாவில் பிராமணர் நீங்கலாக ஒவ்வெரு சாதியையும் தங்களை ' சோழரின் ' வம்சமாகக் கூறிக்கொண்டு தங்களின் சாதி உணர்வைத் தங்கள் சாதி மக்களிடும் எரியூட்டுகின்றனர் .' உலகமே சுருங்கிய காலத்தில் பெற்றோர் புகழே தனி மனிதனுக்கு உதவாதபோது இப்படிப் பண்டைய மன்னர்களின் பரம்பரை என்று பேசுவது வீண்வம்புக்கு மட்டுமே வழிவக்குக்கும் .

நான் இங்கே உங்களிடம் கேட்க காரணம் உண்டு . சிலவருடம் முன்பு எங்கள் வீட்டில் புதுமைப்பித்தன் பற்றி ஒரு பழைய விமர்சனப்புத்தகம் குப்பைகளுக்கு நடுவே கண்டெடுக்கப்பட்டது . 1955 இல் அச்சிடப்பட்டது என்று நினைக்கிறேன் . எழுதியவர் ஒரு காந்தியவாதி ,பெயர் ஞாபகம் இல்லை . அவர் சிறுபிள்ளை போல் காந்தியையும் புதுமைப்பித்தனையும் ஒப்பிட்டு புதுமைப்பித்தனைக் கேவலமாக எழுதியிருந்தார் . அந்தப் புத்தகத்தில் கூறப்பட்ட பல கருத்துக்கள் இன்று ' புதுமைப்பித்தனை ' வசைபாடுவோரின் கருத்துகளாக இருக்கிறது . இது போல் இன்னும் இருபது வருடங்களில் பண்டைய மன்னர்களின் வாரிசு என்று பல சாதிகளை மக்கள் நம்பினாலும் நம்பலாம் ...
கிடைத்த சில விஷயங்களை மட்டும் வைத்துக் கொண்டு ஊகிக்கலாம் ' உண்மையான முழுமையான வரலாற்றை ' தீட்ட இயலாது .வரலாற்று ஆய்வாளர்களுக்கும் இந்த சாதி 'சார்பு ' பற்றிக்கொண்டால் உண்மையான வரலாறு வரும் காலங்களில் மறைக்கப்படும் . பல வரலாறுகள் ரத்ததாலும்

துரோகத்தாலும் எழுதப்பட்டது .பண்டைய மன்னர்களின் குலங்கள் அழிந்தே போயிருக்கலாம் . யாருக்கும் தெரியாது ஆனால் அதைவைத்துக்கொண்டு சாதி அரசியல் , சாதி உணர்வை தூண்டுவது எந்த விதத்திலும் சரியான போக்கு இல்லை .

யு எம் துளி

அன்புள்ள துளி,

இந்தியா எங்கும் பொதுவாகக் காணப்படும் ஒரு சமூகப்பரிணாமத்தின் சில கூறுகளை சுட்டிக்காட்டியபடி இதைப்பற்றிப் பேச ஆரம்பிக்கலாம்.

**நம் அரசுகள் உருவான வரலாறு**

* பலகாலமாக ஐரோப்பிய ஆய்வாளர்களால் நமக்குச் சொல்லப்பட்டபடி இந்தியச்சாதியமைப்பு என்பது இந்துமதத்தாலோ அதைப்போன்ற வேறெந்த கருத்துநிலைகளாலோ மேலே இருந்து வடிவமைக்கப்பட்டு கீழே வரை அமல்படுத்தப்பட்டதல்ல. அப்படி இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்களை உள்ளிட்டு, ஆயிரக்கணக்கான சாதிகளையும் உபசாதிகளையும் தொகுத்து அமல்படுத்துவது நடைமுறைச்சாத்தியமும் அல்ல

சாதியமைப்பு மதத்தால் உருவாக்கப்படுவது என்ற கூற்று என்பது ஐரோப்பியர் இந்திய சாதியமைப்பின் நுட்பங்களை உணராமல் மேம்போக்காக ஆராய்ந்து சொன்னது மட்டுமே. அதை மதமாற்ற நோக்குடன் இந்து பௌத்த சமண மதங்களை அவதூறு செய்வதற்காகப் பின்னர் பயன்படுத்திக்கொண்டார்கள். அதை இங்குள்ள அரசியல்வாதிகள் திருப்பித்திருப்பிச் சொல்கிறார்கள். வலுவாகச் சொல்லக்கூடியவர்களுக்கு இன்றும் மதமாற்ற சக்திகளின் நிதி ஆதரவு உள்ளது

* இந்தியச் சாதியமைப்பு என்பது இங்கிருந்த பல்லாயிரக்கணக்கான பழங்குடி இனக்குழுக்கள் நிலப்பிரபுத்துவ அதிகார அமைப்புக்குள் மேல்கீழாகத் தொகுக்கப்பட்டதன் விளைவாக உருவான ஒருமுறை. அதற்கு

நிலப்பிரபுத்துவ அமைப்பில் முக்கியமான பொருளியல் பங்களிப்பு உண்டு. ஆகவே அதை அன்றைய அரசுகள் பேணின. ஒவ்வொரு சாதியும் தன் கீழே உள்ள சாதியைக் கட்டுப்படுத்தியதன் வழியாக சாதியமைப்பைப் பேணியது. ஒவ்வொரு சாதியும் அதனால் பயன்பெற்றது.அதற்கு மதமும் ஆசாரங்களும் எல்லாமே கருவியாகப் பயன்பட்டன. அது உலகமெங்கும் நிகழ்ந்ததுதான். நிலப்பிரபுத்துவ அதிகார அடுக்கத்தின் கருவியாக பயன்படாத மதம் என எதுவுமே உலகில் இன்றில்லை

* இந்தியச்சாதியமைப்பு என்பது அதிகார உருவாக்கத்தின் முறைமை. அதிகாரம் ஒருபோதும் நிலையானதல்ல. ஆகவே இந்தியச் சாதியமைப்பு மாறிக்கொண்டுதான் இருந்தது. ஐரோப்பியர் சொன்னதைப்போல எப்போதைக்குமாக உறைந்துபோன ஒன்றல்ல.

இங்குள்ள ஒவ்வொருசாதியும் நிலத்துக்காக, அதிகாரத்துக்காகப் போராடியபடியேதான் இருந்திருக்கிறது. நிலத்தையும் அதிகாரத்தையும் அடையும்போது சாதிப்படிநிலையில் மேலே செல்கிறது இழக்கும்போது கீழே வருகிறது. இந்தியாவிலுள்ள ஆளும்சாதிகளில் பல கீழிருந்து மேலே வந்தவை. அடித்தளச்சாதிகளில் பல வீழ்த்தப்பட்டவை. நிலம் பெரும்பாலும் தீர்மானிக்கும் சக்தியாக இருந்துள்ளது.

* .இந்தியாவில் உள்ள பல அரச வம்சங்கள் அடித்தள வாழ்க்கையில் இருந்த சமூகங்களோ பழங்குடிகளோ எழுச்சி கொண்டு உருவாக்கிக் கொண்டவை. இந்திய வரலாற்றைக் கூர்ந்து பார்க்கும்போது ஆரம்பத்தில் நிலத்தை பண்படுத்தி விவசாயம் செய்து மெல்லமெல்ல நிலஉடைமையாளர்களாக ஆன சாதிகள் உபரியைத் திரட்டிக்கொண்டு அதன்வழியாக வலுவான சமூகக்கூட்டுக்களை அமைத்து அரச அதிகாரத்தைக் கைப்பற்றியதைக் காணலாம்.

தொல்தமிழ் வரலாற்றில் வேளிர்கள் என்னும் மருதநில குறுநில மன்னர்கள் ஏராளமாக இருந்திருப்பதைக் காணமுடிகிறது. மருதநிலம் அதிகமாக செல்வத்தை உருவாக்கக்கூடியது. ஆகவே பெரிய குலத்தலைவர்கள் சிறிய மன்னர்களாக ஆனார்கள். அவர்கள் கூட்டாகச்சேர்ந்து தமிழகத்தை ஆண்டார்கள். சங்ககாலத்திலேயே இவர்களின் அதிகாரம் பெருமளவு ஒடுக்கப்பட்டாலும் கூட பிற்கால சோழர்க்ளின் அரசில் கூட வேளிர்குல

குறுமன்னர்கள் பெரும் அதிகாரத்துடன், மன்னர்களை கட்டுப்படுத்துபவர்களாக இருந்திருப்பதைக் காணமுடிகிறது. மன்னர் அவர்களின் சபைத்தலைவர் என்றமுறையிலேயே ஆட்சி செய்தார். மன்னர்களுக்குப் பெண்கொடுப்பதும் இவர்களே.

இந்தமுறையே இந்தியா முழுக்க இருந்திருக்கிறது. ஆரம்பகால இந்திய மன்னர்கள் விவசாயத்துக்குள் வந்த இனக்குழுக்களில் இருந்து உருவானவர்க்ள். இதை விரிவாக விவாதிக்கும் டி டி கோசாம்பி குறியீட்டுரீதியாகக் கூட இதை விளக்கமுடியும் என்கிறார். கங்கைச் சமவெளியில் வலுவான மன்னர்கள் உருவான காலகட்டம் இப்படிப்பட்டதே.அதாவது மகாபாரதம்போன்ற நூல்கள் எழுதப்பட்ட காலகட்டம்.

* இந்திய வரலாற்றின் அடுத்த கட்டத்தைக் கவனித்தால் மேய்ச்சல்சாதிகள் அரசதிகாரத்தைக் கைப்பற்றுவதைக் காணலாம். மேய்ச்சல்சாதிகள் வலுவான ஒருங்கிணைப்பு கொண்டவர்களாகவும் நெடுந்தூரப்பயணம் செய்யக்கூடியவர்களாகவும் கடும்சூழல்களை சந்திக்கக்கூடியவர்களாகவும் இருந்தமையால் நிலவுடைமைச்சமூகங்களைவிட அவர்கள் அதிக வலிமைகொண்டார்கள். இந்தியாவின் அடுத்தகட்ட பேரரசுகள் மேய்ச்சல் சமூகங்களால் அமைக்கப்பட்டவை. மௌரிய பேரரசு மூரா பழங்குடிகளால் அமைக்கப்பட்டது. அதன்பின் யாதவப்பேரரசுகள். அதன்பின் நாயக்கர் பேரரசு. அதன்பின் மராட்டியப்பேரரசு. இவர்கள் அனைவருமே மேய்ச்சலைத் தொழிலாகக் கொண்டிருந்த மக்கள்தான்

* இந்த வரலாற்றுப்பின்னணியில் நவீன இந்தியாவில் ஒரு பொதுப்போக்கு காணப்படுகிறது. சுதந்திரத்துக்குப் பின்னர் கிடைத்த பொருளியல் வாய்ப்புகளைப்பயன்படுத்திக்கொண்டு முன்னேற்றம் அடையும் ஒவ்வொரு சாதியும் தன்னை சாதிப்படிநிலையிலும் மேலே கொண்டுசெல்ல முயல்கிறது. அதற்கு அது இரண்டு அடையாளங்களை உருவாக்கிக்கொள்ளவேண்டியிருக்கிறது. ஒன்று ஒரு புராண அடையாளம். இன்னொன்று ஆட்சியதிகாரம் சார்ந்த அடையாளம்.

புராண அடையாளம் என்பது இந்தியாவின் புராணமரபில் ஒரு இடத்தை, ஒரு தொடர்ச்சியை உருவாக்கிக் கொள்வதாகும். இந்திரன், விஸ்வகர்மா போன்ற தேவர்கள் அல்லது காஸ்யபர் போன்ற ரிஷிகளின் மரபில் வந்தவர்கள் என்ற அடையாளத்தை உருவாக்கிக் கொள்ளுதல். இதன்மூலம்

இந்தியாவின் பிரம்மாண்டமான இறந்தகாலத்துடன் அவர்களால் தங்களை பிணைக்கமுடிகிறது. அந்த அடையாளம் அவர்களுக்குத் தன்னம்பிக்கையை அளிக்கிறது.

அடுத்தபடியே ஆண்ட வம்சம் என்னும் அடையாளத்தை உருவாக்கிக்கொள்ளுதல். ஒருகாலத்தில் ஆட்சிசெய்த வம்சமாக இருந்தோம் என்பது பெருமிதத்தை அளிக்கக்கூடியதாக உள்ளது. உண்மையில் இந்தியாவில் உள்ள மிகச்சில சாதிகளைத் தவிர அனைத்துச்சாதியினரும் எங்கோ ,எப்போதோ சிறிய அளவிலேனும் ஆட்சியாளர்களாக இருந்திருப்பார்கள். அவர்கள் அந்த அடையாளத்தைப் பெரிதாக ஆக்கிக்கொள்ளமுடியும்

இதன் விளைவாகவே இன்று 'ஆண்ட பரம்பரை' என்ற சுயவரலாற்று உருவாக்கம் நிகழ்ந்துகொண்டிருக்கிறது இது சாதிய அரசியலின் ஒரு பகுதியே ஒழிய இதற்கு வரலாற்று அடிப்படை என ஏதும் இல்லை. இன்று அதிகமும் பொருளியல் முன்னேற்றமும் ஆட்சியதிகாரமும் பெற்று வருபவர்கள் இடைநிலைச்சாதிகள். அவர்களுக்கு இந்த இரு அடையாளங்களும் பெரிதும் தேவைப்படுகின்றன.

**தமிழக மன்னர்களின் சாதி**

தமிழகத்தை ஆண்ட ஆட்சியாளர்கள் எந்தெந்த சாதிகளைச் சேர்ந்தவர்கள்? மிகவிரிவான ஆராய்ச்சிக்குரிய தலைப்பு இது.சுருக்கமாக இப்படி ஒரு விவரணையை அளிக்கலாம்

*.சங்க காலகட்டத்தில் எல்லா சாதிகளும் அந்தந்த பிராந்தியங்களில் ஆட்சியமைத்திருந்ததைக் காணமுடிகிறது. மீனவர்கள் கடற்சேர்ப்பர்கள் என்ற ஆட்சியாளர்களாக இருந்தனர். மருதநிலத்தில் வேளிர் மன்னர்கள் இருந்தார்கள். மலைகளில் குறவ மன்னர்கள் இருந்தார்கள். ஆய் அண்டிரன் போன்ற ஆய் குல மன்னர்கள் மேய்ச்சல் சாதியைச்சேர்ந்தவர்கள் .நாஞ்சில் குறவன் போன்ற குறவமன்னர்கள் பெரும் வல்லமையுடன் இருந்திருக்கிறார்கள். குறவ அரசியான குறத்தியறையார் சிதறால்மலையில் இருந்த சமணப்பள்ளிக்கு பெரும் நன்கொடை அளித்ததாக அங்கே உள்ள கல்வெட்டு சொல்கிறது.மறவ மன்னர்கள் இருந்திருப்பதை சங்க காலத்தில் இருந்தே காண்கிறோம்.

* அனைத்துச்சாதியில் இருந்தும் உருவாகி வந்த மன்னர்களை சிறுகுடிமன்னர்கள் என்று சொன்னார்கள். இவர்களில் இருந்து உருவாகி வந்தவர்களே சேரர்,சோழர், பாண்டியர் என்னும் மூன்று பெருங்குடி மன்னர்கள். இவர்களின் வேர் என்ன, இவர்கள் எப்படி உருவானார்கள் என்பதெல்லாம் இன்றும் எந்தவகையான உறுதியான முடிவையும் சொல்லக்கூடிய அளவில் ஆராயப்படவில்லை

* பாண்டியர்குலமே இவர்களில் பழைமையானது. பண்டையோன் என்பதில் இருந்து பாண்டியன் என்னும் சொல் வந்திருக்கலாம். பல கல்வெட்டுகளில் பழையர் என்றும் பரதர் என்றும் இவர்கள் குறிக்கப்படுவதில் இருந்து தொன்மையான பரதவ மன்னர்களின் மரபினர் என ஊகிக்கலாம்.

* சேரர்கள் தொன்மையான குறவர்குலத்தில் இருந்து வந்திருக்கலாம். அதற்கான சான்றுகள் ஐங்குறுநூறு போன்ற சேரர்குலவரிசையைச் சொல்லும் பாடல்களில் உள்ளன

* முற்காலச் சோழர்கள்கூட வெளியே இருந்து வந்தவர்கள் என ஊகிப்பதற்கான எல்லா சாத்தியங்களும் சங்கப்பாடல்களில் உள்ளன. காவேரி வழியாக வணிகம்செய்தவர்கள் மன்னர்களானார்கள். கோழிக்கொடி அடையாளமே பின்னர் குல அடையாளமாக ஆகியது.

* முற்கால மூவேந்தர்களின் அடையாளம் எந்த சாதியுடனும் முழுக்கப்பொருந்துவதில்லை. அவர்களைப்பற்றிய ஊகங்கள் மிகமிக தோராயமானவை. ஆனால் அவர்கள் இங்குள்ள சிறுகுடி மன்னர்களிடம் போரிட்டு அவர்களை அடக்கி ஒடுக்கினர்.சங்க காலம் மூவேந்தர்கள் சிறுகுடிமன்னர்களை அழிக்கும் சித்திரத்தைக் காட்டுகிறது. தமிழக வரலாற்றின் இந்த நாற்றங்கால் பகுதி இன்றுவரை முறையாக எழுதப்படாமலேயே உள்ளது.

* சிறுகுடிமன்னர்களும் பழைமையான குலங்களும் மூவேந்தர்களுக்குப் பெண்கொடுக்க மறுப்பது வழக்கமாக இருந்திருக்கிறது. அது ஒரு சடங்குபோலவே புறநானூற்றில் குறிப்பிடப்படுகிறது. மகட்கொடைமறுத்தல் என்ற பேரில் பின்னாளில் ஒரு துறையாக வகுக்கவும் பட்டது. இது மூவேந்தரும் தமிழின் எந்தத் தொல்குடியையும் சேர்ந்தவர்கள் அல்ல, அவர்கள் அன்னியர்களாக இருக்கலாமென்பதற்கான ஆதாரமாகக்கொள்ளப்படலாம்

* களப்பிரர் காலம் உருவாக்கிய முந்நூறு ஆண்டு இடைவேளைக்குப்பின்னர் வந்த சேர சோழ பாண்டிய குலமரபுகள் பெரும்பாலும் நடுவே முந்நூறாண்டுக்காலம் தொடர்ச்சி துண்டிக்கப்பட்டவை.பழைய மன்னர்குலங்கள் சிதறிப்பரந்துவிட்டிருந்தன. அவர்களில் ஏதேனும் ஒரு வம்ச அடையாளம் கொண்டிருந்தவர்கள் படைதிரட்டிக் களப்பிரரை வென்று தங்களை சோழர் பாண்டியர் என்று அறிவித்துக்கொண்டார்கள். களப்பிரர் காலமும் அவர்களை வென்று பிறகால பாண்டியர் சேரர் சோழர் உருவான காலமும் தெளிவாக இன்றும் எழுதப்படவில்லை

* பிற்காலச் சோழர்கள் தமிழர்களே அல்ல என்று பல ஆய்வாளர்கள் வலுவாகக் குறிப்பிடுகிறார்கள். அவர்கள் ஆந்திரநிலத்திற்குச் சென்று அங்கே குடியேறி மணம் செய்து வாழ்ந்தவர்கள். கோதாவரிநிலமே வெங்கிநாடு. சோழர்கள் வெங்கிநாட்டிலிருந்து களப்பிரரை வெல்ல படைகொண்டுவந்தார்கள். அவர்களின் மண உறவுகள் எல்லாமே வெங்கிநாட்டைத்தான் சார்ந்திருந்தன

* பிற்காலப்பாண்டியர்களைப்பற்றி இன்று வரை முறையான எந்த ஆய்வும் இல்லை. அவர்களின் குலங்கள் சிதறிப்பரந்து கிடந்திருக்கலாம். அவற்றில் ஏதேனும் ஒன்று அந்த பழைய அடையாளத்தை முன்வைத்து மதுரையைக் கைப்பற்றியிருக்கலாம் என்று மட்டுமே ஊகிக்கமுடிகிறது

* பிற்காலச்சேரர்கள் பற்றி இந்த அளவுக்குக் கூட ஏதும் வரலாற்றில் இல்லை. ஆய்வாளர் இளங்குளம் குஞ்சன்பிள்ளை ஓர் ஊகமாகச் சொல்லியவற்றையே அப்படியே இன்றும் சொல்லிவருகிறார்கள். அதாவது பழங்கால சேரர் ஆட்சி களப்பிரரால் அழிந்தது. அதன்பின்னர் சேரர்குலங்கள் சிதறி வாழ்ந்தன. களப்பிரர் காலத்திற்குப்பின்னர் பதினெட்டு சேரர்கள் கேரளமண்ணை ஆண்டார்கள். அவர்களை ராஜராஜசோழன் வென்று சோழ ஆட்சியை நிலைநாட்டினான்.

சோழர் ஆட்சி வீழ்ச்சியடைந்தபின்னர் சேரர்குலத்தின் நேரடிவாரிசுகள் பெருமாள்கள் என்றபேரில் வஞ்சி என்னும் கொடுங்கல்லூரை ஆண்டனர். அவர்களில் கடைசிப்பெருமாள் குலசேகரப்பெருமாள். அவர் தன் உடைவாள் மற்றும் மணிமுடியுடன் தெற்கே வந்தார். இங்கே இருந்த தலக்குளம் திருப்பாம்பரம் ஸ்வரூபம் என்ற சிற்றரசி குடும்பத்திற்கு அவற்றை அளித்தார்.

ஆகவே அவர்கள் சேர வாரிசுகள் ஆனார்கள். அவர்களிடமிருந்தே திருவிதாங்கூர் அரசவம்சம் உருவாகியது.

* ஆக தமிழகத்தின் மூவேந்தர்கள் உண்மையில் எந்தச் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் என்று இன்று சொல்லமுடியாது. அவர்கள் இன்றுள்ள எந்த பெரும்சாதியையும் சேர்ந்தவர்கள் அல்ல என்றும் அவர்கள் தனிக்குலங்களாகவே நூற்றாண்டுகளாக நீடித்தார்கள் என்றும் மட்டுமே சொல்லமுடியும்.

* சோழர்குலம் பாண்டியர்களால் முழுமையாக அழிக்கப்பட்டது. பாண்டியர் குலம் நாயக்கர்களால் கடைசியாகத் தோற்கடிக்கப்பட்டு மதுரையை விட்டு விரட்டப்பட்டது. அவர்கள் தென்காசி, கயத்தாறு பகுதிகளில் வாழ்ந்து பின்னர் அரியநாதமுதலியாரால் அழிக்கப்பட்டார்கள். தென்காசிப்பாண்டியர்களின் கடைசிப் பெண்வாரிசு கொல்லம் மன்னரால் மணக்கப்பட்டபின்னர் அந்த பரம்பரை அழிந்தது. சேரர்களின் கடைசிக் கண்ணி குலசேகரப்பெருமாள். அவருக்குப்பின் ஆண்ட மன்னர்கள் எல்லாருமே பல்வேறு வகையில் அதிகாரத்தைக் கைப்பற்றிய சிறிய குலமுறை ஆட்சியாளர்களே.

அதாவது மூவேந்தர்கள் குறிப்பிட்ட சாதியினர் அல்ல. அவர்கள் எந்தச்சாதியிலும் இருக்கவில்லை. அவர்கள் தனித்தனி குலவரிசையினர். அக்குலவரிசை அழிக்கப்பட்டபோது அவர்கள் முழுமையாகவே அழிந்தனர்

* மூந்தர்கள் அவர்களுக்குக் கீழே இருந்த எல்லா சிறுகுடிமன்னர்களிடமும் பெண் எடுக்கும் உறவை கொண்டிருந்தனர். பிற்காலச் சோழர்கள் வேளிர் மன்னர்களிடமும் மறவ மன்னர்களிடமும் பெண் எடுத்ததைக் காணமுடிகிறது. ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் தேவதாசிக்குடும்பத்தில் இருந்து பெண்ணெடுத்துப் பட்டத்தரசியாக்கினான். ஆகவே பெண்கொடுத்த வகையில் எந்த சாதியும் மூவேந்தர்களை உரிமைகொண்டாட முடியாது.

* இந்தியாவில் உள்ள பெரும்பாலான சாதிகளுக்கு ஏதேனும் ஒரு ஆட்சியதிகாரம் இருந்த வரலாற்றைச் சுட்டிக்காட்டமுடியும். சேரநிலப்பகுதியில் புலையர்களின் இரு சிற்றரசுகள் இருந்திருக்கின்றன என்பதற்கான ஆதாரங்கள் உள்ளன. புலையனார்கோட்டை என அதற்கு பெயர். அனந்தபத்மநாபன் ஆலயம் இருந்த பகுதி புலையனார்காடு என்றே

சொல்லப்படுகிறது. பதினைந்தாம் நூற்றாண்டில்கூட மீனவ அரசன் இருந்திருக்கிறான் என்பதை அவனைப்பற்றி ஒரு வேளாளக் கவிஞரால் பாடப்பட்ட செண்பகராமன் பள்ளு காட்டுகிறது. வெண்கலராஜன் கதை நாடார்களின் அரசனைப்பற்றிச் சொல்கிறது. ஆகவே ஒருவகையில் எல்லா சாதிகளும் ஆண்டபரம்பரை என்று சொல்லிக்கொள்ளமுடியும். ஆனால் மூவேந்தர்கள் தாங்களே என்பது எவர் சொன்னாலும் வெறும் சாதிப்பெருமை மட்டுமே

தமிழக வரலாறு இன்னும்கூட முழுமையாக எழுதப்படவில்லை.அதன்பெரும்பகுதி சொல்லப்படாமலேயே உள்ளது. அதை புறவயமான சார்பற்ற தரவுகளின் அடிப்படையில் எழுதும் முயற்சியே இன்றைய தேவை. சாதியமைப்புகளும் அதன் ஆதரவாளர்களும் அரைகுறைத்தகவல்களைக்கொண்டு உருவாக்கும் ஒட்டுவேலை வரலாற்றை முழுமையாகப் புறக்கணிப்பதே சரியான வழி.சமநிலையுள்ள ஆய்வாளர்களின் வழி.

# (1) இந்துமதம்,சம்ஸ்கிருதம்,பிராமணர்

அன்பின் ஜெ.

சமஸ்கிருதம் குறித்தான உங்கள் பதிவைப் படித்தேன்.

“சமஸ்கிருதம் ஒரு பொதுவான மொழி. இந்தியாவின் ஏன் உலகின் அனைத்து இந்துக் கோவில்களிலும் பொதுமைக்காக சமஸ்கிருத வழிபாடு செய்யப்படுகிறது. அய்யப்பன் கோவிலில் சமஸ்கிருதம் வந்தபின்புதான் அனைவரும் அங்கு வந்து வழிபாடு செய்கிறார்கள்” என்கிறீர்கள்.

இந்து மதம் பொதுவாகவே பொதுமைக்கு எதிரானது என்பதை இன்றும் மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோவில் உட்பட பல கோவில்களில் ‘அந்நிய மதத்தினர் பிரவேசிக்கக் கூடாது’ என்று எழுதி வைக்கப்பட்டுள்ள பலகைகள் மூலம் அறியலாம். அவ்வளவு ஏன், இன்றும் கூட சில இந்துக் கோவில்களில் எல்லா சாதியினரும் நுழைய முடியாது. ஆக மதத்தில், சாதியில் பிரிவினையைக் கடைப்பிடிக்கும் இந்து மதம் மொழியில் மட்டும் பொதுமையை எப்படிக் கடைப்பிடிக்கும் ?

‘மையத்தில் சம்ஸ்கிருத வழிபாட்டுமுறை இருப்பது பிறமொழிகளில் வழிபடுவதற்கான தடை அல்ல. எல்லா இந்திய வட்டார மொழிகளும் இந்து வழிபாட்டு மொழிகளாகவே உள்ளன. எல்லா மொழிகளிலும் பல்லாயிரம் தோத்திரங்களும் பாடல்களும் உள்ளன. அவை ஆலயங்களில் பாடப்படுகின்றன’ என்கிறீர்கள் .சமஸ்கிருதம் அவ்வளவு நல்ல மொழியாக இருந்தால் ஏன் சிதம்பரம் கோவிலில் தமிழில் பாடிய ஆறுமுகசாமி அய்யா அடி வாங்கினார். சமஸ்கிருதம் தேவ பாஷையாகவும் ,தமிழ் நீச பாஷையாகவும் ஆனது எப்படி?

அரசியல்வாதிகளால் நமக்குச் சொல்லப்பட்டிருப்பது போல சம்ஸ்கிருதம் வடவர்களின் மொழியோ, பிராமணர்களின் மொழியோ, வைதிகத்தின் மொழியோ, இந்துமதத்தின் மொழியோ அல்ல’ என்கிறீர்கள்.

பிறகு ஏன் அந்த மொழி மற்றவர்களால் பேசவோ, புழங்கவோ படவில்லை. பிராமணர் அல்லாதார் வேதம் கற்றால் காதில் ஈயம் காய்ச்சி ஊற்ற வேண்டும் என்ற ஸ்லோகம் எதற்கு?

பின்வரும் இன்றைய நிஜமான நிலை மாறுபட்டதாக இருக்கிறதே ஏன் ?

1. அனைத்துக் கோவில்களிலும் சமஸ்கிருதம் தான் முதன்மை மொழி. தமிழில் போனால் போகிறது என்று சில பாடல்களைப் பாடுகிறார்கள்.

2. பிராமணர் அல்லாதவர்களை அர்ச்சகர் ஆக்கும் எண்ணம் இன்று வரை நிறைவேறவில்லை. அவர்கள் இந்தத் தொழிலைக் கற்று விட்டு இன்று சும்மா இருக்கின்றனர்.

3. திருமணம், காதுகுத்து, புதுமனை புகும் விழா எனத் தமிழர்களின் அனைத்து நிகழ்வுகளும் பிராமணர்களால், நமக்குப் புரியாத சமஸ்கிருத மொழியில்தான் நடத்தப்படுகின்றன[ இதற்கு நானும் விதி விலக்கு இல்லை]

4. எந்தக் கோவில்களில் கூட்டம் வருகிறதோ அங்கு உள்ள சாமிகளுக்கு மட்டும் ஸ்லோகங்கள் உருவாக்கப்பட்டு பிராமணர்களால் பூசை செய்யப்படுகிறது.உ.ம் ...திருப்பதி, சபரிமலை, திருச்செந்தூர்.....

தூத்துக்குடி மாவட்டத்தில் மட்டும் ஏகப்பட்ட சிறுதெய்வங்கள் பலபேருக்குக் குலதெய்வங்களாக உள்ளன. ஆனால் சமஸ்கிருதத்தின் கருணைப் பார்வை அந்த தெய்வங்களுக்கு எல்லாம் ஏன் கிடைக்க வில்லை?

மேலே உள்ள கருத்துக்களில் ஏதேனும் பிழை இருப்பின் திருத்திக் கொள்கிறேன்.

என்னுடைய இந்த சந்தேகங்களைத் தெளிவுபடுத்துவீர்கள் என்ற நம்பிக்கையோடு

அன்புடன்

செல்வம்

அன்புள்ள செல்வம்,

மன்னிக்கவும், நான் ஏற்கனவே விரிவாக எழுதிய குறிப்புகளில் நீங்கள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில்கள் உள்ளன. அவற்றை கவனிக்காமல் மீண்டும் அதே கேள்விகளையே கேட்கிறீர்கள். இந்த வகையான கவனக்குறைவு உங்களிடம் இருப்பதில்இருந்தே உங்களுடைய மேலே சொல்லப்பட்ட எல்லா வினாக்களும் வந்துள்ளன. அவை பொதுவாக சூழலில் இருந்து வந்தடைந்த மனப்பதிவுகளே ஒழிய கொஞ்சமேனும் ஆராய்ந்து நோக்கப்பட்டவை அல்ல.

இந்துமதம் பொதுமைக்கு எதிரானது என்கிறீர்கள். பத்ரிநாத் முதல் கன்யாகுமரி வரை பல்வேறு இனம்சார்ந்த, மொழி சார்ந்த,சாதி சார்ந்த கோடிக்கணக்கான மக்களால் இந்துமதவழிபாடு கடைப்பிடிக்கப்படுகிறது என்ற கண்கூடான உண்மையையாவது மறுக்க மாட்டீர்கள் என நினைக்கிறேன். ஒவ்வொரு ஊரிலும் ஆசாரங்களும் நம்பிக்கைகளும் சடங்குகளும் வேறுபடுவதையும் மறுக்கமாட்டீர்கள்.

இந்த மக்கள் அனைவருக்கும் பொதுவான சில வழிபாட்டு முறைகளைத் தன் மையத்தில் இந்துமதம் உருவாக்கிக்கொண்டிருக்கிறது, அது இந்தியா முழுக்கப் பொதுமொழியாக விளங்கிய சம்ஸ்கிருதத்தில் உள்ளது என்று நான் சொல்கிறேன். அதில் என்ன பிழை? அப்படி ஒரு மையமொழி எந்த மதத்துக்குமே இருக்கக்கூடாது என்கிறீர்களா? அல்லது இந்துமதத்திற்கு மட்டும் இருக்கக்கூடாது என்கிறீர்களா? என்ன சொல்ல வருகிறீர்கள்?

இக்குறிப்புகளில் நான் முன்வைப்பது ஒரு விரிவான இந்திய வரலாற்றுப் பரிணாமத்தின் சித்திரத்தை. அதன் அடிப்படையில்தான் என் விளக்கங்களை அளிக்கிறேன். அது டாக்டர் அம்பேத்கர்,டி.டி.கோசாம்பி முதல் இன்று டாக்டர் ராமச்சந்திரன் வரையிலான வரலாற்றறிஞர்கள் கூறும் ஆய்வுத்தரவுகளையும் வாதங்களையும் அடிப்படையாகக் கொண்ட, தெளிவாக விளக்கப்பட்ட, ஒரு வரலாற்றுவரைவு.

இந்து மதம் எல்லா பக்தர்களையும் சமமாக நடத்தியது, நடத்துகிறது என நான் சொல்லவில்லை. உலகில் உள்ள எந்த மதமும் அப்படி ஒரு மானுடசமத்துவத்தை உள்ளடக்கமாகக் கொண்டது அல்ல. எல்லா மதங்களுமே அதன் நம்பிக்கையாளர்களிடையே தெளிவான உயர்வுதாழ்வுகளை வரையறுத்து வைத்திருந்தவைதான். இன்றுகூட எந்த மதமும் அந்த ஏற்றத்தாழ்வுகளை முழுமையாக விட்டுவிடவும் இல்லை.

ஏனென்றால் மானுடவரலாற்றின் கடந்த காலத்தில் மனிதர்களெல்லாம் நடைமுறையில் சமம் என்ற சிந்தனையே இருந்ததில்லை. அந்தச்சிந்தனை ஒரு இலட்சியக்கனவாக உதித்துப் பல்வேறு சமூகப்போராட்டங்கள் வழியாக வளர்ந்து, சென்ற முந்நூறாண்டுகளுக்குள் உலகில் சில இடங்களில் சோதனை நடைமுறைக்கு வந்தது. இந்த நூறாண்டுக் காலத்தில்தான் உலகளாவிய ஒரு கருத்தாக அது ஏற்கப்பட்டுள்ளது. இன்னும் மானுட இனத்தில் நேர்பாதி அதை ஏற்றுக்கொண்டதில்லை. ஆணும் பெண்ணும்

சமம் என்பதை ஏற்றுக்கொள்ளாத மக்களே இன்றைய உலகில் பெரும்பான்மை என்பதை மறக்கவேண்டாம்.

இதுவரையிலான மானுடப்பண்பாட்டின் வளர்ச்சி என்பது மனிதர்களைத் திரட்டி மேல்கீழாக அடுக்கி உறுதியான சமூக அமைப்புகளை உருவாக்குவதாகவே இருந்து வந்துள்ளது. உலகமெங்கும் உள்ள எல்லா சமூகங்களும் அப்படி மேல்கீழ் அடுக்குகளாகக் கட்டப்பட்டவைதான். அவ்வாறு இந்தியநிலத்தில் பல்வேறு சமூகங்கள் உருவான காலகட்டத்தில் பிறந்து வந்தது இந்துமதம்.

இந்துமதம் ஒரு தொகைமதம். இந்தியப்பெருநிலத்தில் பல்லாயிரம் வருடங்களாக இருந்துவந்த பல்லாயிரம் இனக்குழுக்கள் சாதிமுறை என்ற அமைப்புக்குள் மேல் கீழாக அடுக்கப்பட்டு இங்குள்ள சமூகமுறை உருவானது. எந்த சாதி நிலத்தையும் வணிகத்தையும் வென்றெடுத்ததோ அது மேலே சென்றது. பிற சாதிமேல் அதிகாரம் செலுத்தியது. சமூகத்தை வழிநடத்திச்சென்றது.

இவ்வாறு பல்வேறு இனக்குழுக்கள் ஒரே சமூகமாகத் தொகுக்கப்பட்டபோது அந்த இனக்குழுக்களின் வழிபாட்டுமுறைகளும் நம்பிக்கைகளும் ஆசாரங்களும் ஒன்றாகத் தொகுக்கப்பட்டன. அவ்வாறுதான் இந்துமதம் உருவானது.

பல்வேறு வழிபாட்டுமுறைகளும் சிந்தனைகளும் ஒன்றானபோது அவற்றுக்குள் ஓர் உரையாடல் நிகழ்ந்தது. பலநூறாண்டுக்காலம் பல தளங்களில் நிகழ்ந்த உரையாடல் அது. அந்த உரையாடலில் ஒவ்வொரு வழிபாட்டுமுறையும் ஒவ்வொரு சிந்தனையும் இன்னொன்றால் பாதிக்கப்பட்டன. காலப்போக்கில் அதற்கு ஒரு மையஓட்டம் உருவாகி வந்தது. அந்த மையம் பிற அனைத்தையும் இணைக்க ஆரம்பித்தது.

நடைமுறையில் இந்தப் பல்வேறு சிந்தனைகளில் எது வலுவானதோ அது பிறவற்றை விட அதிக முக்கியத்துவம் அடைந்து மையமாக ஆவதே வழக்கம். உலகமெங்கும் பார்த்தால் அந்த வலுவான தரப்பு பிற எல்லாத் தரப்புகளையும் அழித்து இல்லாமலாக்கி வெற்றிகொண்டிருப்பதையே நாம் காணமுடியும். இந்தியாவில் அது நிகழவில்லை. மாறாகப் பிறவற்றை ஒருங்கிணைத்துக்கொண்டு அந்த வலுவான தரப்பு வளர்ந்ததையே காண்கிறோம்.

இந்துமதத்தைப் பொறுத்தவரை வேதமரபு என்பதுதான் வலுவானது. ஆனால் அது பிற மரபுகள் அனைத்தையும் ஒருங்கிணைப்பதாகவே அது இருந்தது. அனைத்தில் இருந்தும் முக்கியமான அம்சங்களை வாங்கிக்கொண்டு அது வளர்ந்தது. அந்த வளர்ச்சிப்போக்கில் வேதமரபு வேதாந்தமாகவும் பின்னர் பக்திமதங்களாகவும் மாறியது.

வைதிகமரபில் இருந்த பிரம்மம் என்ற கருத்துதான் இந்த இணைப்புப்போக்கு உருவாவதற்கான காரணம். பிரம்மம் என்பது பெயரற்ற, உருவமற்ற, எங்கும் நிறைந்த, எல்லாமாக ஆகிய ஒரு தத்துவார்த்தமான தெய்வம். அந்தத் தத்துவமாக நாம் எந்தக் கடவுளையும் காணமுடியும். கல்லையும் மண்ணையும் மிருகங்களையும் எல்லாம் பிரம்மமாக விளக்கமுடியும். உங்கள் உள்ளூர் மாரியம்மனைக்கூடத் தோத்திரங்களில் பிரம்ம சொரூபிணி [பிரம்மமே உருவெடுத்து வந்தவள்] என்றுதான் சொல்லி வழிபடுவார்கள்.

இந்தியாவெங்கும் இந்தத் தொகுப்புநிகழ்வு அன்றும் இன்றும் நிகழ்ந்துகொண்டே இருக்கிறது. இந்து மெய்ஞானம் எவரையும் மேலே கீழே என வரையறுக்கவில்லை. சமூகத்தில் யார் ஆதிக்கம் செலுத்துகிறார்களோ அவர்கள் இந்துமதத்திலும் மேலாதிக்கம் செலுத்துபவர்களாக ஆகிறார்கள். இந்துமதத்தின் ஆசாரங்களை அவர்கள் அதற்கேற்ப வரையறைசெய்துகொள்கிறார்கள்.

நூறுவருடம் முன்பு இங்கே வரலாற்றை எழுதிய வெள்ளையர் இந்துமதம்தான் மக்களை சாதி அடிப்படையில் பிரித்து, ஏற்றத்தாழ்வுகளை உருவாக்கியது என எழுதிவைத்தனர். அவர்களில் பெரும்பாலானவர்கள் கிறித்தவ மதமாற்ற எண்ணம் கொண்டவர்கள். சென்ற நூறாண்டுக்காலத்தில் ஏராளமான வரலாற்று ஆய்வுகள் மூலம் அது பொய் என நிறுவப்பட்டுள்ளது. இந்தியாவில் சாதிமுறையும் ஏற்றத்தாழ்வும் உருவாகி வந்த வரலாறு துல்லியமாகவே எழுதப்பட்டுள்ளது. ஆனால் நூறுவருடமாகவே வரலாற்றை வாசிக்காத அரசியல்வாதிகளால் சொல்லப்படும் சில்லறை வரிகளே நம் மேடைகளில் உலவுகின்றன. உங்களைப்போன்றவர்கள் எந்த பரிசீலனையும் இல்லாமல் அதை நம்புகிறீர்கள்.

இந்து மதத்தின் மெய்ஞானம் ஏற்றத்தாழ்வை வரையறைசெய்கிறது என்றால் அதை இந்துமதத்தால் மாற்றிக்கொள்ளவே முடியாது. ஆனால்

உண்மை அப்படி அல்ல . இந்துமதத்தின் அமைப்புக்குள்ளேயே எப்போதும் மேலே உள்ள சாதிகள் கீழே வருவதும் கீழே உள்ள சாதிகள் மேலே செல்வதும் நடந்துகொண்டே இருக்கிறது என்பதே வரலாறு. அந்த மாற்றங்களுக்கான காரணம் பொருளாதாரம் சார்ந்தது, அரசியல் சார்ந்தது. கண்டிப்பாக மதம் சார்ந்தது அல்ல

இந்தியவரலாறெங்கும் எளிய நிலைகளில் வாழ்ந்த பல்வேறு அடித்தள சாதிகள் வரலாற்றின் ஓட்டத்தில் ராணுவபலம்பெற்று மேலாதிக்கத்தை உருவாக்கிக்கொண்டதைப் பார்க்கலாம். அவர்கள் பேரரசுகளை உருவாக்கினார்கள். இந்துமதத்தில் மேலாதிக்கம் பெற்றார்கள். சந்திரகுப்த மௌரியர் முதல் இதைக் காணலாம். தமிழகத்தில் உள்ள பெரும்பாலான பேராலயங்களைக் கட்டிய நாயக்கர்கள் ஆந்திராவில் உள்ள எளிய மாடுமேய்க்கும் சாதியினர்தான். எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னால் அவர்கள் தற்செயலாகக் குதிரை மேய்க்க ஆரம்பித்தார்கள். பெரிய ராணுவ சக்தியாக மாறிப் பேரரசுகளை உருவாக்கினார்கள். நாம் காணும் தமிழகக் கோயில் ஆசாரங்களை எல்லாம் அவர்கள்தான் தீர்மானித்தார்கள். இப்படித்தான் இந்திய வரலாறு செயல்படுகிறது.

ஆகவே இந்துமதத்தில் இருந்த ஏற்றத் தாழ்வுகள் இந்துமதத்தின் மையக்கருத்துக்கள் அல்ல. அவை அந்தந்தக் காலகட்டத்து சமூக யதார்த்தங்கள் மட்டுமே. எந்த ஒரு மதமும் அதைப்பின்பற்றும் மக்களின் சமூக அமைப்பையும் நம்பிக்கைகளையும் ஒட்டித்தான் செயல்பட முடியும்.

இந்துமதத்தின் மையநூல்கள் எவை என நூற்றாண்டுகளாக வரையறை செய்யப்பட்டுள்ளது. அவை சமூக ஏற்றத்தாழ்வுகளையோ அதிகாரத்தையோ பேசக்கூடியவை அல்ல. அவை முழுக்க முழுக்கத் தத்துவநூல்கள். அவற்றையே சுருதிகள் என இந்துமதம் சொல்கிறது. அவைதான் மாற்றமில்லாதவை.

சமூக ஆசாரங்களையும் சடங்குகளையும் பேசும் நூல்களை ஸ்மிருதிகள் என்றுதான் இந்துமதம் சொல்கிறது. அவை காலந்தோறும் மாறக்கூடியவை. சாதிமுறையைக் கடுமையாக வரையறை செய்யும் மனு ஸ்மிருதி அவற்றில் ஒன்று. அதில்தான் நீங்கள் சுட்டிக்காட்டியது போல வேதங்களை பிராமணரல்லாதவர்கள் கற்கக்கூடாது என சொல்லப்பட்டுள்ளது.

ஆனால் அதற்கு முன்னர் யம ஸ்மிருதி, நாரத ஸ்மிருதி, யாக்ஞுவால்கிய ஸ்மிருதி போன்ற பல நூல்கள் இருந்துள்ளன. அவற்றில் எல்லா சாதியினரும் கண்டிப்பாக வேதங்களை ஓதியாகவேண்டும் என்று சொல்லும் ஸ்மிருதிகள் கூட உள்ளன. அவை மன்னர்களால் மாற்றப்பட்டு மனு ஸ்மிருதி கொண்டுவரப்பட்டது. அதாவது இவை இந்துமதத்தின் மாறாத நூல்கள் அல்ல. அவை மதநூல்களே அல்ல,ஆசார நூல்கள் மட்டுமே. மதம் அவற்றுக்குப் பயன்படுத்தப்படுகிறது

எப்படி மன்னர்கள் மனுஸ்மிருதியைக் கொண்டுவந்தார்களோ அதே போலத்தான் ஜவகர்லால் நேரு என்ற நவீன ஆட்சியாளர் மனுஸ்மிருதிக்கு நேர் எதிரான ஹிந்து சட்டத்தைக் கொண்டுவந்தார். அதை அம்பேத்கர்ஸ்மிருதி என்று சொல்லலாம். மறைந்த சித்பவானந்தர் அப்படித்தான் சொல்வார். இந்துமதம் என்ன அம்பேத்கர்ஸ்மிருதிக்கு எதிராகக் கொந்தளித்தா எழுந்தது? ஒரு சிறு திருத்தம்கூட இல்லாமல் அது இந்த சமூகத்தால் ஏற்கப்படவில்லையா? வெறும் ஐம்பதாண்டுக்காலத்தில் இந்துமதம் அதன் ஆயிரம் வருட நடைமுறைகள் பலவற்றை முற்றிலும் தலைகீழாக்கிக்கொள்ளவில்லையா? ஏனென்றால் அது ஆசாரமே ஒழிய மதத்தின் சாராம்சம் அல்ல என எல்லாருக்கும் தெரியும்.

ஆகவே இந்துமதத்தில் பொதுமை இல்லை என்பது போன்ற மேலோட்டமான வரிகளை விடுங்கள். எந்த மதத்திலும் இறந்த காலத்தில் பொதுமை இருந்ததில்லை. நவீன காலகட்டம் உருவாக்கிக்கொண்ட மானுடப் பொதுமை என்ற கருத்தை வேறெந்த மதத்தை விடவும் எளிதாக இந்துமதம் ஏற்றுக்கொண்டதென்பதே வரலாறு. மானுடப்பொதுமை பேசிய சிந்தனையாளர்கள் கிறித்தவ மதத்துக்கு எதிராக முந்நூறாண்டுக்காலம் பல்வேறு தியாகங்களை செய்து போராடினர் என்பதை நினைவில் கொள்ளுங்கள். இஸ்லாமிடம் அப்படி போராடுவதற்கான வாய்ப்பேகூட இன்றுமில்லை என்பதை நினைவுறுங்கள்.

இந்துக்கோயில்களில் எல்லா சாதியினரும் நுழைய எந்தத் தடையும் இன்றில்லை. இன்றைக்கு எண்பத்தைந்து வருடம் முன்பு அனைவரையும் ஆலயத்துக்குள் அனுமதிப்பதற்கான, பொதுமைக்கான, குரல் இந்துமதத்தின் நாயகர்களிடமிருந்தே வந்தது. அதற்கான இயக்கத்தை காந்தியும், ஆரியசமாஜமும், ராமகிருஷ்ண இயக்கமும், நாராயணகுருவும், சகஜானந்தரும் முன்னெடுத்தபோது இந்து மதத்தில் இருந்து

அப்படியொன்றும் பெரும் எதிர்ப்பு கிளம்பவுமில்லை. மிகச்சில அடிப்படைவாதிகள் எதிர்த்தனர், அவர்கள் உடனே ஓரம் கட்டப்பட்டனர். ஏனென்றால், இந்து மதத்தின் மூலநூல்கள் எவையும் மானுடப்பொதுமைக்கு எதிரானவை அல்ல. அவை மானுட ஆன்மீகத்தைப்பேசும் தத்துவ நூல்கள். அந்த மூலநூல்களைச் சுட்டிக்காட்டி நாராயணகுருவும் காந்தியும் சகஜானந்தரும் எதிர்ப்புகளை வாயடைக்கச்செய்ய முடிந்தது.

இன்று அன்னியமதத்தவர் உள்ளே நுழையத் தடை உள்ளது. அது ஓர் நடைமுறைத்தடை. இந்து ஆலயங்கள் வெறும் வழிபாட்டிடங்கள் அல்ல, தொல்லியல்மையங்களும்கூட. ஆகவே அவை சுற்றுலாமையங்களாக ஆகிவிடும் வாய்ப்புள்ளது. அது வழிபாடுகளுக்குத் தடையாக இருக்கலாகாதென்ற நோக்கில் கருவறையை ஒட்டிய இடங்களில் பிற மதத்தவர்களுக்குத் தடை உள்ளது. மற்ற இடங்களில் எல்லாரும் அனுமதிக்கப்படுகிறார்கள். அந்தத் தடையும் தேவையில்லை என்பதே என் எண்ணம். அது இந்துமதத்தின் 'கொள்கை' அல்ல. மிக எளிதாக நீக்கப்படக்கூடிய ஒரு நடைமுறை மட்டுமே.

இன்னும்கூட ஒரு குறிப்பிட்ட சாதியினருக்குச் சொந்தமான கோயில்களில் பிற சாதியினர் நுழைய அச்சாதியினர் தடை செய்கிறார்கள். குலதெய்வக் கோயில்களில் பிற குலத்தவர் நுழையத் தடை உள்ள இடங்கள் உண்டு. அவை சாதிப்பிரச்சினைகள், குலப்பிரச்சினைகள். அந்நோக்கில் அவை விவாதிக்கப்பட்டுக் களையப்படவேண்டியவை. மதுரைக்கோயிலில் தலித் நுழைய அனுமதிக்கும் இந்து மதம் உத்தப்புரத்தில் மட்டும் அனுமதிக்காதா என்ன?

சிதம்பரம் கோயிலில் சைவத்திருமுறைகள் குறைந்தது ஆயிரமாண்டுகளாக ஒவ்வொருநாளும் ஓதப்பட்டு வருகின்றன என்பது தெரியுமா? என்றாவது அதைப் போய் சோதித்துப்பார்த்திருக்கிறீர்களா? நான் அழைத்துச்சென்ற ஈழத்து நண்பர்கள் அங்கே கருவறைமுன் நின்று திருப்புகழ் பாடியிருக்கிறார்கள்- பலமுறை. அங்கே இந்தியாமுழுக்க உள்ள எல்லா ஆலயங்களிலும் இருப்பதுபோல சம்ஸ்கிருதமே கருவறையின் மொழியாக இருக்கிறது, அவ்வளவுதான். இப்போது தமிழும் சேர்க்கப்பட்டுள்ளது.

இந்தியாவெங்கும் இந்து ஆலயங்களுக்கு வழிபாடுசார்ந்த தொன்மையான நடைமுறைகள் இருக்கும். அந்த நடைமுறைகளைத் தொகுத்துள்ள நூல்களை நிகமங்கள் ஆகமங்கள் என்பது வழக்கம்.

தமிழகத்துக்கோயில்களில் அனேகமாக அனைத்துமே ஆகம முறைப்படி வழிபடப்படுபவை. ஆகமங்களே கோயில்களுக்கு சக்தியை அளிப்பவை என்பது பக்தர்களின் நம்பிக்கையாக இருந்து வருகிறது. அவற்றை மாற்றுவதை அவர்கள் ஏற்பதில்லை.

சிதம்பரம் கோயில் நெடுநாட்களாகவே அதற்காக உருவாக்கப்பட்ட பூசாரிக்குலங்களின் பொறுப்பில் உள்ளது. அவர்கள் ஆகமங்களை முழுமையாக நம்பி இறுக்கமாகக் கடைப்பிடிப்பவர்கள். எந்தச்சடங்குகளையும் மீற அனுமதிக்காதவர்கள். ஏனென்றால் அது அவர்களின் தொழிலும் கூட. அதில் மாற்றம் என்பது அவர்கள் தொழிலை இழப்பதுதான். ஆகவேதான் கோயிலின் வழமையான சில முறைமையை மீறி ஆறுமுகச்சாமி என்பவர் தமிழில் பாட முயன்றபோது அவர் அந்த அர்ச்சகர்களால் தாக்கப்பட்டார். அவர் தமிழில் பாடியதற்காகத் தாக்கப்படவில்லை, குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட நேரத்தில் பாடியதற்காகத் தாக்கப்பட்டார். அது ஒரு தொழில்போட்டி மட்டுமே. எந்தத் தொழிலிலும் அது நிகழும்.

அந்தத் தாக்குதல் இந்துமதத்தின் பக்தர்களால் நடத்தப்படவில்லை. அந்த அர்ச்சகர் முறை மாற்றப்பட்டபோது இந்துமதம் கொதித்தெழவும் இல்லை. அத்தகைய நூற்றுக்கணக்கான மாறுதல்கள் வழியாகத்தான் அது வளர்ந்து வந்தது, முன்னால் செல்கிறது. இந்துமதத்தின் எந்த ஒரு ஆசாரமும் நம்பிக்கையும் விவாதத்துக்கு திறந்து வைக்கப்பட்டதாகவே இன்றுவரை உள்ளது. அதை காலத்துக்கு ஏற்ப மாற்றுவது எப்போதும் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. மாற்றங்கள் நடந்துகொண்டே இருக்கின்றன.

மக்களிடம் வரும் எந்த ஒரு ஆக்கபூர்வமான மனமாற்றத்தையும் இந்து மதம் தடுக்காது. ஏனென்றால் இந்துமதத்தின் மூலநூல்கள் என்பவை நெறிநூல்கள் அல்ல, தூயஞானநூல்கள் மட்டுமே. அவை இதைச்செய் இதைச்செய்யாதே என தடுக்கவில்லை. இதை இப்படி சிந்தனைசெய்து பார்க்கலாமே, இப்படி தியானிக்கலாமே என்று மட்டுமே சொல்கின்றன. நான் இந்துவாக இருப்பது இந்த சுதந்திரத்தை இந்த மதம் அளிக்கிறது என்பதனாலேயே.

ஆகவே இந்துமதத்தைச்சேர்ந்த ஓர் அமைப்போ ஓர் அறிஞரோ சொல்வது இந்துமதத்தின் கூற்று எனக் கொள்வது மோசடி மட்டுமே. அப்படி எவரும் எதையும்சொல்லலாம். ஆனால் எவரும் விதி சொல்ல, கட்டுப்படுத்த

அதிகாரம் கொண்டவர்கள் அல்ல. இந்துமதம் ஒரு அமைப்பு அல்ல. ஒரு ஞானமார்க்கம் மட்டுமே. அதில் பலநூறு வழிகள் உள்ளன. எல்லா வழிகளுமே இங்கே அனுமதிக்கப்பட்டுள்ளன. அவற்றில் நாத்திக ஞானமார்க்கமும் அடக்கம். வாசித்துப்பாருங்கள்

தமிழ் நீசபாஷை என்று சொன்னது யார்? இந்துமதத்தின் எந்த நூல்? எந்த ஞானி? யாரோ எங்கோ சொன்னார்கள் என நீங்கள்தான் சொல்லிக்கொண்டிருக்கிறீர்கள். உள்ளூர தமிழ் மீது உங்களுக்கிருக்கும் ஆழமான இழிவுணர்வே அதற்குக் காரணம். தமிழ் காட்டுமிராண்டிமொழி என்று செவிகளில் விஷமூற்றும் வரியைச் சொன்னவர் இப்படி அவதூறுப் பிரச்சாரம்செய்பவர்களின் வழிகாட்டியான ஈ.வெ.ராதான், எந்த இந்து ஞானியும் அல்ல.

நேர்மாறாக தெய்வத்தமிழ் என வைணவர்களாலும் சிவன் காதில் அணியும் குண்டலம் என்றும் அவன் உடுக்கின் நாதத்தால் அமைக்கப்பட்டது என்றும் சைவர்களாலும் ஆயிரத்துக்கும் மேற்பட்ட வருடங்களாக வழிபடப்படுகிறது தமிழ். ஆயிரமாண்டுகளில் ஸ்ரீரங்கத்திலோ திருமாலிருஞ்சோலையிலோ நாலாயிரத்திவ்யப் பிரபந்தம் பாடப்படாத ஒருநாள் கடந்துசென்றதுண்டா? மதுரையிலோ நெல்லையிலோ திருமுறை பாடப்படாத ஒரு நாள் உண்டா? என்ன பேசுகிறீர்கள்?

நான் முந்தைய கட்டுரையிலேயே சொல்லியிருந்தேன், சம்ஸ்கிருதம் என்றுமே அறிவுச்செயல்பாட்டுக்குரிய மொழிதான் என. பேசப்பட்ட புழக்கமொழி அல்ல அது. எஸ்பராண்டோ போலப் பொதுமொழியாக உருவாக்கப்பட்டது அது. அந்தக்கட்டுரையிலேயே சொல்லியிருந்தேன், அதன் பெரும் ஆசிரியர்கள் பிராமணர்கள் அல்ல என. அது சமணர்களுக்கும் நாத்திகர்களுக்கும்கூட மூலமொழிதான் என. எதையுமே நீங்கள் கண்டுகொள்வதில்லை.

ஏன் அனைத்துக்கோயிலிலும் சம்ஸ்கிருதம் மூலமொழியாக இருக்கிறது, அதற்கான வரலாற்றுக்காரணம் என்ன என்றுதான் நான் அக்கட்டுரையில் விளக்கியிருந்தேன். என்ன காரணத்தால் பிராமணர்கள் கோயிலில் பூஜைக்கு வைக்கப்படுகிறார்கள் என விரிவாக சமூகநோக்கில்தான் ஆராயவேண்டும். திருமணம் காதுகுத்து எல்லாவற்றுக்கும் பிராமணர்கள் வருவது என்பது இன்று நீங்களாக விரும்பித் தேர்ந்தெடுப்பது. தமிழகத்தின் பெரும்பாலான சாதிகளில் அப்படி வழக்கம் இல்லை. இன்று பணம்

வரும்போது அதை ஏன் நீங்கள் தேர்ந்தெடுக்கிறீர்கள் என்பதை நீங்கள்தான் சொல்லவேண்டும்.

இந்துமதம் எங்கும் உங்களிடம் அப்படிச் சொல்லவில்லை. பிராமணர்கள் இந்துமதத்தின் பூசகர்கள் என்பது ஒரு வழிவழியான மரபு, அவ்வளவுதான். அது இந்துமத விதி அல்ல.காசி, ஸ்ரீசைலம் போன்ற பல பெருங்கோயில்களில் பக்தர்கள் அனைவருமே கருவறைசென்று தொட்டு பூஜை செய்யலாம் என்ற விதி ஆயிரமாண்டுகளாக உள்ளது.. இன்றும் இந்தியாவின் பெரும்பான்மையான கோயில்களில் பிராமணர்கள் பூஜைசெய்யவில்லை . பலநூறு பூசாரிக்குலங்கள் உள்ளன. பல சமூகங்கள் அவர்களுக்குள்ளாகவே பூசாரிக் குலங்களை உருவாக்கிக்கொண்டிருக்கின்றன.

சம்ஸ்கிருதம் எப்போது கருவறைக்குள் வருகிறது? ஒரு தெய்வம் குல, இன, பிராந்திய அடையாளம் விட்டுப் பெருந்தெய்வமாக ஆகும்போதுதான். அய்யா , அதைத்தானே நான் கட்டுரையிலே சொல்லியிருந்தேன். அதையே சொல்லித் திருப்பிக் கேள்வி கேட்டால் என்னய்யா செய்வேன்?

அன்புள்ள செல்வம், உங்கள் பிரச்சினைதான் என்ன? நான் எழுதியிருந்த வினாவுக்கு பதிலாக நீங்கள் கேட்டிருக்கும் கேள்விகள் எங்கெல்லாம் எதையெல்லாம் கேட்கின்றன என்று பாருங்கள். நீங்கள் இந்து என்கிறீர்கள். இந்துமதம் பொதுமைக்கு எதிரானது என்கிறீர்கள், காரணம் சாதி என்கிறீர்கள், சம்ஸ்கிருதம் என்கிறீர்கள், பிராமணர் என்கிறீர்கள். எதை வலுக்கட்டாயமாக நம்ப விரும்புகிறீர்கள்? அதற்கான உளவியல் காரணம் என்ன? அந்தக் காரணத்தை இழக்கலாகாது என்பதற்காகத்தான் எழுதிய எதையுமே வாசிக்காமல், புரிந்துகொள்ளாமல் மீண்டும் கேட்கிறீர்களா?

அந்தக்காரணம் என்ன தெரியுமா? பொதுமைக்கு எதிரானவர் நீங்கள் என்பதே. உங்கள் சாதியநோக்கைத் தாண்டிச்செல்ல உங்களால் முடியவில்லை என்பதே. அதற்கான பழியைப் போட நீங்கள் இந்துமதத்தை பிராமணர்களை தேடிக் கண்டுபிடிக்கிறீர்கள்.

இந்த எதார்த்தத்தை நீங்கள் மானசீகமாக ஒப்புக்கொண்டால் நீங்கள் முதலில் உங்கள் சாதியின், குடும்பத்தின் உளவியலில் ஊறியுள்ள பொதுமைக்கு எதிரான அம்சங்களை நோக்கித் திரும்புவீர்கள். அதற்கான ஊற்று என்ன என்று உங்கள் இனக்குழு மனநிலையில் இருந்து கண்டுகொள்வீர்கள். அதைக்களைய உங்களைத்

தூய்மைப்படுத்திக்கொள்ள ஆரம்பிப்பீர்கள். மதம், பிராமணர் எனப் பழிசொல்ல இடம்தேடி அலைய மாட்டீர்கள். அதுதான் தொடக்கம்.

பிராமணர்களின் சாதியுணர்ச்சி பற்றி சொல்கிறீர்கள். நீங்கள் என்ன சாதிக்கு அப்பாற்பட்டவரா? சாதியை விட்டு விலகி விட்டீர்களா? பிராமணரல்லாதவர்களின் சாதியுணர்ச்சியைவிட பிராமணர்களின் சாதியுணர்ச்சி ஒன்றும் அதிகமில்லை. நாமெல்லாருமே ஒரே கடந்தகாலக் குட்டையில் ஊறியவர்கள்தான். அதைக் கடந்து செல்வதைப்பற்றி சிந்திப்போம். நாம் மாறினால் நம் மதமும் மாறும்.

எனக்கு முன்னால் நிற்கும் பிரச்சினை இதுதான் செல்வம். நான் பக்கம் பக்கமாக ஆதாரங்களுடன் எழுதுவேன். அதில் எதையுமே படிக்காமல், பொருட்படுத்தாமல், முன்னர் சொன்னதையே திருப்பிச்சொல்லி எனக்குச் சுடச்சுட பதில் சொல்லிவிட்டதாக நினைத்துக்கொள்வார்கள் பிறர். ஈவேராவின் வைக்கம் போராட்டம் முதல் இன்றைய காந்தி வரை இதுவே நிகழ்கிறது. நான் நிறுத்திக்கொள்ளும்போது என்னை 'வாயடைக்க' செய்துவிட்டதாகக் கொண்டாடியும் கொள்வார்கள்

அதைத்தான் நீங்கள் செய்யப்போகிறீர்கள் என்றால் சரி. இல்லையேல் திருப்பி வாசியுங்கள், புரிந்துகொள்வீர்கள்.

## (2) இந்துமதம் சம்ஸ்கிருதம் பிராமணர்-கடிதங்கள்

பெருமதிப்பிற்குரிய திரு.ஜெமோ. அவர்களுக்கு,

இன்று உங்கள் வலை தளத்தில் " இந்து மதம்,சமஸ்கிருதம், பிராமணர்" என்ற தலைப்பில் நீங்கள் திரு.செல்வம் அவர்களுக்கு எழுதிய பதில் கட்டுரை,மிகுந்த ஆழமான,ஆராய்ச்சி பூர்வமான, அர்த்தமுள்ள கருத்துக்களுடன் அருமையாக இருந்தது.

உண்மையில் இதைப் படித்தவுடன்,நானும் இந்து மதத்தை சார்ந்தவன் என்ற பெருமித உணர்வு ஏற்பட்டது.வைணவ பிராமணன் என்ற (உண்மையான பிராமணனா நான் என்று எனக்கு தெரியாது ) முறையில் என்னால் உறுதிபடக் கூறமுடியும் இன்றும் எங்கள் வைணவக் கோயில்களில் நாலாயிர திவ்யப் பிரபந்தப்பாடல்களுக்குத்தான் முன்னுரிமை உள்ளது.தெய்வத்திற்கு அடுத்தபடியாக (ஏன் சில சமயங்களில் மேலாகவே ) போற்றப்படும் பன்னிரு ஆழ்வார்களில் பெரும்பான்மையோர் அந்தணர்களே அல்ல என்பது தாங்களும் அறிந்ததே.இந்தக்கால சூழ்நிலையில், தாங்கள் தான் பெரிய அறிவு ஜீவிகள் என்று கூறிக் கொண்டு இந்து மதத்தை வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம் கொச்சைப்படுத்திக் கொண்டு இருக்கும் நேரத்தில்,நீங்கள் ஒருவர் மட்டும் தனி ஆளாக நின்று விளக்கம் அளிப்பதற்கு உங்களுக்கும் அந்த ஆண்டவனுக்கும் நன்றி கூறுகிறேன்.தொடரட்டும் உங்கள் பணி என்றும்.

என்றும் அன்புடன்,<br>
அ.சேஷகிரி

அன்புள்ள சேஷகிரி

ஆம், நீங்கள் சொல்வது உண்மை. ஆனால் இந்துக்களிலேயே ஒருசாராருக்கு சம்ஸ்கிருத மோகம் காரணமாகத் தமிழ்மீது இளக்காரம் இருந்தது என்பதையும் மறுக்கமுடியாது. அறியாமையின் விளைவான அந்தக் கூற்றுக்களே அந்த அவதூறுகள் உருவாகக் காரணமாகவும் அமைந்தன இல்லையா?

ஜெ

ஜெ,

சமஸ்கிருதம் எல்லாத் தரப்பு மக்களாலும் பயன்படுத்தபட்டது. அது பிராமணருக்கு மட்டுமான மொழி அல்ல.

கணபதி ஸ்தபதி ஒரு பேட்டியில் கூறுகிறார்.

சிந்து என்கிற வார்த்தை எப்படி வந்தது? இந்து என்கிற வார்த்தையிலிருந்து மருவி வந்ததாகப் பலரும் சொல்கிறார்கள். இது தவறு. விந்திய மலையிலிருந்து வந்ததுதான் இந்து. இப்படிப் பல திரிப்பு வேலைகள் இங்கே நடந்திருக்கின்றன. விந்திய மலையில் சிவபெருமான் உடுக்கடிக்க, அந்த உடுக்கிலிருந்து தோன்றிய சத்தம் தெற்குப் பகுதியில் தமிழாகவும், வடக்குப் பகுதியில் சமஸ்கிருதமாகவும் மாறியது என்கிறார் பாணினி. இதுவும் தவறு. சமஸ்கிருதம் தமிழனின் மொழி. தமிழனுக்குச் சொந்தமான மொழி. காலப்போக்கில் அது தமிழர்களுக்கு சம்பந்தமில்லாததாக மாறிவிட்டதே ஒழிய ஆதியில் சமஸ்கிருதத்தைப் பேசியவன் தமிழன்தான். எங்களுக்கெல்லாம் ஞான குருவாக விளங்கும் மயன்தான் தெற்கிலிருந்து வடக்குக்கு சமஸ்கிருதத்தைக் கொண்டு போனான். நான் சொல்கிற இந்தக் கருத்துகளை மறுத்துச் சொல்கிற தெளிவு யாருக்காவது உண்டா? உண்டு என்றால் தாராளமாக எடுத்துச் சொல்லலாம்.(http://www.thamilworld.com/forum/index.php?showtopic=595)

இது உண்மையோ இல்லையோ ஆனால் சமஸ்கிருதம் அனைவராலும் பயன்படுத்தப்பட்டது.

கருணாநிதி ஒரு விகடன் பேட்டியில் அவர் தந்தைக்கு சமஸ்கிருதம் தெரியும் என்று கூறுகிறார்.

சமஸ்கிருதத்துக்குத் தமிழ்நாட்டில் இந்த நிலை ஏற்பட்டது போன்ற தற்கால உதாரணம் கர்னாடக இசை. முற்காலத்தில் அனைத்து மக்களும் பாடிய ரசித்த கர்னாடக இசை இப்போது 95% பிராமணர்களால் செய்யப்படுகிறது. இன்னும் 50 ஆண்டுகளில் கர்நாடக இசை பிராமண இசை அதற்கும் தமிழர்களுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை என்று பிரச்சாரம் ஆரம்பித்து விடும்.

ராஜேஷ் கோவிந்தராஜன்

அன்புள்ள ஜெயமோகன் சார் வணக்கம் ,

தங்களின் ,சமஸ்க்ருதம் ,ஹிந்து மதம் பதில் மிகத் தெளிவாக இருந்தது . பொதுமை மற்றும் தமிழ்ப் பற்றாளர்கள் பெரும்பாலும் சாதியைத் தாண்டிப் பேசுவது மிகவும் குறைவு என நானும் பலமுறை கண்டிருக்கிறேன் .எங்கள் கொங்கு மண்டலத்தில் பெரும்பான்மையான திருமணங்கள் பிராமணர்களை வைத்து நடந்து வந்தது .கடந்த நான்கைந்து ஆண்டுகளாகத் தமிழ்க் குழுக்கள் பிராமண எதிர்ப்புப் பிரசாரத்தைத் துவக்கித் தொடர்ந்து நடத்தினார்கள் . தற்பொழுது பல திருமணங்கள் தெய்வத் தீந்தமிழ் முறைப்படி என்று அழைப்பிதழில் போடுவது அதிகரித்து வருகிறது. தெய்வத் தீந்தமிழ் முறை என்று திருமண முறை இருந்ததா .தாங்கள் விளக்க வேண்டும் .

என் சொந்த அனுபவம் , எங்கள் பகுதியில் பிரபலமான செஞ்சேரிமலை மந்தரகிரி வேலாயுதசாமி திருக்கோவில், இங்கு பிராமணர்களால் பூஜை செய்யப்படுகிறது .கோவிலில் ஓதப்படும் சமஸ்க்ருத மந்த்ரங்கள் புரியாவிட்டாலும் கூட மனதில் தன்னை மறந்த நிலையை நான் பலமுறை உணர்ந்துள்ளேன் .நண்பர்களும் இதுபோல உணர்ந்துள்ளார்கள் .இறைவனை வழிபட மொழி ஒரு காரணம் அல்ல என்பது என் எண்ணம் .மேலும் பிராமணர்களை வைத்து சடங்கு என்பது அவரவர்களுக்குத் திருப்தி அளிக்கும் விதத்தில் இருப்பதால் செய்கிறார்கள் .பிராமணர்களிலேய பிராமணர் என்பதற்காக யாரையும் அழைப்பதில்லை .அவர் நன்றாக பூஜை மற்றும் யாகங்களை நடத்துகிறாரா பார்த்து என்று அவரவர் வசதிக்கேற்ப அழைக்கிறார்கள் என நான் எண்ணுகிறேன்.தாங்கள் இது பற்றியும் விளக்க வேண்டும்.பிழை இருந்தால் மன்னிக்கவும் .

சி.மாணிக்கம் மந்த்ராசலம் ,
செஞ்சேரிமலை.

அன்புள்ள மாணிக்கம் அவர்களுக்கு,

தமிழகமெங்கும் இன்று பல சாதியினர் தங்கள் திருமணங்களையும் சடங்குகளையும் பிராமணர்களைக்கொண்டு செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். முன்பெல்லாம் எல்லா சாதிக்கும் அவர்களுக்குரிய புரோகிதர்கள் இருந்தனர். அவர்கள் இப்போது இல்லை. சடங்குகள் மனித வாழ்க்கைக்குத் தேவையாகின்றன. அச்சடங்குகளை முறையாகச்செய்பவர்கள் லௌகீக வாழ்க்கைக்கு

இன்றியமையாதவர்களாக ஆகிறார்கள். அந்த பிராமணர் அவருக்கு தட்சிணை அளித்து சடங்குக்கு அழைப்பவர் மேல் கருத்தியல்செல்வாக்கு செலுத்துகிறார் என்பதெல்லாம் அபத்தம்.

இந்த வகையான வாதங்களெல்லாம் ஒரு பத்தாயிரம் பேருக்குள் நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. வெளியே இந்துக்கள் அவர்கள் நூற்றாண்டுகளாக வாழ்ந்து வந்த அதே பாணியில் காலத்துக்கேற்ற மாறுதல்களுடன் தங்கள் நம்பிக்கைகளைத் தொடர்ந்துகொண்டிருக்கிறார்கள். அரசியல்வாதிகளின் கூச்சல்களுக்கும் அவர்களின் நம்பிக்கைகளுக்கும் உரையாடல்புள்ளிகளே இல்லை

ஜெ

அன்புள்ள ஜெயமோகன்,
வணக்கம். தங்கள் பதிவுகளை ஓராண்டுக்கும் மேலாக வாசித்து வருகிறேன். சிறப்பாக இருக்கிறது,
கடைசியாக நீங்கள் செல்வம் அவர்களுக்கு கொடுத்த விரிவான விளக்கம் அருமையாக இருந்தது.

ராமகிருஷ்ணன் டி எஸ்

அன்புள்ள ராமகிருஷ்ணன்

நன்றி

சொல்லிச்சொல்லி சில பதில்கள் எனக்கே தெளிவாக உள்ளன போலும்

ஜெ

அன்பின் ஜெ…

என்னுடைய மின்னஞ்சலை மதித்துத் தங்கள் பதிலை வலைத்தளத்தில் இட்டமைக்கு நன்றி.

மிக விரிவானதொரு விளக்கம். இன்னும் நிறைய கேள்விகள் மனதில் இருந்தாலும் நீங்களே கட்டுரையில் கூறியுள்ளபடி இன்னும் நிறைய விடயங்களைத் தெரிந்து கொண்டு பின்பு உங்களிடம் அவை குறித்து கேட்கிறேன்.

மேலும் இத்தகைய விவாதங்களை நான் கருத்துப் பரிமாற்றமாகவே பார்க்கிறேன். வெற்றி / தோல்வியாக அல்ல என்பதையும் கூற ஆசைப்படுகிறேன்..

இது எல்லாவற்றையும் விட.. மாறுபட்ட கருத்துக்கள் இருப்பினும் எளியேனாகிய என் கேள்விகளை மதித்து உங்கள் கருத்துகளை வெளியிட்ட அந்த ஜனநாயகம் மிகவும் பிடித்திருந்தது என்பதையும் இங்கு பதிவு செய்கிறேன்.

# (3) இசையும், பிராமணர்களும்

திரு ஜெயமோகன்

உடனடியாக பதில் போட்டமைக்கு நன்றி. நான் ஆதி தமிழ் இசை பிராமணர்களிடம் இருந்ததாகக் கூறுவது பரிபாடல் மூலம்தான். அதுவே நமக்குக் கிடைத்த முதல் இசைக் குறிப்புகள் உள்ள நூல். அதில் காணப்படும் பல புலவர்கள் பெயர்கள் சம்ஸ்கிருதப் பெயர்கள். மேலும் அவை சுட்டும் விஷயங்கள் வைதீக புராண விஷயங்கள்.

நீங்கள் அந்த நாளில் தாழ்ந்ததாகக் கருதுவது பாணர் மரபை என நினைக்கிறேன். அது அவர்களின் பல முனை வாழ்க்கையின் ஒரு அங்கம். ஆனால் ரிக் வேதமே இன்னின்ன ஸ்வரங்களில்தான் பாடப்பட வேண்டும் என்று பாராயண விதி உள்ளது. சாம வேதம் இன்னொரு உதாரணம்.

பக்தி மார்க்கத்தின் ஆரம்பமே இசைதான். பரிபாடல் அங்கேதான் முக்கியத்துவம் பெறுகிறது. பின்னாளைய பாடல்களுக்கு அங்கே தான் அஸ்திவாரம் போடப்பட்டது. பிராமண , வேளாள இயக்கமான பக்தி இயக்கம் , இசை ஒன்றினாலேயே பிரபலப்படுத்தப் பட்டது. தாளமும் பண்ணும் குறிக்கப் படாத பாடல்களே தேவாரத்திலும், பிரபந்தத்திலும் இல்லை. பாணர் , விறலியர் போன்றோரின் பங்களிப்பு பக்தி இயக்கத்தில் மிகவும் குறைவு.

புராணக் குறிப்புகளை நோக்கும் போது ருத்திர வீணை காலத்தால் முந்துகிறது . அதுவும் சரசுவதி வீணை போன்றே ஒரு சம்பூரண வாத்தியம். மூன்று ஸ்தாயிகளில் எளிதாக சஞ்சாரம் செய்யலாம். நம் பக்கத்தில் அது கிடையாது. ஆக இசை பாரதமெங்கும் விரவியே இருந்துள்ளது.

பாடகரான என் தாத்தா, ஒரு விதமான ஊது கருவியை விழாக்காலங்களில் வாசிப்பாராம். ஒவ்வொரு சமூகமும் தத்தம் இசைப் பாரம்பரியங்களைக் கொண்டிருந்தன என்றாலும், நுண்ணறிவுடன் ஆராய்ச்சி செய்யப்பட்டு எழுதப்பட்டவை பிராமணர்களின் படைப்புகளே.

சங்க காலப் பாடல்களில் பிராமணர்களின் வாழ்க்கையை ஒரு விதமான objective நோக்குடன் தான் காண முடிகிறது. subjective ஆக எந்த பிராமணனும்

தன வாழ்க்கை முறையை எடுத்து எழுதவில்லை. எல்லாம் பிறர் கூற்று தான். வைதீகத்தில் ஊறியவர்கள் இந்த விஷயங்களில் எழுத வந்திருக்க மாட்டார்கள். கபிலர், பரணர் போன்றோர் இதில் சற்று விதி விலக்கு. கபிலர் விஷயம் சற்று விளங்கிக் கொள்ளலாம். அவர் தாம் ஒரு பிராமணரால் எடுத்து வளர்க்கப் பட்டதால் பிராமணன் ஆனேன் என்றே கூறிக் கொள்கிறார்.

சிலப்பதிகாரம் படிக்க ஆசைதான். ஆனால் இன்று நான் திரும்ப திரும்பப் படிக்கும் விஷயங்களில்தான் ஈடுபட்டு இருக்கிறேன். கீதை, சுலோகங்கள் என்று ஆழ்ந்துதான் போய்க் கொண்டு இருக்கிறேன். இன்றைய தகுதியில் என் ஒரே விதிவிலக்கு நீங்கள் தான்.

ஆபிரஹாம் பண்டிதரின் புத்தக அமைப்பும் அதன் நோக்கமாக அவர் கூறும் செய்திகளும் ஒருவாறாக இந்த கால்டுவெல் போன்றோரின் பாணியில் தான். ஆராய்ச்சி என்பது முடிவை மனதில் கொண்டு செய்யப் படும் பாணி அது. என் அளவில் நான் படித்தவரை அதில் நான் கற்றுக் கொள்ள எதுவும் இல்லை. உங்கள் தளத்தில் மம்முது எழுதிய கட்டுரைகளை வெகு காலத்துக்கு முன்னாலேயே வாசித்து விட்டேன்.

வெங்கட்

அன்புள்ள வெங்கட்

உங்கள் கடிதங்கள் மூலம் உங்களைப்பற்றிய ஒரு மனப்பிம்பம் எனக்குள்ளது. உங்கள் தேடலும் ஆய்வும் ஒரு நோக்குடனேயே முன்னெடுக்கப்படுகின்றன. அவ்வகை விவாதங்களில் ஈடுபடுவதில் பொதுவாக எனக்கு ஈடுபாடில்லை. பிராமண வெறுப்பரசியலையும், பிராமணவாத அரசியலையும் நான் அவ்வகையில் சமமாகவே காண்கிறேன்.

பரிபாடல் சங்கப்பாடல்களில் மிகப்பிந்தைய காலத்தையது. மொழியமைப்பைக் கொண்டு பரிபாடல், திருமுருகாற்றுப்படை போன்றவை சிலப்பதிகார காலகட்டத்திற்குப் பிற்பட்டவை என்று கூறமுடியும். பௌத்த, சமண மதங்களின் மேலாதிக்கம் சரிய ஆரம்பித்த காலத்தில் உருவான நூல் பரிபாடல். சொல்லப்போனால் சைவ, வைணவப் பெருமதங்கள் உருவாக ஆரம்பித்த காலகட்டத்தில், பக்தி இயக்கத்தின் தொடக்கத்தில் உருவான ஆக்கம் அது. சங்கப்பாடல் தொகையில் அது சேர்க்கப்பட்டது பத்தாம் நூற்றாண்டு உரையாசிரியர்களால்தான்.

பரிபாடலின் கவிஞர்கள் கீரந்தையார், கடுவனிளவெயினனார் ,நல்லந்துவனார், மையோடக்கோவனார் குறும்பூதனார், குன்றம்பூதனார், கரும்பிள்ளைப் பூதனார், நல்வழுதியார், நல்லெழுநியார், இளம்பெருவழுதியார், நல்லழிசியார், நப்பண்ணனார் போன்றவர்களை நீங்கள் எப்படி பிராமணர்கள் என்ற முடிவுக்கு வருகிறீர்கள் என்று எனக்குப்புரியவில்லை.

சங்ககால சமூகவியலை கொஞ்சம் அறிந்தவர்கள் கீரந்தையார் [கீரன் தந்தை] கீரன் சாதியைச்சேர்ந்தவர் என்றும் இளவெயினர், நல்வழுதியார், நல்லெழினியார், போன்றவர்கள் மறவர்கள் என்றும்தான் முடிவுக்கு வருவார்கள். எயினன், வழுதி, எழினி போன்றவை மறவர் குலப்பெயர்கள்.

குறும்பூதன், குன்றம்பூதன், கரும்பிள்ளைப்பூதன் போன்ற பெயர்கள் வேளாளர்களுக்குரியவை. பூதவழிபாடு மருதநிலத்தின் முக்கியமான மரபு. அழிசி என்பது கம்மாளர்குலப்பெயராக இருக்கலாம். சங்கப்பாடல்களில் கொல்லன் அழிசி என்று ஒருவர் இருக்கிறார். பண்ணனார் என்பவர் பாணன் என்பதில் ஐயமில்லை.

மருதநிலம் ஏற்கனவே வைதிக மதத்தால் ஆளப்பட்டிருந்தது. அதன் தெய்வமே இந்திரன்தான். இந்திரவிழா சங்க காலத்திலேயே மிகச்சிறப்பாக நடந்து வந்தது. மாயோனும், செவ்வேளும் மருதநிலத்தில் பெருமளவுக்கு வழிபடப்பட்டு வந்தனர்.

இசையமைத்த கண்ணனாகனார், பெட்டகனார், பித்தாமத்தர், நாகனார் போன்ற பெயர்கள் எல்லாமே பாணர்களைச் சுட்டுபவை என்பதும் ஏறத்தாழ தெளிவு. பெயர்களில் உள்ள நாகன் என்பது கவனிக்கத்தக்கது. அது பிராமணர்களின் பெயராக அமைவதில்லை. நல்லச்சுதன், கேசவன் என்ற இரண்டே பெயர்களைத்தான் பெயர்களைக்கொண்டு பிராமணர்கள் என்று சொல்லமுயலலாம். இருக்கலாம். ஆனால் அக்காலகட்டத்தில் வைதிகமதம் மருதநிலத்தில் வேரூன்றியிருந்தமையால் பாணர்களும் பிறரும் அப்பெயரைச்சூட்டிக் கொண்டிருக்கக் கூடும்.

நல்லச்சுதன் பெயருடன் மருத்துவன் என்றிருப்பதைக் கவனிக்கும்போது இது மேலும் உறுதிப்படுகிறது. மருத்துவத்தொழில் அக்காலத்தில் பிராமணர்களால் செய்யப்படவில்லை. அது நெடுங்காலம் சற்று மதிப்புக் குறைந்த தொழிலாகவே இருந்தது. தமிழ்ச் சமூகத்தில் பதினெட்டாம்

நூற்றாண்டில்கூட மருத்துவர், நாவிதர், இசைக்கலைஞர் ஆகிய மூன்று தொழிலாளர்கலும் ஒருவராகவே இருந்திருப்பதைக் கொண்டு பார்த்தால் அவரை ஒரு பாணர் என்று எடுத்துக்கொள்வதே சரியாக இருக்கமுடியும்.

வேதங்களின் ஓதுமுறையில் இருந்துதான் இசை பிறந்தது என்று பிடிவாதமாக சொல்லிக் கொண்டிருக்கும் ஒரு பெரும் கூட்டம் இருக்கிறது. அவர்களுக்குக் கலை எப்படி உருவாகும், எப்படி வளரும் என்பதைப் பற்றிய எந்தப்பிரக்ஞையும் இருப்பதில்லை. கூடவே இந்திய சிந்தனை மரபிலும் தொன்ம மரபிலும் இசை குறித்து வரும் செய்திகளைத் தொகுத்துப் பார்க்கும் மனநிலையோ ஆற்றலோ இருப்பதில்லை. அதை சாதிப்பித்தின் ஒரு வெளிப்பாடாக மட்டுமே நான் காண்கிறேன்.

எந்தக்கலையும் ஒரு மையத்தில் இருந்து பலவாகப் பிரிந்து உருவாவதில்லை. ஒரு மையத்தைச் செயற்கையாக,உள்நோக்குடன் வலியுறுத்தும் முன்முடிவு இல்லாத எவராலும் அதைப் புரிந்து கொள்ள முடியும். இவற்றைப் பற்றி இன்று எவ்வளவோ பேசப்பட்டு விவாதிக்கப் பட்டாயிற்று. புராதனக்குகை ஓவியங்கள் எல்லாம் காட்டு மிராண்டித்தனம், வேள்விகளுக்கு பீடம் அமைப்பதில் இருந்துதான் ஓவியக்கலை பிறந்தது என ஒருவர் வாதிட ஆரம்பித்தால் ஒன்றும் செய்யமுடியாது.

கலை எப்போதும் மக்களின் வாழ்க்கையில் இருந்து தன்னெழுச்சியாக உருவாகிறது. இசை, ஓவியம், இலக்கியம் நடனம் எல்லாமே அப்படித்தான். எல்லாக் கலைகளுக்கும் பழங்குடி, நாட்டார் கலைகள்தான் ஆதாரம். அடுத்த கட்ட பண்பாட்டியக்கம் என்பது அந்தப் பலமுகம் கொண்ட கலைகளை ஒன்று திரட்டுவதுதான். திரட்டுவது என்பதைவிட திரள்வது என்று சொல்வதே சரியாகும். பல்வேறு இனக்குழுப்பண்பாடுகள் ஒன்றுடன் ஒன்று உரையாடும்போது அந்த திரள்தல் நிகழ்கிறது

அவ்வாறு ஒன்று திரட்டும் பணியின் விளைவாகப் பொதுக்கூறுகள் அடையாளம் காணப்படுகின்றன. இலக்கணம் வகுக்கப் படுகிறது. இலக்கணம் மேலும் மேலும் அனைத்தையும் உள்ளடக்குவதாக ஆக்கப்படுகிறது. மெல்ல, மெல்ல செவ்வியல் கட்டமைக்கப்படுகிறது. இப்படித்தான் கலையின் வளர்ச்சி நிகழ்கிறது. அந்தச் செவ்வியலில் அந்த பண்பாட்டில் உள்ள எல்லாக் கலை மரபுகளுக்கும் பங்களிப்பிருக்கும்

இந்தியப் பெருநிலத்தில் உள்ள பல்லாயிரம் பழங்குடி மக்களுக்கு அவர்களுக்குரிய இசையும், இலக்கியமும், கலைகளும் இருந்திருக்கின்றன. நாம் காண்பது பல ஆயிரம் வருடங்களாக நிகழ்ந்து வந்த ஒரு மகத்தான தொகுப்பு முயற்சியை. அவ்வாறுதான் நம் செவ்வியல் கலைகளும் செவ்விலக்கிய மரபும் உருவாகி வந்துள்ளன. அதில் இந்நிலத்தின் எல்லா மரபுகளுக்கும் பங்குள்ளது

பைசாசிக மொழியில் குணாத்யர் எழுதிய பிருஹத்கதா என்னும் மாகாவியத்தைப் பற்றிய புராணம் இதைச் சொல்கிறது. பழங்குடிகளில் இருந்து கற்றறிந்த இசையையும், இலக்கியத்தையும் கொண்டு குணாத்யர் அவர்களின் மொழியில் அந்த காவியத்தை எழுதினார். அதை அன்றைய செவ்வியல் சபை ஏற்கவில்லை.சபையில் அதை வாசிக்கவே அனுமதிக்கவில்லை

மனமுடைந்த குணாத்யர் காட்டுக்குச் சென்று தன் காவியத்தைத் தீயிலிட்டார். தீயிலிடும் முன் ஒவ்வொரு பாடலாக வாசித்தார். அந்த இசையைக் கேட்டுக் காட்டு மிருகங்கள் எல்லாம் மெய்மறந்து நின்றன. அதைக் காட்டில்வேட்டைக்கு வந்த மன்னன் கேட்டு ஓடிச்சென்று குணாத்யரைத் தடுத்தான். குணாத்யர் தீயில் விழுந்து இறந்தார். அந்தக் காவியத்தின் சிறுபகுதி மட்டுமே எஞ்சியது. அதை மாகாவியம் என அறிஞர் ஏற்றுக்கொண்டனர். அது சம்ஸ்கிருதத்தில் மொழியாக்கம் செய்யப்பட்டது

தெளிவாகவே இந்தக்கதை சில விஷயங்களைச் சுட்டுகிறது. இது இந்தியா முழுக்க மைய ஓட்டமாக இருந்த செவ்வியல் மரபுக்கு வெளியே இருந்து வந்த மாபெரும் கலை, இலக்கிய, இசை மரபுகளைப்பற்றி சொல்கிறது. அவற்றில் இருந்து உருவாகும் ஆக்கங்களை உள்ளிழுத்துக் கொண்டுதான் இங்கே செவ்வியல் வளர்ந்து வந்திருக்கிறது.

நமது இசையும் அப்படித்தான் உருவாகி வந்தது. ஐவகை நிலத்து மக்களும் பாடிய பாடல்கள் அம்மக்கள் ஒருவரோடொருவர் தொடர்புகொண்டு ஒரு சமூகமாக ஆனபோது தொகுக்கப்பட்டன. அவ்வாறு தொகுத்தவர்கள் ஐவகை நிலங்களிலும் அலைந்து திரிந்த பாணர்கள். பண் என்பதிலிருந்து வந்த சொல்லே பாணர்கள். அவர்கள்தான் தமிழ் செவ்வியலிசையின் இலக்கணத்தை அமைத்தவர்கள். அதைப் பரப்பியவர்கள்.

வேதங்களில் உள்ளது இசை மரபின் இலக்கணம் அல்ல. ஓதுமுறையின், உச்சரிப்பின் இலக்கணம் மட்டுமே. கண்டிப்பாக அதில் இசையிலக்கணத்தின் ஒருவகை தொடக்கம் உண்டு. ஆனால் மொத்த இசையும் அங்கே பிறந்தது என்று சொன்னால் வேதங்களைக் கொஞ்சம் அறிந்தவர்கள் புன்னகை செய்வார்கள். வேதங்களை இன்று பிறரும் வாசிக்கலாமென்பதையாவது நீங்கள் நினைவில்கொள்ளவேண்டும், அதைப்பற்றி எதையும் சொல்ல பிராமணர்களால் முடியுமென்ற நிலை இன்றில்லை.

இந்தியப் பெருநிலத்தில் வரலாற்றுக் காலத்திற்குத் தொடக்கத்திலேயே வைதிக மதம் முழுமையாகப் பரவியிருந்ததைக் காண்கிறோம். அது பிராமணர்கள் வழியாகப் பரவவில்லை. பிராமணர்கள் அந்த மதத்தின் புரோகிதர்கள் மட்டுமே. பிராமணர்கள் வைதிகத்தின் அதிபர்களோ மொத்த வணிகர்களோ அல்ல. மற்ற வர்ணத்தவர்களுக்கும், வைதிக மதத்தின் சிந்தனைகளையும். பண்பாடுகளையும் கொண்டு சென்று சேர்த்ததில் பெரும் பங்குண்டு.

ஆகவே இந்தியாவில் உருவான எல்லாக் கலை இலக்கிய சிந்தனை மரபுகளிலும் வைதிகத்தின் பங்களிப்புண்டு. அதிகமோ குறைவோ அதன் இருப்பை நாம் உணர முடியும். அதை நிராகரிப்பது அறியாமை. அதேசமயம் அது மட்டுமே இந்தியாவின் கலையிலக்கிய மரபின் தொடக்கம், வழிகாட்டு நெறி என வாதிடுவது சாதிப்பற்றின் குருட்டுத்தனம்.

நான் எந்நிலையிலும் ஒரு புறவய உண்மையை நோக்கிச் செல்லவே விரும்புகிறேன். ஆகவே நம்மிடையே ஒரு விவாதம் நிகழும் மையமில்லை என நினைக்கிறேன். ஆன்மீகமாகவும், அறிவுத்தளத்திலும் மிகமிக ஓரம் சாய்ந்தவர் நீங்கள்.

என் வழியும் இலக்கும் வேறு.

## (4) இசைக்குள் பிராமணர்கள் எப்போது வந்தனர்?

அந்தக் கடிதம் எழுதியிருப்பவர் சாதிய மேட்டிமை வாதி என்று ஜெ மதிப்பிடுவதில் எனக்கு ஆட்சேபம் இல்லை, அதுவும் குறிப்பாக ஜெ அவருடன் தொடர்ந்து உரையாடியிருக்கிறார் என்பதை வைத்துப் பார்க்கையில்.

ஜெ எழுதிய முதல் பதிலில் ஓரிடத்தில் எனக்கு மாற்றுக் கருத்து உண்டு.

// பிராமணர்கள் இசைக்குள் வந்தது மிகமிகப்பிற்காலத்தில். அதாவது பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப்பின்னராகவே இருக்கவேண்டும். //

சங்ககாலத்திற்குப் பிறகு களப்பிரர் காலத்தில் மங்கியிருந்த தமிழிசை மரபை மீட்டவர் திருஞான சம்பந்தர். அவரது காலம் 6ஆம் நூற்றாண்டு. அவர் பிராமணர் தான். அவரது தேவாரப் பதிகம் ஒவ்வொன்றுக்கும் துல்லியமான பண்முறை உண்டு. "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்" என்று 9-ம் நூற்றாண்டில் வந்த சுந்தரர் அவரைப் போற்றுகிறார். சம்பந்தர் பாடிச் செல்லும்போது அவருடன் யாழ் வாசித்து வந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர் பாணர் குலத்தவர்.. இந்தக் காலகட்டத்தில் பாணர்கள் சமூக அடுக்கில் தாழ்ந்து போய் விட்டிருந்ததால் அவர்கள் கோயிலுக்குள் அனுமதிக்கப் படவில்லை.. ஆனால், சம்பந்தர் அந்த சமூகக் கட்டுப்பாட்டை உடைத்து கோயில்களுக்குள் யாழ்ப்பாணரை அழைத்துச் செல்கிறார். மதுரைக் கோயிலில் அவர் யாழ் மீட்டும் போது தரையின் ஈரத்தால் சுருதி குலைய, சிவபெருமான் அசரீரியாக அவரைப் பொற்பலகையில் அமர்த்துமாறு ஆணையிட, அவர் அவ்வாறே அமர்கிறார் – இந்த ஐதிகக் கதைகள், சம்பந்தரின் முயற்சியால், பாணர்கள் தாங்கள் இழந்த அந்தஸ்தை மீண்டும் பெறுவதையே குறிக்கின்றன என்று கொள்ளலாம்.

9ஆம் நூற்றாண்டில் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தைத் தொகுத்த நாதமுனிகள் பிராமணர், அவரும் இசை நன்கறிந்தவர் தான். திவ்யப் பிரபந்தமும் தொடக்கத்தில் பண்முறையுடனேயே பாடப்பட்டது என்பதற்கு சான்றுகள் உள்ளன,. ராமானுஜருக்குப் பிற்பட்ட காலத்தில் தான், பிரபந்தத்தை மந்திரம் போல "ஓதும்" வழக்கம் ஏற்பட்டு இன்றுவரை அதுவே நிலைபெற்று விட்டது.

இது வியப்புக்குரியதல்ல. ஏனென்றால், ஐந்தாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட விஷ்ணு புராணம், காளிதாச காவியங்கள், பிற சம்ஸ்கிருத நாடகங்கள் ஆகியவற்றில் இசையும் நடனமும் உன்னதமான தெய்வீகக் கலைகள் என்றே குறிப்பிடப் படுகின்றன.. பிராமணர்களும் க்ஷத்தியர்களும் வைசியர்களும் இக்கலைகளைப் பயின்றனர் என இவற்றின் மூலம் அறிகிறோம்.. புராணங்களில் இசைவிற்பன்னர்களாகக் கருதப் படும் நாரதர், தும்புரு, பிருங்கி, மதங்கர் போன்ற முனிவர்களைக் குறித்த கதைகளுக்குப் பின்புலமாக வரலாற்றில் வாழ்ந்த இசை வளர்த்த முனிவர்களே இருந்திருக்கக் கூடும்.

இந்தக் காலகட்டத்தைச் சார்ந்த சில ஸ்மிருதிகளில் இசை, நடனம், நாடகம் ஆகியவை கீழானவையாக சித்தரிக்கப் படுகின்றன.. ஆனால், இவை எந்த அளவுக்கு செயல்முறையில் கடைப்பிடிக்கப் பட்டன என்பது விவாதத்திற்குரியது.. ஏனெனில் மனு ஸ்மிருதி உட்பட ஸ்மிருதிகள் குறிப்பிடும் ஏராளமான விதிகளில் மிகச் சில மட்டுமே அதுவும் இந்தியாவின் சிற்சில பகுதிகளில் மட்டுமே அமல் படுத்தப் பட்டன என்று வரலாற்றாசிரியர்கள் கருதுகிறார்கள். ஸ்மிருதியில் ஒரு விஷயம் இருப்பதனாலேயே அது வரலாற்று நடைமுறை அல்ல, மற்ற இலக்கியங்கள், கல்வெட்டுகள் போன்ற சான்றுகளையும் கொண்டு தான் முடிவு செய்ய வேண்டும்.

ஜடாயு

*

“பிராமணர்கள் இசைக்குள் வந்தது” என்பதை இரண்டு விதமாக பொருள் கொள்ளலாம்:

ஒன்று, இசையைக் கற்றுக் கொண்டு இசையை அவர்களது வாழ்க்கைமுறையோடு இணைத்துக்கொள்ளுதல். அதில் வேதத்தை, ஸ்தோத்திரங்களை இசையுடன் கலந்து பாடுதல் (ஸ்தோபம்??), இசையைக் குறித்து ஆராயச்சி போன்றவை அடங்கும். பக்தி கால கட்டத்தில் தேவாரம், திவ்யப் ப்ரபந்தம் ஆகியவற்றிற்கு இசையை சேர்த்தலில் பங்கு இருந்திருக்கிறது. இசையைக் குறித்த வெவ்வேறு ஆராய்ச்சி நூல்கள் முழுவதும் பிராமணர்களால் எழுதப்பட்டனவா என்று எனக்கு தெரியவில்லை.

இரண்டாவது, இசையின் நிகழ்த்து கலை வடிவத்தில் பங்கு கொள்வது. அது பக்தி கால கட்டத்தில்தான் தொடங்கியிருக்க வேண்டும். நாதமுனிகள் தொடங்கி பலர் அதை செய்திருக்கின்றனர். பல நூற்றாண்டுகளுக்கு, மும்மூர்த்திகள் காலம் வரை அவ்வாறே இருந்திருக்க வேண்டும். ஏன் என்றால் ஜே சொன்னது போல அது முந்தைய காரணத்திற்கு விரோதம் இல்லாமல் இருக்கிறது. இருந்தாலும் நிறைய பிராமணர்கள் அப்படி செய்யவில்லை. அவர்கள் தேவதாசிகளை அப்பணியை செய்ய வைத்தனர் அல்லது ஓதுவார்கள் அப்பணியை செய்தனர். பஜனையில் மட்டும் பெரும்பான்மயாக பங்கு பெற்றிருக்கின்றனர் (அதுவும் மராட்டிய influence-ஆக இருந்திருக்கும்).

இன்றும் வைணவத்தில் இசையின் பங்கு மிகக் குறைவு. அரையர்கள் இன்னும் பண் இசை முறையில் பாடிக்கொண்டிருக்கிறார்கள் என்று கேள்வி. நான் பார்த்த அரையர் சேவயில் அரையர் பாடியது அரங்கனுக்கு மட்டுமே கேட்டிருக்க வேண்டும் :) 18-ஆம், 19-ஆம் நூற்றாண்டுகளில்தான் நிகழ்த்து கலையில் கால் பதிக்கிறார்கள். பின்னர், அது படிப்படியாக தொழிலாக மாறிவிட்டது. 20-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி வறை பல்வேறு சாதிகளில் இருந்து இசை கலைஞர்கள் இருந்துள்ளார்கள். இப்பொழுதுதான், பிராமணர்கள் தொண்ணுறு விழுக்காடு இருக்கிறார்கள். ஏன் என்றால், கர்னாடக இசைக்கு பெரும்பான்மயான ரசிகர்கள் பிராமணர்கள். அவ்வளவுதான்.

– சீனிவாசன் நரசிம்மன்

*

நண்பர்களுக்கு

ஆபிரகாம் பண்டிதர் பற்றி நான் சொன்னதை ஜடாயு சற்று தவறாக பொருள்கொண்டிருக்கிறார்

பிராமணர்கள் இசைக்குள் வந்தது என நான் சொல்வது பிராமணர்கள் எப்போது இசைகேட்க ஆரம்பித்தார்கள், எப்போது பாட ஆரம்பித்தார்கள் என்னும் பொருளில் அல்ல. அது அக்கட்டுரையிலேயே தெளிவாக உள்ளது. வேதங்களிலும் வழிபாடுகளிலும் இசையின் கூறுகள் உள்ளன என்றே சொல்கிறேன். நான் சொல்வது தொழில்முறை இசைக்கலைஞர்களாகவும் இசையறிஞர்களாகவும் பிராமணர்கள் வந்து பாணர்களின் இடத்தை

எடுத்துக்கொள்ள ஆரம்பித்த காலகட்டம் பற்றி. அது 13ஆம் நூற்றாண்டுக்கு முன்னதாக இருக்க வழியில்லை.

பக்தி காலகட்டத்தில் மறுமலர்ச்சியடைந்த இந்துப்பெருமதங்கள் இசையை தங்கள் ஆயுதமாகக்கொண்டன என்றுதான் நானும் மீண்டும் மீண்டும் சோல்லியிருக்கிறேன். ஆனால் அப்போது பாணர் இசைமரபு முக்கியத்துவமிழந்து இருந்தது. பாணர்கள் தீண்டத்தகாதவர்களாக இருந்தனர். சங்ககால பாணர்களின் இடம் பிற்கால சங்கநூல்களிலேயே சரிய ஆரம்பித்திருப்பதைக் காணலாம். அவர்கள் பரத்தமையின் ஒரு அங்கமாக ஆகிவிட்டிருந்தார்கள் என்பதை கலித்தொகைப்பாடல்கள் காட்டுகின்றன. பரத்தமையை கடுமையாக கண்டித்து ஒடுக்கிய சமணம் பாணர்களையும் சமூகத்தின் கீழ்த்தட்டுக்குத் தள்ளியது

சோழநாட்டில் ஏழாம் நூற்றாண்டில் எருச்சத்தம்புலியூரில் பிறந்த நீலகண்ட யாழ்ப்பாணர் கோயில்களுக்குச் சென்று அவற்றின் கோபுரவாசலுக்கு வெளியே நின்று பண்களை இசைத்துப்பாடிவந்தார். மதுரை கோயிலுக்கு வெளியே நின்று அவர் அவ்வாறு பாடுவதை அங்குள்ள சிவனடியார்கள் கேட்டனர். அன்றிரவு அவர்களின் கனவில் சொக்கநாதர் வந்து நீலகண்டரின் இசையின் முக்கியத்துவம் பற்றி சொன்னதாகவும் அதன்பின்னர் அவர் ஆலயத்துக்குள் அனுமதிக்கப்பட்டதாகவும் கதைசொல்கிறது.

இதில் ஓர் உட்குறிப்பும் உண்டு. மதுரை சங்கப்பலகை புலமைச் சோதனையின் உச்சமாக தொன்மங்களில் சொல்லப்படுகிறது. தொன்மத்தின்படி சொக்கநாதர் சிவனடியார்களிடம் வந்து நீலகண்டர் ஈரமண்ணில் நின்று யாழிசைப்பதனால் யாழின் தந்திகள் நெகிழலாம். அவரை 'பலகை'யிட்டு உள்ளே அமரச்செய்யுங்கள் என்று சொன்னார் என்பது பெரியபுராணக்கதை.. அது அவர் ஈசனின் சோதனையில் வென்றதாகவே பொருள்கொள்ளப்பட்டது.

அதன்பின்னர் நீல்கண்டர் திருவாரூர் சென்றார். அங்கே அவர் உள்ளே அனுமதிக்கப்படவில்லை. ஆனால் இறைவன் கோயில்பொறுப்பாளர் கனவில் வந்து அவருக்கு தனி வாசல் அமைக்கும்படி சொன்னதன்பொருட்டு அங்கே வடக்குவாசல் அமைக்கப்பட்டு அவர் உள்ளே அனுமதிக்கப்பட்டார். அவர் திருவாரூரிலேயே தங்கி பாடிவந்தார்

அப்போது ஞானசம்பந்தர் தன் பாடல்கள் வழியாக சைவத்தை பேரியக்கமாக நிகழ்த்திகொண்டிருந்தார். அவர் நீலகண்ட யாழ்ப்பாணரின் கதையைக் கேட்டு அவரைச் சந்திக்க விரும்பினார். நீலகண்டர் சீர்காழி சென்று அங்கே ஞானசம்பந்தரைச் சந்தித்தார். ஞானசம்பந்தர் தன்னுடைய பாடல்களை பண் அமைத்துப்பாடும்படி நீலகண்டரைப் பணித்தார். அவ்வாறுதான் நீலகண்ட யாழ்ப்பாணர் ஞானசம்பந்தர் பதிகங்களுக்கு பண் அமைத்தார். சைவமரபில் பண்ணிசை பெற்ற இடம் இவ்வாறு உருவானதே

நீலகண்ட யாழ்ப்பாணர் போல வேறு சில பாணர்களும் சம்பந்தரின் பக்தி-இசை இயக்கத்தில் பங்குபெற்றிருந்தனர். இது தெளிவாகவே வரலாற்றைக் காட்டுகிறது. அதாவது பண்ணிசை மரபு முழுக்கமுழுக்க பாணர்களிடமே இருந்தது. அது களப்பிரர் ஆட்சிக்காலத்தில் பெரும்பாலும் அழிந்துவிட்டிருந்தது. எஞ்சிய ஒரு புள்ளியில் இருந்து பக்தி இயக்கம் அதை கண்டு எடுத்து மீட்டு வளர்த்தது. அதாவது பண்ணிசைமரபு சம்பந்தரிடமோ சம்பந்தரின் மரபிலோ இருக்கவில்லை, அது பாணரிடமிருந்துதான் பெறப்பட்டது.

ஆனால் இவ்வியக்கம் விரைவிலேயே அழிந்தது. இசைப்பாடல்கள் எவரும் அறியாதவையாக மாறின. பத்தாம் நூற்றாண்டில் சிதம்பரம் கோயிலுக்குள் மட்டும் திருமுறைகள் கவனிப்பாரில்லாமல், எவராலும் புரிந்துகொள்ளமுடியாதவையாக கிடந்தன. அவற்றை ராஜராஜசோழன் மீட்டார். நம்பியாண்டார்நம்பி செல்லரித்து அழிந்தவை போக எஞ்சியவற்றை தொகுத்தார். நீலகண்டயாழ்ப்பாணரின் பண் மரபை ஒட்டி எஞ்சியபாடல்களுக்கு பண்வகுத்துத் தொகுத்தவர் நம்பியாண்டார் நம்பியே

ராஜராஜசோழன் காலகட்டத்தில்தான் தமிழகம் முழுக்க உள்ள சைவ ஆலயங்கள் புதுப்பிக்கப்பட்டன. ஆகமமுறைப்படி பூசைமுறைகள் ஒழுங்குபடுத்தப்பட்டு நிர்வாக அமைப்புகள் வகுக்கப்பட்டன. அவற்றுக்கு நிரந்தர நிதி ஆதாரம் உருவாக்கப்பட்டது. ஆலயங்களில் ஓதுவார்கள் அமர்த்தப்பட்டு அவர்கள் பண்ணிசையை பாடுவதற்கு பணிக்கப்பட்டனர். அதன்பின்னர்தான் தமிழின் பண்ணிசை ஒரு நிறுவனமாக ஆகியது. இன்றும் நீடிக்கும் ஓதுவார் மரபு உருவானது. இசை அதிகாரபூர்வமாக ஆலயங்களுக்குள் நுழைந்தது. விளைவாக அதற்கு மதம்சார்ந்த கௌரவம் உருவானது.

ராஜராஜசோழனின் ஆகமமுறை பூசை அர்ச்சமுறை என்று சொல்லப்பட்டது. அதில் தோத்திரமும், கீர்த்தனையும் ஒரு பகுதி. அதை பாடுபவர்களாக பிராமணர்களில் ஒருசாரார் மாறினர். அது பண்ணிசையுடன் உரையாடி உருவான ஒரு இசைமுறைதான். பின்னர் அதை அவர்கள் கற்பதற்கான குருகுல முறைகள் உருவாகிவந்தன. அவ்வாறு பக்தியின் பகுதியாக இசைபாடுவது மாறியபின்னர், அதிலிருந்த சிருங்கார அம்சம் கிட்டத்தட்ட் முழுமையாகவே பக்தியாக உருமாற்றம் அடைந்தபின்னர்,தான் பிராமணர்கள் அதைப்பாடுவது சாத்தியமாகியது.

பாணர்மரபை உள்ளிழுத்தமையால்தான் சைவ பக்திஇயக்கத்தில் பண்ணிசைமரபு முக்கியமான பங்குள்ளதாக ஆகியது. அந்த இடம் வைணவத்தில் இசைக்கு இல்லை. மதுரகவியாழ்வார் காலத்தில் பண்ணிசை வைணவத்துக்குள் வந்தது. பிரபந்தங்களை இசைப்பதற்கான ஒரு பண்மரபை அது உருவாக்கியது. ஆனால் சைவத்தில் ஓதுவார் என்னும் அமைப்பு நெடுங்காலம் செயல்பட்டு உருவாக்கிய பெரும் மாற்றம் வைணவத்தில் நிகழவில்லை. இசையின் இடம் எல்லைக்குட்பட்டே அதில் எஞ்சியது

இவ்வாறு இசைக்கு மதம்சார்ந்த மதிப்பும் சமூகமரியாதையும் உருவான பின்னர்தான் ஓரளவுக்கு பிராமணர்கள் இசை பயில முற்பட்டனர். பிராமண இசைக்கலைஞர்கள் உருவானார்கள். சோழ பாண்டிய சாம்ராஜ்யங்கள் பதிமூன்றாம் நூற்றாண்டில் சுல்தானியப்படையெடுப்பால் சரிந்து அரசியல் நிலையின்மை உருவான காலகட்டத்தில் இந்த மாற்றம் நிகழ்ந்திருக்கலாம். ஆலயங்களை நம்பி வாழ்ந்த பிராமணசமூகம் ஆலயங்களின் அழிவால் பொருளியல் நெருக்கடிகளைச் சந்தித்தது. சிறுமன்னர்களையும் நிலப்பிரபுக்களையும் நம்பிவாழ நேர்ந்தது. அவர்களில் ஒருசாரார் அவைச்சோதிடர்களாகவும் சிலர் அவைப்பாடகர்களாகவும் ஆனார்கள்.

நாயக்கர் ஆட்சிக்காலகட்டத்தில் பிராமணர்கள் இசைக்கலைஞர்களாக இருப்பது சாதாரணமாக காணக்கிடைத்தாலும் பிராமணர்களைப்பொறுத்தவரை அது இழிவான தொழிலாகவே கருதப்பட்டது. பிராமணன் செய்யவேண்டிய மதம்சார்ந்த தொழில்களுக்கு மாற்றானதாக, கேளிக்கை மற்றும் ஒழுக்கமின்மை சார்ந்ததாக அது எண்ணப்பட்டது. அந்த மனப்பான்மை நூற்றாண்டுக்கால தொல் வரலாறு கொண்டது. அவ்வளவு எளிதாக அது மாறமுடியாது

பதினைந்தாம் நூற்றாண்டில்தான் தமிழ் பண்ணிசை நாம் இன்று காணும் கர்நாடக சங்கீதமாக உருவெடுத்தது. அதன் தொடக்கம் விஜயநகரத்தின் சபைகளில் நிகழ்ந்தது. சுல்தானியப்படையெடுப்புக்கு பின்பு உருவான அராஜகநிலை காரணமாக மதஇலக்கியம் ,சிற்பம், இந்துமெய்யியல் ஆகிய எல்லா தளங்களிலும் உருவான தேக்கத்தை விஜயநகரமே உடைத்தது. விஜயநகரின் சபைகளில் வட இந்தியாவின் இசைக்கலைஞர்கள் வருவது சாத்தியமாக இருந்தது. குறிப்பாக டெல்லி சுல்தானிய சபையின் இஸ்லாமியப்பாடகர்கள். விளைவாக இசைசார்ந்த ஓர் உலகளாவிய உரையாடல் நிகழ்திருக்கலாம். அதன்விளைவாக பண்ணிசை பெற்ற மாற்றமே கர்நாடக இசை ஆகியது. விஜயநகரம் அன்றும் பின்னரும் கர்நாடகசாம்ராஜ்யம் என்றே அழைக்கப்பட்டது. தக்காண சுல்தான்கள் கர்நாடக நவாப்கள் என அழைக்கப்பட்டனர்.

தமிழக மண்ணில் நாம் இன்று காணும் கர்நாடக இசை மேலும் இருநூறாண்டுக்காலம் கழித்து பதினேழாம்நூற்றாண்டில்தான் உருவம்கொண்டது. அதன் முதன்மை ஆளுமையாக தியாகையர் கருதப்படுகிறார். அவரது சாதனை என்பது கர்நாடக இசையை முழுமையாகவே பக்திக்குள் நிறுத்தி ஒரு பெரும் சமூக கௌரவத்தை அதற்கு உருவாக்கி அளித்ததுதான். [கூடவே அதை வெறும் பஜனையாக, பஜனைமனநிலையை தாண்டிச்செல்ல முடியாததாக ஆக்கவும் செய்தார்] அதைத்தொடர்ந்தே மிக அதிகமாக பிராமணர்கள் இசைக்குள் வந்தனர். குருபரம்பரைகள் உருவாயின. பிராமணர்களுக்கு கர்நாடக இசையில் உள்ள முக்கியத்துவம் உருவானது.

ஆனாலும்கூட சமீபகாலம் வரைக்கும் இசைக்கலைஞர்களில் பெரும்பாலானவர்கள் இசைவேளாளர்களாகவே இருந்தனர் என்பது ஓர் உண்மை. மதம்சார்ந்த கௌரவம் இல்லாத எல்லா இடங்களிலும் இசையை இசைவேளாளர்தான் நிகழ்த்திவந்தனர். சென்னையை மையமாக்கி பிராமணர்கள் வாழ ஆரம்பித்து, இசைக்கான சபைகள் உருவானபோதுதான் நாம் இன்றுகாணும் முதன்மை பிராமணர்களுக்கு உருவானது. அவர்களே உருவாக்கிக் கொண்டது அது. மரபான கலைகளை பேணவும் தொடரவும் ஊக்கமளித்த தியசஃபிகல் சொசைட்டி போன்ற அமைப்புகளின் கருத்தியல்பாதிப்பும் அதற்கு உதவியது.

தியாகராஜர் உஞ்சவிருத்தி எடுத்து வாழ்ந்தாலும் கூட சரபோஜியின் சபைக்குச் சென்று பாட விரும்பவில்லை. மனிதனை துதிக்கும் இழிசெயல் என அதை அவர் நினைத்தார். இந்தமனநிலை பிராமணர்கள் நடுவே சமீபகாலம் வரைக்கும்கூட நீடித்தது. தொழில்முறைப்பாட்டு ஒரு இழிவாக கருதப்பட்டதை நாம் மோகமுள்ளில்கூட காணலாம். ரங்கையா அப்படியே தியாகையாவின் நகல்வடிவம். அவர் தொழில்முறைப்பாடகனான ராமுவை சற்றே அருவருப்புடன்தான் எப்போதும் பார்க்கிறார். இசைக்கலைஞர்களுக்கு பிற வைதிகப்பிராமணர் பெண்கொடுப்பதில்லை என்ற நிலை நிலவியதை அழகிரிசாமியின் சிறுகதையில் காண்கிறோம். தொழில்முறைப் பிராமண இசைக்கலைஞர்கள் உருவானபின்னரும்கூட பெண்கள் பாடுவதற்கு பிராமணசமூகத்தில் பெரும் எதிர்ப்பு இருந்தது.

இன்னொரு விஷயத்தையும் கவனிக்கவேண்டும். 'எந்தரோ மகானுபாவுலு' என தியாகராஜர் திகைப்பும் நெகிழ்வுமாக பாடியது ஷட்கால கோவிந்த மாரார் என்ற பெரும்பாடகர் ஆறுகாலத்தில் பாடியதைக் கேட்டபோதுதான். 'எவ்வளவு மகான்கள் இருந்திருக்கிறார்கள்' என்ற வியப்பு உருவாக்கும் அளவுக்கு ஒரு மறைந்த பெருமரபை தியாகராஜர் கோவிந்த மாராரில் கண்டார்.

கோவிந்தமாரார் திருவிதாங்கூர் அரசைச் சேர்ந்தவர். அன்னியப்படையெடுப்புகள் நிகழாத காரணத்தால் பழைய பாணர் மரபு உட்பட சங்ககால வாழ்க்கைமுறை அழியாது நீடித்த ஒரு இடம் தென்திருவிதாங்கூர். மாராரசாதி என்பது பழைய பாணர்களில் இருந்து பதிமூன்றாம்நூற்றாண்டில் உருவான ஒரு பாடகர்சாதி. கோயில்களில் பாடி, வாத்தியம் இசைக்கும் கலைஞர்கள் இவர்கள். தியாகையர் வியந்தது அந்த மரபைத்தான்..

இந்தவரலாறு ஏறத்தாழ தெளிவாகவே நம் இசைமரபில் உள்ளது. ஏனென்றால் இது சமகாலம் வரைக்கும் நீளக்கூடிய ஒன்று.

[குழுமவிவாதத்தில் இருந்து]

# (5) ஒடுக்கப்படுகிறார்களா பிராமணர்கள் ? - 1

பத்ரி சேஷாத்ரி பிராமணர்கள் தமிழகத்தில் நடத்தப்படும் விதம் பற்றி டைம்ஸ் ஆஃப் இந்தியா நாளிதழில் எழுதிய கட்டுரை இணையத்தில் கடும் விமர்சனத்திற்குள்ளாகியது என்றார்கள். முக்கியமான சில எதிர்வினைகளை மட்டும் தேர்ந்து அளிக்கும்படி சொன்னேன். தொலைபேசியில் நான் சொன்ன கருத்துக்களை எழுதியே ஆகவேண்டும் என்று அரங்கசாமி சொன்னார்.அனேகமாக அனைவரும் எதிர்வினை ஆற்றிவிட்டமையால் என் கருத்தை எழுதலாமென்று தோன்றியது.

பத்ரி சேஷாத்ரியின் கட்டுரை ஏற்கனவே வேறு சொற்களில் அசோகமித்திரனால் சொல்லப்பட்டதுதான். வெவ்வேறு பிராமணர்கள் அதை எழுதியிருக்கிறார்கள். பொதுவாக தமிழ்பிராமணர்களின் ஆதங்கம் அது என்று சொல்லலாம். அதை நான்கு கருத்துக்களாகச் சுருக்கலாம்.

1. தமிழ்பிராமணர்கள் அதிகாரத்தில் இருந்து மெல்லமெல்ல விரட்டியடிக்கப்படுகிறார்கள்.

2. தமிழ்பிராமணர்கள் சமூகத் தளத்தில் அவமதிக்கப்படுகிறார்கள்

3. தமிழ்பிராமணர்கள் தங்கள் தனிப்பட்ட பண்பாட்டை தக்கவைக்க அனுமதிக்கப்படுவதில்லை.

4 இந்நிலைகாரணமாக தமிழ்பிராமணர்கள் மெல்லமெல்ல தமிழகத்தைவிட்டு வெளியேறி வருகிறார்கள்.

**எதிர்வினைகளைப்பற்றி..**

இதைப்பற்றி வந்த எதிர்வினைகளே பெரும்பாலும் பிராமணர்களக் கீழ்த்தரமாக வசைபாடி, அவதூறு செய்து அவமதிப்பவைதான். பத்ரி சேஷாத்ரி சொன்னவற்றுக்கு ஆதாரங்களைத்தான் எழுத்தில் அளித்துக்கொண்டிருக்கிறோம் என்றுகூட அறியாத மூர்க்கமே அவற்றில் வெளிப்பட்டது.

இன்னொருவகை எதிர்வினை, பிராமணர்களிடமிருந்து வந்தது. தங்களை முற்போக்குப் பிராமணர்கள் என்று காட்டிக்கொள்ளவேண்டும் என்ற வாஞ்சையின் வெளிப்பாடுகள் அவை. எவ்வகையிலும் சமநிலை

அற்றவை.அந்தக்குரல் எப்போது பிராமணக் காழ்ப்பு இங்கே எழுந்ததோ அன்றுமுதல் இங்கே இருந்துகொண்டிருக்கிறது. அந்தக்குரல் உடனே கவனிக்கப்படும் என்பதும், அதைச் சொன்னவர் தற்காலிகமான பாராட்டுகளுக்கு பாத்திரமாவார் என்றும் சொல்பவர்கள் அறிவார்கள்.

ஆனால் ஏதேனும் ஒரு கருத்தில் எப்போதேனும் அந்தப்பிராமணர்கள் அவர்களின் ஆதரவாளர்களான அந்த இடைநிலைச்சாதி சாதிவெறியர்களுடன் மாறுபடுவார்கள் என்றால் 'என்ன இருந்தாலும் நீ பாப்பான், நீ அப்டித்தானே சொல்லுவே' என்ற வசையே அவர்களுக்கும் கிடைக்கும். காலமெல்லாம் பெரியார் பெயரைச் சொல்லிக்கொண்டிருந்த ஞாநி கருணாநிதியின் முதுமையைச் சுட்டிக்காட்டிவிட்டார் என்பதற்காக அவரை பார்ப்பனன் என வசைபாடி ஏழெட்டு கட்டுரைகளை அவரது நண்பர்களே எழுதியிருந்தனை நினைவுகூர்கிறேன்

இந்த எதிர்வினைகளின் அரசியலில் நான் கூர்ந்து நோக்கியது தலித்துக்களின் குரலை. எனக்கு ஒரு குரல்கூட கண்ணுக்குப்படவில்லை. யோசித்துப்பார்க்கிறேன். சென்ற சில ஆண்டுகளாக எனக்கு மிக நெருக்கமாக உள்ள தீவிர தலித் செயல்பாட்டாளர்களான நண்பர்கள் எவரேனும் இந்த வகையான காழ்ப்பைக் கக்கும் சொற்களைச் சொல்வார்களா என? வே.அலெக்ஸ் போன்ற ஒருவர் பிராமணர்களை அல்ல எந்த ஒரு மக்கள்திரளையும் பற்றி வெறுப்புடன் ஒரு சொல் சொல்லிவிடுவாரா? பாரிசெழியனால் சொல்லமுடியுமா?

நான் கேட்டதே இல்லை. ஒருமுறைகூட. தனிப்பேச்சுகளில்கூட. மாறாக ஸ்டாலின் ராஜாங்கம் ஒருமுறை சொன்னார். 'சாதிக்காழ்ப்பு என்றால் என்ன என்று எங்களுக்குத் தெரியும். அதனால் எந்த ஒரு சாதியையும் வெறுப்பின் குரலால் அடையாளப்படுத்த எங்களால் முடியாது' அன்று ஏற்பட்ட மகத்தான மனநெகிழ்ச்சியை இன்று நினைவுகூர்கிறேன்.

### பகுதி 1. பத்ரி சேஷாத்ரிக்கு பதில்

என் அனுபவத்தைக்கொண்டு, நேரடியாக மேலே சொல்லப்பட்ட நான்கு கருத்துக்களையும் பரிசீலிக்க விழைகிறேன்.இதில் மடக்கி மடக்கி விவாதம் செய்பவர்களிடம் சொல்ல எனக்கு ஏதுமில்லை. வெறுப்பரசியல் செய்வதைப்போல எளியது ஏதுமில்லை. எந்தத் தரப்பையும்

எடுத்துக்கொண்டு புள்ளிவிவரங்களை அள்ளிவைத்து மணிக்கணக்காக வாதிடலாம்.வெறுப்பு அளிக்கும் வேகம் மட்டும் இருந்தால்போதும்

நான் சொல்வது நான் தனிப்பட்ட முறையில் அறிந்தவை. எழுத்தாளன் என்பவன் ஒருவகையில் அனைவரும் உள்ளூர அறிந்தவற்றை மீண்டும் சொல்பவனே. அதற்காக சமூகத்தின் ஆழ்மனத்துக்குள் செல்பவன் அவன். நான் சொல்வனவற்றை மனசாட்சியை அளவுகோலாகக் கொண்டு பார்க்கும் எவரும் அறிய முடியும். இலக்கியவாதியின் உண்மையான வாசகர்கள் அவர்களே.

அதற்கு அப்பால் ஒன்றுண்டு. இன்று இந்தவிஷயத்தில் பேசிக்கொண்டிருக்கும் எவரின் குரலுடனும் சேர்ந்தது அல்ல என் குரல். இது இந்தக்காலகட்டத்தின் முதன்மை படைப்பிலக்கியவாதியின் குரல். நீங்கள் சொல்லும் ஒவ்வொரு சொல்லும் காலத்தில் மறைந்தபின்னும் எஞ்சும் குரல் இது

ஆம், எவர் என்னதான் குட்டிக்கரணம் அடித்தாலும் இதை மறைக்க முடியாது. இது இங்கே ஒலித்துக்கொண்டுதான் இருக்கும். இதை மறுப்பவர்களின் மனசாட்சியுடனும் பேசிக்கொண்டுதான் இருக்கும். என் ஆசான் ஜெயகாந்தன் இதைவிட வெறுப்பு அனலடித்த காலகட்டத்தில் சிங்கம் போல மேடையேறி நின்று முழங்கிய கருத்துக்கள்தான் இவை

**ஒன்று: பிராமணர்களும் அதிகாரமும்**

பிராமணர்கள் அதிகாரத்தில் இருந்து அகற்றப்படுகிறார்கள் என்பது ஒருவகையில் உண்மை. ஆனால் அது வேறுவழியில்லாமல் காலமாற்றத்தில் நிகழக்கூடியது. தவிர்க்கமுடியாதது. வளர்ச்சியின் ஒரு பகுதி அது. ஆகவே அறச்சார்பு கொண்டது.

இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைத்தபின் ஆற்றப்பட்ட உரைகளில் ஒன்றில் நேரு இதைச் சொல்கிறார். இந்தியச் சுதந்திரப்போராட்டம் பெரும்பாலும் உயர்சாதியினரால் நடத்தப்பட்டது. ஏனென்றால் அன்று அவர்களே கல்விகற்றவர்கள். ஆனால் சுதந்திரத்துக்குபின் வந்த ஜனநாயக அரசியல் பெரும்பான்மையினராக உள்ள கீழ்ப்படிநிலைச் சாதிகளுக்கே சாதகமானதாக இருக்கும். அதுவே ஜனநாயகத்தின் வழிமுறை. ஆகவே உயர்சாதியினர் தங்கள் தகுதியை மேம்படுத்திக்கொண்டு அடுத்தகட்டத்துக்குச் செல்லவேண்டும் என்றார் நேரு

நேற்றைய நிலப்பிரபுத்துவச் சாதியமைப்பில் உயர்சாதியினராக இருந்த மூன்றுதரப்பினரே அதிகாரத்தை வகித்தனர். புரோகிதச் சாதியினர் [பிராமணர்] நிலவுடைமைச் சாதியினர் [வேளாளர், முதலியார்] வணிகச் சாதியினர் [செட்டியார்]

ஜனநாயகம் வந்தபோது இந்த உயர்சாதிகளின் அதிகாரம் மெல்லமெல்ல இல்லாமலாகியது. சென்ற அரைநூற்றாண்டில் நாம் காணும் படிப்படியான சமூகமாற்றம் என்பது முதல்படிநிலையில் இருந்த இச்சாதிகளின் சரிவே.

இன்று வேளாண்மைநிலம் பெரும்பாலும் வேளாளர், முதலியார்களின் கையை விட்டுச் சென்றுவிட்டது. நாட்டின் நில உச்சவரம்புச்சட்டத்தால் அவர்களின் நில உரிமை பறிக்கப்பட்டது. முழுக்கமுழுக்க செட்டியார்களிடமிருந்த தொழில்களில் பெரும்பாலானவை இன்று இடைநிலைச்சாதிகளிடம் சென்றுவிட்டிருக்கின்றன.

இதேபோன்ற ஒரு வீழ்ச்சியே பிராமணர்களுக்கும் ஏற்பட்டது. இது ஏதோ தமிழகத்தில் மட்டும் நிகழ்ந்தது அல்ல. இந்தியாமுழுக்க நிகழ்ந்தது, நிகழ்ந்து வருவது. தென்மாநிலங்களில் கேரளம், தமிழகம்,கர்நாடகம் ஆகியவை இந்த வேகம் கூடுதலாக உள்ளது.

முதல்படிநிலைச் சாதிகளில் பிராமணர்களின் நிலஉரிமை என்பது கொஞ்சம் மாறுபட்டது. அது கைவச உரிமை அல்ல, வரியில் ஒரு பங்கைக் கொள்ளும் உரிமை மட்டுமே.சோழர்களின் ஆட்சியில் அவ்வுரிமை அளிக்கப்பட்டது. பின்னர் நாயக்கர் ஆட்சியில் அவை மேலும் உறுதி செய்யப்பட்டன.

மன்னராட்சி மறைந்து பிரிட்டிஷ் ஆட்சி வந்ததுமே அந்த வரி அவர்களுக்கு வராமலாகியது. அவர்கள் ஆங்கிலக் கல்வி கற்று ஆங்கில அரசில் பணியில் சேர்ந்து அவ்வீழ்ச்சியை எதிர்கொண்டார்கள். அவர்களுக்கு நெடுங்காலமாக கல்விகற்றுவந்த ஒரு குலமரபிருந்தமையால் அதற்கேற்ற மனநிலையும் குடும்பச்சூழலும் இருந்தது.

ஆங்கில ஆட்சிக்காலத்தில் பிராமணர் வகித்த பதவிகள் இந்தியாவுக்கு முழுச் சுதந்திரம் வருவதற்கு முன்னரே குறையத்தொடங்கின. 1920களிலேயே அரசுப்பதவிகளில் கல்விகற்று மேலே வந்த பிற சாதிகள் உரிமைகோரிப் பெறத் தொடங்கின.

தென்னகத்தில் பிராமண வெறுப்பின் விதை இந்தப் போட்டி வழியாகவே உருவாகியது. உருவாக்கியவர்கள் பிராமணர்களிடம் அதிகாரத்துக்காகப்

போட்டியிட்ட நாயர்கள். முக்கியமாக திருவிதாங்கூரில் இது ஆரம்பித்தது. சுவதேசாபிமானி ராமகிருஷ்ணபிள்ளை என்பவர் இதன் கருத்தியல் முதல்வர்.

இவரிடமிருந்து இக்கருத்துக்கள் அன்றைய மெட்ராஸ் ராஜதானியின் பகுதியாக இருந்த வடகேரளத்துக்குச் சென்றன. அங்கிருந்து சென்னைக்கு வந்தன. ஆரம்பகால பிராமண வெறுப்பு அரசியலை முன்வைத்தவர்கள் டி.எம்.நாயர் போன்ற மலையாளிகள். பிராமணரல்லாதோர் இயக்கம் பின்னர் தெலுங்கர்களைச் சேர்த்துக்கொண்டு வளர்ந்தது. திராவிட இயக்கமாக மாறியது

அத்துடன் கிராமங்களில் கிராமகணக்குப்பிள்ளையாக பிராமணர்கள் வகித்த பாரம்பரியப் பதவிகள் இந்தியா முழுக்க அவர்களிடமிருந்து காங்கிரஸ் அரசுகளாலேயே பறிக்கப்பட்டன. கிராம ஆசிரியர்களாக அவர்கள் பெற்றுவந்த ஊதியத்தை நிறுத்தலாக்கியவர் ராஜாஜி. நவீனக் கல்விமுறையைக் கொண்டுவருவதற்காக அவர் இதைச்செய்தார்.

அதன்பின் இந்தியா முழுக்க கொண்டுவரப்பட்ட நிலச்சீர்திருத்தங்கள் பிராமணர்களின் நிலவுரிமையை இல்லாமலாக்கின. தமிழகத்தில் அதைக்கொண்டுவர வாதிட்டவர் ராஜாஜிதான்.1962ல் காமராஜ் ஆட்சிக்காலத்தில் அது சட்டமாகியது. அரசுப்பணிகளில் இடஒதுக்கீட்டுக்கான சட்டங்கள் சுதந்திரத்துக்கு முன்னும்பின்னும் காங்கிரஸ் ஆட்சிக்காலத்தில் உருவானவை. தேசிய அளவில் நடைமுறைக்கு வந்தவை

ஆகவே பிராமணர்கள் மட்டும் அதிகாரத்தில் இருந்து விலக்கப்பட்டிருக்கிறார்கள், பிராமணர்களை திராவிடக்கட்சிகள் ஒடுக்கி அதிகாரமற்றவர்களாக ஆக்கின என்பது ஒரு மனப்பிரமை மட்டுமே. உயர்படிநிலைகளில் இருந்த சாதிகளில் எண்ணிக்கைபலம் அற்ற அத்தனை சாதிகளுமே இந்தியாவில் ஜனநாயகம் வந்தபோது அதிகாரத்தை இழந்தன. அது ஜனநாயகத்தின் இயல்பான போக்கு.

சுதந்திரத்துக்குப்பின் கல்வி பரவலானபோது அந்தப்போக்கு மேலும் விரைவுகொண்டது. இதில் எண்ணிக்கைபலம் கொண்ட ஆதிக்கசாதிகள் மட்டும் தாக்குப்பிடித்து நீடித்தன. கேரளத்தில் நாயர்களும் சிரியன் கிறித்தவர்களும் உதாரணம்.

ஆனால் இவ்வாறு அதிகாரமிழந்த உயர்சாதிகளிலேயே கூட பிராமணர்கள் பிறரை விட ஒரு படிமேல் என்றே சொல்லவேண்டும். ஏனென்றால் முன்னரே சென்னை போன்ற நகரங்களில் குடியேறி, அரசுடன் ஒத்துழைத்து தொழில்களில் காலூன்றிவிட்டமையால் பிராமணர்களுக்குரிய பெருந்தொழில் நிறுவனங்கள் இங்கே இருந்தன. தனியார்துறைகளில் வேலைவாய்ப்புகள் இருந்தன. உதாரணமாக, டிவிஎஸ் போன்ற ஒரு குழுமம் பிராமணர்களுக்கு உள்ளது. வேளாளர்களுக்கோ முதலியார்களுக்கோ அப்படி எந்த அடிப்படையும் இல்லை

அத்துடன் கல்விகற்று மேலே செல்லும் துடிப்பை குடும்பச்சூழலில் இருந்தே பெற்றுக்கொண்டமை காரணமாக சிலகுறிப்பிட்ட தொழில்களில் பிராமணர்கள் நீடிக்கவும் முடிந்துள்ளது. ஆடிட்டர்கள் போல.

ஆனால் கண்டிப்பாக அவர்களின் வேலைவாய்ப்புகளும் அரசுசார் அதிகாரமும் குறைந்துகொண்டேதான் செல்கின்றன. அதை அவர்கள் கணிப்பொறித்துறை போன்றவற்றில் புகுந்து அடைந்த வெற்றி மூலம் ஈடுகட்டிவருகிறார்கள். இந்த மாற்றத்தை நான் ஒரு ஜனநாயக பூர்வமான மாற்றமாகவே எண்ணுகிறேன். அதை ஒரு கல்விகற்ற, வரலாற்றுணர்வுகொண்ட பிராமணர் ஏற்றுக்கொண்டுதான் ஆகவேண்டும். பிற உயர்சாதியினரும்தான்.

### இரண்டு: பிராமணர்களின் மீதான சமூக அவமதிப்பு

தமிழ் பிராமணர்கள் சமூகத் தளத்தில் அவமதிக்கப்படுகிறார்களா? ஆம். நான் ஓர் அரசுத்துறையில் இருபதாண்டுக்காலம் பணியாற்றியவன். பல துறைகளில் பல அதிகாரிகளிடம் நேரடியான பழக்கமும் அலுவலகங்களில் அனுபவமும் கொண்டவன். மேலும் கேரளப் பணிசூழலில் இருந்து தமிழகத்துக்கு வந்தமையால் சற்று விலகி நின்று நோக்கும் பார்வையையும் அடைந்தவன். ஆகவே என் அவதானிப்பு இதுவே.

தமிழக அலுவலகச் சூழலில் தலித்துக்களும் பிராமணர்களும்தான் சாதிரீதியாக அவமதிப்புக்கு உள்ளாகக்கூடியவர்கள். நான் தமிழகம் வந்த புதிதில் ஒரு தமிழக அரசு உயரதிகாரியுடன் அவரது அறையில் பேசிக்கொண்டிருந்தேன். இலக்கிய ஆர்வம் கொண்டவர் என்பதனால் நெருக்கம். ஒரு பிராமண துணையதிகாரி வந்து விடுப்பு

விண்ணப்பக்கடிதங்களை அவர் முன் வைத்தார். அனைத்திலும் அவர் குறிப்பு எழுதியிருந்தார்.

“ஏய்யா, நீதானே சாங்ஷனிங் அதிகாரி? எங்கிட்ட கொண்டுட்டு வந்து ஏன் தாலிய அறுக்கிறே?’ என்று இவர் எரிந்து விழுந்தார். பிராமண அதிகார் பேசாமல் நின்றார். “நான் எதுக்குய்யா இதையெல்லாம் பாக்கணும்?’ என்றார் மீண்டும். அவர் பேசாமல் நிற்கவே “கொண்டுட்டு போ” என்று கூச்சலிட்டார்.

அவர் மெல்லியகுரலில் “நீங்க பாத்தா நல்லாருக்கும் சார்” என்றார். அது இவரை கொஞ்சம் குளிரச்செய்தது “ஒரு முடிவையும் எடுக்காதே. பயம்” என்றபின் அதிகாரி என்னை நோக்கி “பாப்பாரப்புத்தி எப்டி வேலைசெய்யுது பாருங்க” என்றார்

நான் பின்னர் வெளியே வந்தபோது அந்த பிராமண அதிகாரி என்னிடம் தன்னை அறிமுகம் செய்துகொண்டார். ரப்பர் வாசித்திருந்தார். “சார் நான்தான் சாங்ஷனிங் ஆபீசர். ஆனா நான் முடிவெடுத்தா அத்தனை பேரும் பாப்பாரத்தாயளின்னு திட்டுவானுக. இப்ப இவர் ஒருத்தர் வாயத்தானே கேட்டாகணும். அதும் ரூமுக்குள்ள… பரவால்ல” என்றார் சிரித்தபடி

அன்று அடைந்த அதிர்ச்சி நான் விருப்ப ஓய்வுபெறும் வரை நீடித்தது. அரசலுவலகங்களில் பிராமண ஊழியர் ஒருவர் எப்படியும் வாரத்துக்கு ஒருமுறை நேரடியாகவே சாதி குறித்த வசையை எதிர்கொள்ள வேண்டும். நக்கல்கள், கிண்டல்கள், நட்பு பாவனையில் சொல்லப்படும் இடக்குகள் வந்துகொண்டே இருக்கும்.

பிராமணர்களைப் பற்றி நம் இடைநிலைச் சாதியின் பொதுப்புத்தி ஒன்றுண்டு. ஈ.வெ.ரா அவர்களால் அது ஒரு கொள்கையாகவே நிலைநாட்டப்பட்டது. பிராமணர்கள் என்றால் நயவஞ்சகம் செய்பவர்கள், பிறரைப்பற்றி தங்களுக்குள் இழித்துப் பேசிக்கொள்பவர்கள், மேட்டிமை நோக்குள்ளவர்கள், சுயநலவாதிகள் என்ற பேச்சை மீளமீளச் சொல்லிக்கொண்டிருப்பதை இருபதாண்டுக்காலம் கேட்டிருக்கிறேன்.

ஆனால் கணிசமானவர்களின் வாழ்க்கையில் பிராமணர்கள் பேருதவிசெய்திருப்பார்கள். நீண்டகால நட்பு பேணியிருப்பார்கள். இக்கட்டான தருணங்களில் இவர்கள் சென்று நிற்கும் இடமும் ஒரு பிராமணனின் வீடாகவே இருக்கும்.அத்தனைக்கும் அப்பால் பிராமணர்

“பாப்பாரப்புத்தியக் காட்டிட்டீயே” என்ற வசையையும் எதிர்கொள்ளவேண்டியிருக்கும்

1991ல் அருண்மொழி தன் வீட்டை விட்டு தருமபுரிக்கு என்னைத் தேடி வந்தபோது அவளை உடனே கூட்டிச்சென்று தன் இல்லத்தில் வைத்திருந்தவன் என் நண்பன் ரமேஷ். அவன் அக்காவின் பட்டுப்புடவையைக் கட்டிக்கொண்டுதான் அருண்மொழி என்னை திருமணம் செய்துகொண்டாள். அவர்கள் வீட்டில்தான் எங்கள் முதலிரவு. ஒரு வேளை பெரும் அடிதடியாக முடிந்திருக்கக் கூடும். போலீஸ் கேஸ் ஆகியிருக்கக் கூடும். ஆனால் அவர்கள் அதை யோசிக்கவில்லை.

ஆனால் அன்று அங்கிருந்த அத்தனை வன்னியரும் யோசித்தார்கள். அத்தனை நாயுடுக்களும் யோசித்தார்கள். எந்த வீட்டுக்கும் நான் சென்றிருக்க முடியாது. அதைப்பற்றி அப்போதே வெளிப்படையாக தொழிற்சங்கக் கூட்டத்தில் பேசியிருக்கிறோம். “அவங்க வீட்டு பொம்புளைங்களுக்கு ஒரு அண்டர்ஸ்டாண்டிங் இருக்கு சார். அவங்க கொஞ்சம் போல்டாவும் இருப்பாங்க. நம்ம வீட்டுல பயந்து சாவாங்க” என்றுதான் அனைவரும் சொன்னார்கள். அது உண்மைதான், தமிழகத்தில் மற்றசாதிகளில் முற்போக்கெல்லாம் தெருவிலும் திண்ணையிலும்தான். [ஃபேஸ்புக்கில்?] வீட்டுக்குள் பெண்கள் முழுக்கமுழுக்க பழைமைவாதிகள்.தலைமுறை தலைமுறையாக.

அரசு அலுவலகங்களில் தலித்துக்கள் கூட்டமாக இருப்பார்கள். அவர்களுக்கு எண்ணிக்கைபலம் உண்டு. சட்டப்பாதுகாப்பும் உண்டு. ஆகவே நேரடியாக அவமதிப்பு சாத்தியமல்ல. அவமதிப்பு எங்கு நிகழுமென்றால் பொதுவாகப் பேசும்போது வாய்தவறி சிலர் சாதிசார்ந்த வசைகளை அல்லது சாதிவெறிக் கருத்துக்களை சொல்லிவிடுவார்கள். உடனிருக்கும் தலித் நண்பர் அவமதிக்கப்படுவார்.

இடைநிலைச் சாதியினர் நிறைந்த அறைக்குள் தலித் சாதியினர் எவரும் இல்லை என்ற உறுதி ஏற்பட்டதும் அப்பட்டமான சாதிவெறிப்பேச்சுக்கள் கிளம்பும். தலித் என்பவன் நேர்மையற்றவன், சுத்தமற்றவன், ஒழுக்கம் அற்றவன், அவன் பெண்கள் எவனுடனும் செல்பவர்கள் இதுதான் தலித் பற்றிய இடைநிலைச்சாதியின் மனப்படிமம். சென்ற இருபதாண்டுக்காலத்தில் நான்கண்ட மூன்று தலைமுறை இடைநிலைச் சாதியினரிடம் எந்த மனநிலை மாற்றமும் இல்லை.

ஆனால் அடிக்கடி பெரியார் பிறந்த மண் என்ற பிலாக்காணம் வேறு. நண்பர்களே ஈரோட்டில்தான் இன்றும் தனிக்குவளை முறை இருக்கிறது. பெரியார் பிறக்காத, நம்பூதிரி பிறந்த கேரளத்தில் அதைக்கேட்டால் அதிர்ந்து கைநடுங்கிவிடுவார்கள். இந்த பாவனைகளைப்பற்றி இனிமேலென்றாலும் மனசாட்சி உடைய சிலராவது உடைத்து பேசிக்கொள்ளவேண்டாமா?

அலுலகங்களில்வேலைச்செய்ய்ம் தலித் சாதியினர் அவமதிப்புக்குள்ளாவது அவர்களின் வீட்டு திருமணங்கள் மற்றும் இல்லவிழாக்களுக்கு பிறர் செல்லாமல் புறக்கணிக்கும்போது என்பதை கண்டிருக்கிறேன். ஒருமுறை முந்நூறு பேர் வருவார்கள் என எதிர்பார்த்து ஒருவர் ஏற்பாடுகள் செய்திருக்க தொழிற்சங்க நண்பகள் முப்பதேபேர் போனோம். அவரது சுண்டிச் சுருங்கிய முகம் இன்றும் நினைவில் எரிகிறது

ஆனால் பிராமணர்கள் நேரடியாகவே வசைபாடப்படுவார்கள். அதிகாரிகள் என்றால் இன்னமும் வசைபாடப்படுவார்கள். அந்தவசைகளை அவர்கள் எதிர்கொள்ளும் முறை பரிதாபகரமானது. பெரும்பாலும் அதை ஒருவகை வேடிக்கையாக மாற்றிக்கொண்டு கடந்துசெல்வார்கள். அல்லது போலி மேட்டிமைத்தனம் ஒன்றைக் காட்டி பேசாமல் செல்வார்கள்.

தங்களை தூய வைதிகர்களாக ஆக்கிக்கொண்டு பட்டையும் கொட்டையுமாக வந்து முழுமையாக ஒதுங்கியே இருப்பது பிராமணர்களின் ஒரு தற்காப்பு முறை. அவர்கள் டேபிளில் ஓரமாக அமர்ந்து சாப்பிடும்போது "அய்யரே, இது என்ன போனமாசத்து ஊளைச்சாம்பாரா?"என்ற நக்கல் எழும். தலைகுனிந்து சாப்பிட்டால் தப்பிக்கலாம்

அல்லது அதிதீவிர எதிர்நிலை. தொழிற்சங்கத்தில் சேர்ந்து கம்யூனிஸ்ட் ஆகிவிடுவது. பீஃப் பொரியல் சாப்பிடுவது. ஆரம்பகால கம்யூனிஸ்டு பிராமணர்கள் அதை ஆத்மார்த்தமாகவே செய்தார்கள். பெரியாருக்கே திராவிடவெறியைச் சொல்லிக்கொடுக்க ஆரம்பிப்பது வரைச் செல்லும்போது கொஞ்சம் போலித்தனம் சேர்ந்துகொள்ளும். இன்று இணையத்தில் எழுதும் ஞாநி போன்ற பிராமணப் பெரியாரிஸ்டுகளை எல்லா அலுவலகங்களிலும் காணலாம்.

இடதுசாரித் தொழிற்சங்கங்கள் 90கள் வரை பெரும்பாலும் சாதிய அடிப்படை அற்றவை. ஆகவே அங்கே மேலே சொன்ன முற்போக்குப் பிராமணகள் செயல்பட முடிந்தது. அவர்களின் ஈடிணையற்ற உழைப்பு இல்லையேல்

தமிழகத்தில் தொழிற்சங்க இயக்கமே இல்லை. பெரும்பாலான தொழிற்சங்கங்களைக் கட்டி எழுப்பியவர்களில் பிராமணர்கள் முதன்மையாக இருப்பார்கள்.

ஆனால் 90களில் மெல்லமெல்ல இடதுசாரித் தொழிற்சங்கங்களும் சாதியவாதத்துக்குள் வந்தன. அந்தந்தப் பகுதியின் எண்ணிக்கை பலமுள்ள இடைநிலைச்சாதியினரே தலைமைக்கு வரமுடியுமென்ற நிலை வந்தது. பிராமணர்கள் ஒதுக்கப்பட்டனர். பலர் ' உன் பாப்பாரவேல இங்க வேண்டாம் கேட்டியா?' என்ற சொல்லைக்கேட்டு கண்ணீருடன் விலகிச் சென்றனர்

ஆச்சரியமென்னவென்றால் சிலர் நேராக முதல் அடையாளத்துக்கே சென்றதுதான். தர்மபுரியில் நானறிந்த தோழர் பாலசுப்ரமணியன் வீட்டிலேயே கோயிலைக் கட்டி விபூதியும் காதில்பூவுமாக அலுவலகம் வரத் தொடங்கினார்!

இதேநிலைதான் நம்முடைய பொதுவான அமைப்புகள் அனைத்திலும். கல்விநிலையங்களில் ஒவ்வொருவரும் இதை உணர்ந்திருக்கலாம். நான் கல்லூரியில் படிக்கையில் பிராமணர்களை அவமதிப்பதை அனைவரும் ஒரு பெருங்கலையாகவே செய்தோம். நான் மீனை கொண்டுசென்று அவர்களின் சாப்பாட்டில் போடுவேன். 'டேய் ஊளைச்சாம்பார்' என்று எந்தப் பேருந்திலும் உரக்கக் கூவுவேன்.

இன்று அதற்காகக் கூசுகிறேன். ஆனால் அன்று அது சரியானது என எங்களுக்குக் கற்பிக்கப்பட்டிருந்தது. ஆகவே இன்று இணையத்தில் பிராமண வெறுப்பைக் கக்கும் பையன்களை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. அவர்கள் இச்சூழலின் உருவாக்கங்கள். சுயமாகச் சிந்திக்கும் வாசிப்போ, அகம் விரியும் பண்பாட்டுக்கல்வியோ, உலகப்புரிதலோ அற்றவர்கள். அவ்வகையில் பரிதாபத்துக்குரியவர்கள்.

பிராமணர்கள் சந்திக்கும் அவமதிப்பு அலுவலகங்கள், கல்விநிலையங்களில் மட்டும் அல்ல. சமூகதளத்தில் கூடத்தான். சென்னை தவிர பிறநகரங்களில் இருந்து அவர்கள் மெல்லமெல்ல பின்வாங்கிக்கொண்டே இருக்கிறார்கள்.என் நண்பனும் எழுத்தாளனுமான யுவன் சந்திரசேகர் 1990ல் கோயில்பட்டியில் இருந்த அவனே கட்டிய புதிய வீட்டை நஷ்டத்துக்கு விற்றுவிட்டு சென்னைக்குச் சென்றதைக் கண்டதும் இந்த வினாவை நான் அடைந்தேன்.இது ஏன் நிகழ்கிறது?

பின்னர் வெவ்வேறு தளங்களில் இதை கவனித்திருக்கிறேன். பிராமணர்கள் தமிழகத்தின் சிறிய ஊர்களில் வாழமுடியாது, இதுவே உண்மை. அவர்களின் பெண்கள் தொடர்ந்து அவமதிக்கப்படுவார்கள். பிராமணர்களிடம் பேசும்போதே மெல்லிய கிண்டலுடன் அவர்களின் பெண்களைப்பற்றி குறிப்பிடுபவர்களை நான் கண்டிருக்கிறேன். தமிழகத்தின் தெருக்களில் பிராமணப்பெண் என்று அறியப்பட்ட ஒரு பெண் அவமதிப்பைச் சந்தித்துக்கொண்டுதான் நடமாட முடியும். இந்நிலை இந்தியாவில் வேறெங்கும் இல்லை.

தூத்துக்குடியில் இருந்த ஒரு பிராமண நண்பனிடம் பதினைந்தாண்டுகளுக்கு முன்பு இதைப்பற்றிப் பேசியபோது அவனது மனைவி அலுவலகம் செல்லும்போது அடையும் அவமதிப்பைப் பற்றிச் சொன்னான். அது அவனது கற்பனையே என நான் வாதிட்டேன். பந்தயம் வைத்துக்கொண்டேன். அவள் அலுவலகம் செல்லும்போது நான் கூடவே விலகிச் சென்றேன். நம்ப முடியவில்லை. இரண்டுகிலோமீட்டர் நடந்துசெல்லும் வழியில் மூன்றுபேர் அவளை 'லட்டு' என்று கூப்பிட்டு சீட்டியடித்தார்கள். வேறெந்த சாதிப்பெண்ணை அப்படிச் சொல்லியிருந்தாலும் செவிள் பிய்ந்திருக்கும்.

இப்போது என் மகள் பிளஸ்டூ படிக்கச் செல்லும்போது பிராமணநண்பர் ஒருவர் வந்து அவரது மகளை என் மகளுடன் எப்போதுமே இருக்கும்படி அனுமதிக்க முடியுமா என்று கோரினார். ''இவ நாயர் பொண்ணு. கூடவே ஒரு முஸ்லீம் பொண்ணும் நாடார் பொண்ணும் போகுது. அவங்களை பசங்க ஒண்ணும் சொல்லமாட்டாஙக. இவ மட்டும்போனா கிண்டல் பண்றா. நீங்க சொன்னா அவா இவளைச் சேத்துக்கிடுவா'என்றார்.

நான் சைதன்யாவிடம் சொன்னேன் “போப்பா. சரியான பயந்தாங்குளி அவ. போர்” என்றாள். நான் தமிழகத்தின் பெரியாரிய ஞானமரபை அவளுக்கு விரிவாகச் சொன்னேன். இந்தச் சமூகத்தின் இரு பெரும் பலியாடுகளில் ஒன்று பிராமணச் சமூகம் என்றேன். எந்நிலையிலும் தலித்துக்களிடம் இச்சமூகம் நடந்துகொள்வதை ஆதரிக்கலாகாது, அவர்களை அவமதிக்கும் ஒரு சொல் பிறக்கும் இடத்தில் கணநேரமும் இருக்கக் கூடாது என அவளிடம் சொல்லியிருந்தேன். அதையே இங்கும் கடைப்பிடிக்கவேண்டும் என்றேன். அவள் கண்களில் நீர் நிறைந்ததைக் கண்டேன்

**மூன்று: பிராமணர்கள் வெளியேறுகிறார்களா?**

ஆம், உண்மை. நானறிந்தே நாகர்கோயிலில் பிராமணர்களின் எண்ணிக்கை மிகமிகக் குறைந்துவிட்டது. கணிசமான குடியிருப்புகள் இன்றில்லை. இன்று என் வீட்டருகே இருக்கும் அக்ரஹாரம் மெல்ல மெல்ல கைவிடப்பட்டு பாழடைந்து வருகிறது. அவர்களில் இளையதலைமுறை இங்கு இருப்பதில்லை. இதேதான் என் மனைவியின் ஊரான தஞ்சையில்.

ஏன் தொடர்ந்து வெளியேறுகிறார்கள்? தமிழகத்தில் சென்னை [ஓரளவு திருச்சி] தவிர பிற இடங்களில் அவர்கள் எவ்வகையிலும் பாதுகாப்பற்றவர்களே. அவர்களின் நிலம் பறிக்கப்பட்டால், அவர்கள் தாக்கப்பட்டால் காவல்நிலையங்களுக்குச் செல்லமுடியாது. ஏனென்றால் ஓர் அரசியல்வாதியின் துணையின்றி இன்று எவரும் காவல் நிலையம் செல்லமுடியாது என்பதே நடைமுறை யதார்த்தம். அரசியல்என்பது முழுக்கமுழுக்க சாதிசார்ந்தது. பிராமணர்களுக்கு உதவ அவர்களுக்கான அரசியல்வாதி எவரும் தமிழக அரசியலில் இல்லை. தமிழகத்தில் சென்னைக்கு வெளியே பஞ்சாயத்து மெம்பராகக்கூட பிராமணர்கள் இல்லை

கோயில்பட்டி அருகே ஒரு பிராமண நண்பருக்கு காவல்நிலையம் செல்லவேண்டிய சிக்கல் வந்தபோது குலசேகரத்தில் இருந்து அவரது நண்பரான என் அண்ணா கிளம்பிச்செல்லவேண்டியிருந்ததை நினைவு கூர்கிறேன். நாடறிந்த ஒரு பிராமணரின் [நீங்களெல்லாம் அறிந்தவர்தான்] நிலம் மிகக்குறைந்த விலைக்கு அவரிடமிருந்து மிரட்டி வாங்கப்பட்டபோது அவர் ஒன்றுமே செய்யமுடியாமல் கையறுநிலையில் என்னிடம் பேசியிருக்கிறார். அவர் முதலீடு செய்த மொத்தப்பணத்தையும் ஒருவர் ஏமாற்றிவிட்டு சவால் விட்டபோது அவர் தனிமையில் என்னிடம் குமுறியிருக்கிறார்.

இன்று தமிழகத்தில் சமூக வாழ்க்கை என்பது சாதி சார்ந்தது. சாதி சார்ந்தே நீதி. பிராமணர்கள் எண்ணிக்கையற்றவர்களாக இருக்கையில் நிர்க்கதியாக நிற்கிறார்கள். அவர்களை அவமதிப்பது சிறந்த சமூகசேவை என நம்பும் ஒரு சமூகம் அவர்களைச் சூழ்ந்திருக்கிறது. அதிலிருந்து அவர்கள் தப்பி ஓடிக்கொண்டிருக்கிறார்கள். பத்ரி சேஷாத்ரி சொல்வது உண்மைதான்.

### நான்கு : பிராமணர்களின் பண்பாட்டு அடையாளம்

பத்ரியின் கட்டுரையின் கடைசி வினா, பிராமணர்கள் தங்கள் தனிப்பட்ட பண்பாட்டை தக்கவைக்க விரும்புவதைப்பற்றியது. அதை பிராமண மேட்டிமைத்தனமாக முத்திரை குத்தி உடனடியாக எகிறிக்குதிக்கிறார்கள்.

இன்று, கவுண்டர், தேவர், நாடார் அத்தனைபேரும் தங்கள் பண்பாட்டின் தனித்தன்மைகள் சிலவற்றை அழியாமல் பேணிக்கொள்ள முயல்வதைக் காணலாம். வேறெந்த காலத்தை விடவும் குலதெய்வ வழிபாடுகளும் குலச்சடங்குமுறைகளும் இன்று புத்துயிர் கொள்கின்றன

காரணம் உலகமயமாக்கல். அது வேர்களற்றவர்களாக தங்களை ஆக்கிவிடும் என்ற அச்சம். இது உலகமெங்கும் உள்ள அச்சம். நிகழ்ந்துகொண்டிருக்கும் மாற்றம். உலகக்குடிமகனாக அடையாளமற்றவனாக ஆகிவிடவேண்டும் என்ற கனவு நவீனத்துவ காலகட்டத்திற்குரியது என்றால் அடையாளங்கள் கொண்ட , ஒரு குறிப்பிட்ட நுண்பண்பாட்டின் பகுதியாக ஆகிவிடவேண்டும் என்பது பின்நவீனத்துவ காலகட்டத்திற்குரிய மனநிலை எனலாம்.

அதில் பிராமணர்கள் மட்டும் ஈடுபடக்கூடாது என்று சொல்வது அராஜகம். பிராமணர்களுக்கு அவர்களுக்கே உரிய பண்பாடு ஒன்று உள்ளது என அவர்கள் உணர்ந்தால் அதை அவர்கள் பேணுவதில் என்ன பிழை? அது பிறரை பாதிக்காதவரை அதில் தவறே இல்லை.

உண்மையில் இன்று இடைநிலைச்சாதியினரின் இறுதிச்சடங்குகள், குலதெய்வப்பூசைகள், நீத்தார் சடங்குகள் போன்றவையே அடுத்தகட்டச் சாதிகளை அவமதிப்பவையாக உள்ளன. அவை மாற்றியமைக்கப்படவேண்டும். ஆனால் பெரியார் பிறந்த புனித மண்ணில் அதைப்பற்றி ஒரு இடைநிலைச்சாதி மனிதாபிமானியும் பேசப்போவதில்லை. தலித் நண்பர்கள் குமுறுவதையே காண்கிறேன்

ஆனால் பிராமணர்கள் வரலட்சுமி பூசை கொண்டாடினால் அதை அவமதிக்கலாம். வீட்டுக்குள் ராமநவமி கொண்டாடினால் கேலிச்செய்யலாம். இதுவே இங்குள்ள மனநிலை

1997 என நினைக்கிறேன். நான் தியாகராஜ உத்சவத்துக்காக திருவையாறு சென்றிருந்தேன். பெரும்பாலும் பிராமணர்கள் பங்குகொள்ளும் விழாவாக அது இருந்தது அப்போது. அங்கே தியாகராஜரின் பாடல்கள் மட்டுமே பாடப்படும். அவர் தெலுங்கில் மட்டுமே பாடியவர். அங்கே ம.க.இ.கவினர்

வந்து "தமிழில் பாடு இல்லையேல் ஓடு' என்று கூச்சலிட்டுக்கொண்டே இருந்தனர்.

அன்றைய நிகழ்ச்சியை அவர்கள் சிதைத்தனர். அதிகபட்சம் முப்பதுபேர். போலீஸ் அவர்களை அழைத்து கொண்டு வெளியே விடும். உடனே வேறுவழியாக திரும்பி வந்தார்கள். அங்கிருந்த ஐந்தாயிரம் பேரும் பொறுமையாகக் காத்திருந்தனர். சிலர் கண்ணீர்விட்டனர்.

அதேநாளில் அன்று கன்னட வொக்கலிக மாநாடு கோவையில் நடந்தது. தேவேகௌடாவும் சரோஜாதேவியும் கலந்துகொண்டார்கள் என்று நினைவு. ஒரு ம.க.இ.கவினர் அங்கே செல்லவில்லை. ஏனென்று அவ்வியக்க நண்பரிடம் கேட்டேன். 'அந்த அளவுக்கு எங்களுக்கு நம்பர் இல்ல தோழர்' என்றார்

ஈரமண்ணை தோண்டும் எளிய அரசியல் மட்டும்தான் இது. எவ்வகையான உண்மையான சமூக மாற்றத்தையும் இது உருவாக்கப் போவதில்லை. தன் சாதியை பண்பாட்டு ரீதியாக மேலும் மேலும் தொகுத்துக்கொண்டே செல்பவர்கள் பிராமணச் சாதியின் பண்பாட்டு அடையாளங்களை மட்டும் ஆதிக்கச்சின்னங்கள் என்று காண்பதைப்போல கீழ்மை பிறிதில்லை.

'

ஆக, பத்ரி சேஷாத்ரியின் கட்டுரையை நான்கு கருத்துக்களாகச் சுருக்கலாம் என்றால் அதில் முதல் கருத்தைத் தவிர அனைத்துமே நான் முழுமையாக உடன்படுபவை. ஒரு பிராமணர் தமிழகத்தில் அவர் அவமதிக்கப்பட்டு ஒதுக்கப்பட்டு துரத்தப்படுவதாக உணர்வது அப்பட்டமான நடைமுறை உண்மை.

## 2. தமிழகப் பிராமண எதிர்ப்பரசியலின் அரசியல் பண்பாட்டுப் பின்னணி

பத்ரி சேஷாத்ரியின் கட்டுரை மற்றும் அதற்கு எதிரான விவாதங்களின் பின்னணியில் தமிழகத்தின் பிராமண எதிர்ப்பின் பண்பாடு மற்றும் அரசியல் பின்னணியை சுருக்கமாக விளக்கலாமென எண்ணுகிறேன். ஒரே கட்டுரையில் இவை இருப்பது புதியவாசகர்களுக்கு உதவும்.

ஏனென்றால் கணிசமானவர்களுக்கு இவை ஏதும் தெரியாது. வெறுப்பரசியலை கக்குபவர்கள் எழுதும் எளிய ஃபேஸ்புக் குறிப்புகள் வழியாகவே அவர்கள் கருத்துக்களைக் கற்றிருக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலானவர்கள் இந்த நீண்ட கட்டுரையை வாசிக்கப்போவதில்லை என நான் அறிவேன். பத்துபக்கம் பொறுமையாக வாசிக்கக் கூடிய எவரும் அந்த வகையான கீழ்மை நிறைந்த வெறுப்புகளை கக்க மாட்டார்கள். இதை வாசிப்பவர்கள் அவர்களுக்கு எங்கேனும் பதில் சொல்ல இது உதவலாம்

**ஒன்று: பிராமணவெறுப்பின் அரசியல் பின்னணி**

இங்கே பிராமண வெறுப்பு எதனால் உருவாக்கப்பட்டது? அதன் பண்பாட்டு அடித்தளம்தான் என்ன?

சங்ககாலம் முதல் நாம் காணும் தமிழகப் பண்பாட்டு மோதல் என்பது தமிழர் xவடுகர் என்பதுதான். [வடுகர் என்றால் தெலுங்கர், கன்னடர். கிருஷ்ணைக்கும் கோதாவரிக்கும் நடுவே உள்ள வேசரநாட்டைச் சேர்ந்தவர்கள்] கோதாவரி கிருஷ்ணா படுகையில் இருந்து மக்கள் இங்கே குடியேறிக்கொண்டே இருந்திருக்கிறார்கள்.அதை இங்குள்ளவர்கள் எதிர்த்துப்போராடி தோற்றபடியே இருந்தனர்

உண்மையில் இருபது நூற்றாண்டாக தமிழகத்தை ஆட்சி செய்தவர்கள் வடுகர்களே. தமிழக வரலாற்றில் தமிழ்மன்னர்கள் ஆண்டகாலம் மொத்தமாகவே முந்நூறு வருடம் இருக்காது

தமிழக ஆட்சியை வடுகர்களிடமிருந்தே வெள்ளையர் கைப்பற்றினர். அதன்பின்னரும் அவர்களையே ஜமீன்தார்களாக வைத்திருந்தனர். வெள்ளையரின் ஊழியர்களாக இருந்த பிராமணர்களுக்கும் வெள்ளையரின் நிலக்கிழார்களாக இருந்த வடுகர்களுக்கும் இடையே போட்டியும் கசப்பும் இருந்தது. ஈவேரா அவரது கட்டுரை ஒன்றில் காவலதிகாரியாக 'நிமிர்வும் மிடுக்கும் கொண்ட' நாயிடுவுக்குப் பதிலாக 'மீசையில்லாத பார்ப்பனன்' வரும் நிலையை வெள்ளையன் உருவாக்கிவிட்டதை எண்ணி வருந்தி எழுதியிருக்கிறார். இதுதான் அக்காலத்தின் முக்கியமான முரண்.

இதில் மெல்லமெல்ல பிராமணர் கை ஓங்கி வந்தது. மறுபக்கம் ஜமீன்தாரிமுறை ஒழிப்பால் தெலுங்கர்களின் ஆதிக்கம் சரிந்தது. சுதந்திரப்போராட்டம் வந்தபோது பிராமணர் மேலும் அதிகாரம் பெற்றனர்.

அதற்கு எதிரான வடுகர்களின் கசப்பே திராவிட இயக்கம். அக்கசப்பை அவர்களிடம் பெருக்கி இயக்கம் கண்டவர்கள் மலபார் நாயர்கள். திராவிடர் என்ற சொல்லை ஈவேரா எடுத்துக்கொண்டது தெலுங்கர்களை உள்ளடக்கும்பொருட்டே. ஏனென்றால் அதற்கு முன்னரே தமிழர் என்ற சொல்லையே மிகப்பரவலாக அன்றைய தமிழ்மறுமலர்ச்சி இயக்கம் கையாண்டு வந்தது

வரதராஜுலு நாயிடு தலைமையில் ஈவேரா வெளியேறி திராவிட இயக்கம் உருவானதன் பின்னணியில் உள்ள இந்த மொழி அரசியலை நாம் கோவை அய்யாமுத்து போன்றவர்களின் சுயசரிதையில் காணலாம். சி.என்.அண்ணாத்துரை போன்றவர்கள்கூட வீட்டில் தெலுங்கு பேசியவர்கள் என்பதை பாரதிதாசனின் கட்டுரை காட்டுகிறது.

இத்தனை ஆண்டுக்கால அரசியல் வழியாக வடுகர் x தமிழர் பிரச்சினையை வெற்றிகரமாக பிராமணர் X தமிழர் என்று மாற்ற இவர்களால் முடிந்தது. அன்று எழுச்சி பெற்று வந்த இடைநிலைச்சாதி அரசியலுக்கு இந்த இருமை உதவிகரமாகவும் இருந்தது. இதுவே வரலாறு

சிலகாலம் முன்பு அசோகமித்திரனுக்கு சென்னையில் நிகழ்ந்த ஒரு கூட்டத்தை லீனா மணிமேகலை பிராமணியக் கூட்டம் என்று கடுமையாகத் தாக்கி எழுதியிருந்தார். நான் லீனாவை நன்றாக அறிவேன். தனிப்பட்ட முறையில் மதிப்பும் பிரியமும் அவர்மேல் உண்டு. அந்தக் கட்டுரை எனக்கு ஒரு ஆச்சரியம். நான் நண்பரைக்கூப்பிட்டு 'லீனா தெலுங்கரா" என்றேன். "இல்லைசார் தலித் என்றார்கள்" என்றார்.

'அது அவர் உருவாக்கும் பிம்பம். தலித் இத்தனை பிராமண வெறுப்பைக் கக்கமாட்டார். கண்டிப்பாக இந்தம்மா தெலுங்குதான்' என்றேன். அவர் அரைமணிநேரத்தில் கூப்பிட்டு "எப்டிசார் சொன்னீங்க? உண்மைதான்' என்றார். "தமிழகத்தின் பிராமணக்காழ்ப்பு அரசியலின் பின்புலத்தை அறிந்தால் இதை ஊகிப்பது ஒன்றும் கஷ்டமே இல்லை" என்றேன்.

இந்த அதிகார அரசியலை கொஞ்சம் கொஞ்சமாக தலித்துக்கள் இன்று உணரத் தொடங்கியிருக்கிறார்கள். தங்கள் சொந்த அரசியலை அவர்கள் உருவாக்கத் தொடங்கியிருக்கிறார்கள்.

### பிராமண வெறுப்பின் பண்பாட்டுப் பின்னணி

இந்தியாவில் பிராமண மறுப்ப்பு என்றும் இருக்கும். அதற்கான வேர் நமது சமூக அமைப்பிலேயே உள்ளது. நம் சாதிச் சமூகத்தின் உச்சியில் இருந்தவர்கள் பிராமணர்கள். அதன் கருத்தியலை நிலைநிறுத்தியவர்கள். ஆகவே அவர்களை அடித்தளத்தில் இருந்துகொண்டு சாதியத்தால் பாதிக்கப்பட்டவர்கள் எதிர்ப்பது இயல்பானதே

பிராமணிய மதிப்பீடுகளை நிராகரிக்காமல் சென்ற நிலப்பிரபுத்துவகால மனநிலைகளை நாம் கடக்க முடியாது. கொள்கைத்தளத்தில் இது மிக இன்றியமையாதது. மிகத்தீவிரமாக, ஈவேராவை விட பலமடங்கு முழுமையுடன் அதைச் செய்தவர் நாராயணகுரு. நடராஜகுருவும் நித்யசைதன்ய யதியும் அவ்வகையில் பிராமண எதிர்ப்பாளர்களே.

ஆனால் பிராமண எதிர்ப்பு வேறு பிராமணக் காழ்ப்பு வேறு. பிராமண எதிர்ப்பு என்பது பிராமணர்களால் முன்வைக்கப்பட்ட சென்றகால நிலப்பிரபுத்துவ யுக மதிப்பீடுகளை தர்க்கபூர்வமாக மறுத்து உடைப்பது. அவர்கள் உருவாக்கிய நம்பிக்கைகளைக் கடப்பது. அவர்களின் மனநிலைகளை நிராகரிப்பது. அதை மிகத்தீவிரமாக நித்ய சைதன்ய யதியின் எழுத்துக்களில் காணலாம். என் முன்னுதாரணம் இந்த மரபே

பண்டித அயோத்திதாசரின் எழுத்துக்களில் உள்ளதும் பிராமண நிராகரிப்பே. இருவகையில் அது அவருக்கு முக்கியம். பிராமணர்களுக்கு நேர் எதிரான முனையில் நின்ற சாதி அவருடையது என்பதனால். அக்காலகட்டத்தைய சாதிய மதிப்பீடுகளை நிலைநிறுத்தியவர்கள் பிராமணர்கள் என்பதனால்.அம்பேத்கரின் பிராமண எதிர்ப்பும் அத்தகையதே

பிராமணக் காழ்ப்பு என்பது அது அல்ல.அது கண்மூடித்தனமான வசைபாடல். அவமதித்தல். சிறுமை செய்தல். அதற்கு வரலாற்றுணர்வோ வாசிப்போ சிந்தனையோ தேவையில்லை. .ஈவேரா முன்வைத்தது அதைத்தான். அதன் முதன்மை நோக்கம் தன் சொந்த சாதிப்பற்றை மறைப்பதுதான். நேற்றைய சாதியமைப்பில் நடுப்பகுதியில் இருந்து அனைத்தையும் அனுபவித்துவிட்டு பிராமணனை கூண்டில் ஏற்றி தப்பிப்பது மட்டும்தான்.

இந்து மெய்ஞான மரபுக்குள்ளேயே பிராமண எதிர்ப்பு என்றும் இருந்தது. பிராமணர்கள் வைதிகமரபின் குரல்களாகவே பெரும்பாலும் ஒலித்தனர். அவைதிக மரபுகள் அவர்களுக்கு எதிராகவே செயல்பட்டன. அது முற்றிலும் வேறு ஒரு தளம்

இன்றைய நிலையில் சாதிப்பற்று பற்றிய குற்றச்சாட்டுகளை பிராமணர்கள் மேல் சுமத்துபவர்கள் முதலில் தங்கள் சொந்தச் சாதிப்பற்றை அறிக்கையிடவேண்டும். சாதிக்கு எதிரான எந்தக் கலகமும் சொந்தச் சாதியின் சாதிவெறிக்கு எதிரான நிலைபாட்டில் இருந்தே ஆரம்பிக்கப்படவேண்டும்.

இத்தனை சாதி எதிர்ப்புக் குரல்கள் ஒலிக்கும் தமிழ்ச்சூழலில் இடைநிலைச்சாதியில் இருந்து அச்சாதியை விமர்சனம் செய்து ஒரு குரல் எழுவதை நம்மால் காணமுடிவதில்லை. ராஜாஜியை கிழித்து தோரணம் கட்டலாம். முத்துராமலிங்கத் தேவர் பற்றி ஒரு விமர்சனத்தை தமிழகத்தில் எழுதிவிடமுடியாது. இதுவே இங்குள்ள சாதி எதிர்ப்பின் உண்மையான நிலை

பாலைவன மக்கள் ஒரு சடங்குசெய்வார்களாம். வருடத்தில் ஒருமுறை ஒரு வெள்ளாட்டைப்பிடித்து கிராமத்திலுள்ள அத்தனை நோய்களையும் அதன்மேல் ஏற்றுவதற்குரிய சில பூசைகளைச் செய்தபின் அதை ஊரைவிட்டுத் துரத்தி பாலைவனத்தில் விடுவார்கள். அது நீரின்றி செத்து காய்ந்து அழியும். நோய்கள் ஊரைவிட்டு விலகிவிட்டதாக இவர்கள் எண்ணிக்கொள்வார்கள்

சாதிவெறியில் ஊறிய தமிழகம் அப்படிக் கண்டெடுத்த வெள்ளாடுதான் பிராமணர்கள். அதன்மூலம் இங்கே இன்னமும் தலித்துக்களை அடிமைகளாக்கி வைத்திருக்கும் பழியில் இருந்து இடைநிலைச்சாதிகளும் பிரமணரல்லா உயர்சாதியினரும் தப்பித்துக்கொள்கிறார்கள்

**மூன்று, பிராமண வெறுப்பு உருவாக்கும் இழப்பு**

ஜெயகாந்தன் ஒருமுறை சொன்னார். 'எனக்குச் சாதியில் நம்பிக்கை இல்லை, சாதிப்புத்தியில் நம்பிக்கை உண்டு' என்று. சீண்டும் முறையில் அவர் அதைச் சொன்னாலும் யோசிக்கவேண்டிய ஓர் அம்சம் அதிலுண்டு

சாதி ஒழிக என்று நாத்தெறிக்க கோஷமிட்டு சாதிக்குள் சென்று ஒடுங்கும் கும்பலிடம் இதைச் சொல்லி புரியவைக்க முடியாது. ஆனால் கொஞ்சமேனும் சமூகவியல் கோணத்தில் சமநிலையுடன் சிந்திப்பவர்களுக்கு இதைப் புரிந்துகொள்வதில் தடையிருக்காது

சாதியமைப்பு என்பது ஒருவகை உற்பத்தியமைப்பாக பல்லாயிரம் ஆண்டு இங்கே நீடித்த ஒன்று. அதன் விலக்குகள் ஏற்றத்தாழ்வுகளை ஒட்டி

கீழ்மையான பல மனநிலைகளை அது உருவாக்கியிருக்கிறது. அதை வென்று மீண்டுதான் இந்தத் தலைமுறையில் நாம் நவீன மனிதனாக முடியும்

ஆனால் கூடவே அது பல சாதகமான அம்சங்களையும் உருவாக்கியிருக்கிறது. தொழில், வணிகம் ஆகியவற்றுக்குரிய மனநிலைகளை உருவாக்கி அதை குடும்பப்ப்பண்பாடாக மாற்றி நிலைநிறுத்துவதைச் சொல்லலாம். செட்டியாரோ,நாடாரோ, மரைக்காயரோ செய்யும் வணிகத்தை தேவரோ, வெள்ளாளரோ செய்ய முடிவதில்லை. ஆசாரிகள் இன்றும் தொழில்நுட்பத் திறன் கொண்டவர்களாகவே இருக்கிறார்கள். இத்திறன்கள் நவீன வாழ்க்கையிலும் பயனுள்ளவையே.

அத்தகைய சில பண்புகள் பிராமணர்களிடம் உண்டு. நீங்கள் தெருவில் நின்றுபேசும் அரசியல் விடலை அல்ல என்றால், ஏதேனும் துறையில் நிர்வாகவியல் பழக்கம் உடையவர் என்றால் நான் சொல்வதை புரிந்துகொள்வீர்கள். அதைப் பயன்படுத்தியும் கொள்வீர்கள்.

பிராமணர்களின் அந்தத் தனிப்பண்புகளே அவர்களை இன்றும் தேவையானவர்களாக ஆக்குகின்றன.
நான் மூன்று பண்புநிலைகளைச் சொல்வேன். ஒன்று, கல்விமேல் அவர்களுக்கிருக்கும் ஈடுபாடும் அதற்குரிய மனநிலையும். இரண்டு, வன்முறையற்ற தன்மை. மூன்று, அடிப்படைக் குடிமைப்பயிற்சி

நீண்டகாலமாகவே கல்வியை தொழிலாகக் கொண்டிருந்தவர்கள் என்பதனால் பிராமணர்களுக்குக் கல்விகற்பதில் ஊக்கம் உள்ளது. அவர்களின் குடும்பச்சூழல் அதற்குச் சாதகமானதாக உள்ளது. கற்பதையும் கற்பிப்பதையும் அவர்கள் தங்களுக்குரிய தொழிலாக கொண்டிருந்தமையால் உருவான இயல்பான மனநிலை இது

இந்தக்காரணத்தால் பிராமணர்கள் இயல்பாகவே மிகச்சிறந்த ஆசிரியர்கள் என்பதைக் காணலாம். சென்றதலைமுறை வரை நம் ஆசிரியர்களில் கணிசமானவர்கள் பிராமணர்களாக இருந்தனர். எந்தச் சாதியினராக இருந்தாலும் சென்றதலைமுறையினரின் உள்ளங்களில் மகத்தான பிராமண ஆசிரியர்களின் நினைவுகள் இருப்பதைக் காணலாம். .

சமீபத்தில் ஊட்டி கருத்தரங்கில் நாஞ்சில்நாடன் அவரது கம்பராமாயணக் கல்வி பற்றிச் சொல்லும்போது கைகூப்பி கண்ணீருடன் அவருக்கு

கம்பராமாயணம் பயிற்றுவித்த ரா.அ.பத்மநாபன் அவர்களை நினைவுகூர்ந்தார். அந்த மனநிலையை மீண்டும் மீண்டும் காண்கிறேன்.

மோசமான பிராமண ஆசிரியர் விதிவிலக்கே. ஏனென்றால் இளமையிலேயே அந்தத் தொழிலில் பெருவிருப்பம் ஏற்படும்படியாக அவர்கள் உருவாக்கப்பட்டிருக்கிறார்கள். அது அவர்களுக்கு நிறைவை அளிக்கிறது. வணிகப்பின்புலம் அல்லது வேளாண்மைப்பின்புலம் கொண்ட ஒருவர் அவரது தனிப்பட்ட குணநலனால் அந்த விருப்பை அடைந்தால்தான் உண்டு.

பிராமணர்கள் இன்று கல்வித்துறையில் இருந்து விலகிவிட்டனர். முக்கியமான காரணம், நம் கல்விநிலையங்களில் அவர்கள் இன்று பணியாற்ற முடியாது. அந்நிறுவனங்களின் ஊழியர் நடுவே தனிமைப்படுத்தப்பட்டு அவமதிப்புக்கு உள்ளாவார்கள். மாணவர்கள் நடுவே சமூகத்திலிருந்து அவர்கள் பெற்றுக்கொள்ளும் பிராமணக்காழ்ப்பு வேரூன்றியிருப்பதனால் வகுப்புகளில் ஆசிரியருக்கான மதிப்பை பிராமணர்கள் இன்று பெறமுடியாது

இது நம் சமூகம் நெடுங்காலமாக உருவாக்கி எடுத்த ஓர் அமைப்பின் பயனை நாம் வேண்டுமென்றே இழப்பதாகும். உண்மையிலேயே அவர்கள் விலகியதன் இழப்பு நம் கல்வியமைப்பில் இன்று உள்ளது என்றே நினைக்கிறேன்.

நம் கிராமங்களில் நெடுங்காலமாக பிராமணர்கள் ஒரு சமரசப்படுத்தும் புள்ளியாக இருந்துள்ளனர். கிராமங்களின் உயவுப்பொருளே அவர்கள்தான் என்று ஒருமுறை கந்தர்வன் சொன்னதை நினைவுறுகிறேன். இன்றுகூட பெருநிறுவனங்களில் அவர்களே சமரசத்துக்கும் பேச்சுவார்த்தைக்கும் உரியவர்கள். எந்த அமைப்பிலும் பிராமணர்கள் ஒரு முக்கியமான பங்கு வகிக்க முடியும்.

இயல்பாக அவர்கள் வணிகர்கள் அல்ல. போராடும் குணமுடையவர்கள் அல்ல. துணிந்து முடிவெடுக்கமாட்டார்கள். ஆகவே நிறுவனங்களில் அவர்கள் தலைமைப்பொறுப்பை வகிப்பது இயல்பாக நிகழாது. ஆனால் அவர்கள் மிகச்சிறந்த ஒருங்கிணைப்பாளர்கள். மிகச்சிறந்த ஆலோசனையாளர்கள்.

தமிழகத்திலுள்ள பெரும்பாலான சாதிகளிடம், குறிப்பாக ஆதிக்க சாதிகளிடம் உள்ள வழக்கம் சட்டென்று எகிறிப்பேசிவிடுவது. [ வாழ்நாள்

முழுக்க அதைக் களைய போராடிவருபவன் நான்] பிராமணர்களிடம் அவ்வழக்கமே அனேகமாக இல்லை என்பதைக் காணலாம். அவர்களின் வன்முறையற்ற தன்மை அவர்களுக்கு அளிக்கும் சிறப்பியல்பு இது. இதனாலேயே அவர்கள் மிகச்சிறந்த சமரசக்காரர்களாக விளங்குகிறார்கள்

பிராமணர்களில் பலர் அவர்கள் மட்டுமே இந்தியப்பண்பாட்டை உருவாக்கியவர்கள், அதன் சாதனைகளுக்கெல்லாம் பொறுப்பானவர்கள் என்று எண்ணிக்கொள்கிறார்கள். அது முற்றிலும் அபத்தமானது. இந்தியமெய்ஞானத்தில் அவர்களின் பங்களிப்பு குறைவு. இந்தியக் கலைகளில் அவர்களின் பங்களிப்பு ஒப்புநோக்க மேலும் குறைவே. இந்தியாவின் தொழில்நுட்பத்தில் அவர்களுக்கு மிகக்குறைவான இடமே உள்ளது. தத்துவத்தில்தான் அவர்களின் பங்களிப்பு அதிகம்.அவர்கள் இந்தியாவின் முதன்மைக் கல்வியாளர் சமூகமாக இருந்தார்கள் என்பதன் விளைவு இது.

அடிப்படையில் பிராமணர்களுடையது தொகுக்கும் புத்தி. ஆகவே இலக்கண ஆசிரியர்களாகவே சிறப்பாக செயல்பட்டுள்ளார்கள். aggressiveness எனப்படும் அகவேகம் இல்லாத காரணத்தால் முதன்மைப் பெரும்படைப்புகளை எழுத அவர்களால் சாதாரணமாக முடிந்ததில்லை. அவற்றை போர்ச்சாதிகளும் அடித்தளச் சாதிகளுமே சாதித்தன. வான்மீகியும், வியாசனும், குணாத்யனும், பாசனும், கம்பனும் காளிதாசனும், இளங்கொவும், வள்ளுவனும் பிறரே

இதை ஏன் சொல்லவருகிறேன் என்றால் பிராமணர்களின் பங்களிப்பு என்று சொன்னதுமே ஒரு பெரும் கும்பல் கிளம்பி “அப்படின்னா மத்தவனெல்லாம் முட்டாளா?” என்ற கேள்வியை எழுப்புவதே வழக்கமாக உள்ளது. பிராமணர்கள் இந்திய ஞான மரபின், கலைமரபின்,அறிவியல் மரபின் மையப்பங்களிப்பாளர்கள் அல்ல. அவர்கள் அதை தொகுத்தவர்கள், கற்பித்தவர்கள், பேணுபவர்கள். அந்தப்பங்களிப்பு மிகமுக்கியமானது.

பிராமணக்காழ்ப்பு காரணமாக நம் சமூகத்தின் முக்கியமான ஒரு பகுதியின் பங்களிப்பை நாம் புறக்கணிக்கிறோம். அவர்கள் இங்கிருந்து சென்று வெளிநாடுகளில் குடியேறுவதென்பது நம் சமூகத்திற்குப் பேரிழப்பே. இருபது வருடங்களில் இங்குள்ள ஆசாரிகள் அனைவரும் அமெரிக்கா சென்றுவிட்டார்கள் என்றால் அடுத்த இருபதாண்டுக்கால்த்தில் அதன்

விளைவுகளை நாம் பொருளியல் தளத்திலேயே காண்போம். அதைப்போலத்தான் இதுவும்

**நான்கு: பிராமணர்களும் சாதிமுறையும்**

இந்த வெறுப்பை பிராமணர்கள் மேல் பிறர் மேல் காட்ட என்ன காரணம் சொல்லப்படுகிறது? அவர்கள் சாதிமேட்டிமை கொண்டவர்கள். சாதிமுறையின் லாபங்களை அனுபவித்தவர்கள்.சாதியை நிலைநிறுத்தியவர்கள். ஆகவே அவர்களை அவமதிப்பது 'சாமிக்கு நேத்திக்கடன்'. [ராமசாமியும் சாமியே]

சாதியைப்பற்றி அம்பேத்கர் முதல் கோசாம்பி வரை எத்தனையோ பேர் எழுதிவிட்டனர். இன்று பக்கம் பக்கமாக அவை மொழியாக்கம் செய்யப்பட்டு கிடைக்கின்றன.சாதியை பிராமணன் உருவாக்கி பிறரிடம் பரப்பி அவர்களைச் சுரண்டி அவன் மட்டும் கொழுத்து வாழ்ந்தான் என்பதுபோன்ற அப்பட்டமான திரிபை அடிப்படை ஞானம் கொண்ட எவரும் ஏற்றுக்கொள்ளமாட்டார். அப்படி ஒருவர் சொல்கிறார் என்றான் அது சுயநலத்தின் விளைவான அயோக்கியத்தனம் மட்டுமே

சாதிமுறை இங்கிருந்த பழங்குடிச் சமூக அமைப்பில் இருந்து மெல்லமெல்ல உருவாகி வந்தது. சாதிகள் என்பவை பழங்குடி இனக்குழுக்களின் தொகுப்பு. ஆகவே தான் ஒவ்வொரு சாதியும் உபசாதிகளாகவும் கூட்டங்களாகவும் பிரிந்துகொண்டே செல்கிறது. இச்சாதிபேதங்களை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி இங்கே நிலப்பிரபுத்துவம் கட்டிஎழுப்பப்பட்டது. அந்தச் சுரண்டலே இங்கே பேரரசுகளை உருவாக்கியது

அந்த நிலவுடைமை முறையின் புரோகிதர்களாக இருந்த பிராமணர்கள் அந்த முறையை நிலைநாட்டுவதற்குரிய சிந்தனைகளை பரப்பியவர்கள்.அந்த அமைப்பின் லாபங்களை அனுபவித்தவர்கள். அதற்கு அவர்கள் பொறுப்பு ஏற்றாகவேண்டும்.

ஆனால் அவர்கள் மட்டும்தான் அதற்குப் பொறுப்பா என்ன? இங்கே நாடாண்டவர்கள், நிலத்தை உரிமைகொண்டவர்கள், வணிகம் செய்து பொருள்குவித்தவர்கள் எவ்வகையிலும்பொறுப்பில்லையா? அவர்களெல்லாம் பிராமணர்களை கைகாட்டி தப்பித்துக்கொள்லலாமா?

இங்குள்ள சாதிமுறை நேற்றைய சமூகப் – பொருளியல் அமைப்பின் உருவாக்கம். இன்று அது சமூக ரீதியாக்ப் பொருளிழந்துவிட்டது.அதன்

பண்பாட்டுக்கூறுகள் சிலவற்றுக்கு மட்டுமே இன்று ஏதேனும் மதிப்பு உள்ளது. அது நேற்றைய யதார்த்தம். நேற்றை இன்று சுமந்தலையவேண்டியதில்லை. நவீன மனிதன் அதன் சாராம்சத்தை ஏற்றுக்கொண்டு முன்னகர்ந்தாகவேண்டும். அந்த மனநிலைகளை ஒவ்வொருவரும் உதறியாகவேண்டும்

அந்த அமைப்பு கொடுமைகளுக்காக நாம் இன்று குற்றவுணர்வு கொண்டாகவேண்டும். எவ்வகையிலேலும் அந்த அமைப்பின் நலன்களை அனுபவித்த ஒவ்வொருவரும் அந்தக் குற்றவுணர்ச்சியை அடையவேண்டும். தங்களைவிடக் கீழாக ஒரு சாதியை நடத்திய சாதியில் பிறந்த எவரும் அடைந்தாகவேண்டிய குற்றவுணர்ச்சி இது. இக்குற்றவுணர்ச்சியே நாம் நேற்றைய மனநிலைகளில் இருந்து மீள்வதற்கான வழியும் ஆகும்.

இதை சிலநாட்கள் முன் எழுதியபோது எனக்கு வந்த கடிதங்கள் என்னை பிராமணன் என வசைபாடின. அதாவது இங்குள்ள பிராமணரல்லாத உயர்சாதிகள் இடைநிலைச் சாதிகள் எவ்வகையிலும் அந்தக் குற்றவுணர்ச்சியை அடையத் தயாராக இல்லை. அப்பொறுப்பை ஏற்க அவர்களுக்கு மனமில்லை.

ஏனென்றால் உள்ளூர அவர்கள் அச்சாதிய மனநிலைகளை தக்கவைக்க விழைகிறார்கள். தன் மண்ணில் இன்னமும் இரட்டைக்குவளை இருப்பதை கண்டு கண்மூடிக்கொள்ளும் கவுண்டரும் நாயக்கரும் நாயிடுவும் 'பெரியார் மண்ணுடா!' என்று சொல்லி பிராமணன் மேல் பாய்வதைப்போல பச்சை அயோக்கியத்தனம் வேறில்லை. அதைத்தான் காண்கிறோம்.

'பிராமணன் பீயள்ளுவதைக் கண்டதுண்டா' என்று ஒருவர் கேட்டிருந்தார். "இல்லை, செட்டியாரும் முதலியாரும் கவுண்டரும் தேவரும் நாடாரும் கூடத்தான் அள்ளுவதில்லை' என்று நான் பதில் சொன்னேன்.

பிராமணன் உடலுழைப்பு செய்வதில்லை என்று இங்கே மேடைமேடையாகச் சொல்லப்படுகிறது. நான் கண்ட பிராமணர்களில் பாதிப்பேர் ஓட்டல்களில் இரவுபகலாக சமையல்வேலை செய்து வியர்குருவும் ஈரச்சொறியும் கொண்ட உடல்கொண்டவர்களே. ஆம் 'சொறிபிடித்த பார்ப்பான்' என்று பாவேந்தர் பாரதிதாசனார் அவர்கள் வசைபாடினாரே, அவர்கள்தான். ஆனால் வியர்த்து ஒழுக வெலைசெய்யும் வேளாளரைக் கண்டதில்லை, நாயிடுவைக் கண்டதில்லை.

பிராமணக் காழ்ப்பை சாதிய எதிர்ப்பு என்ற போர்வையில் வெளிப்படுத்துவது இங்குள்ள இடைநிலைச்சாதியின் சாதிவெறியர்கள் கொள்ளும் ஒரு கூட்டுப்பாவனை மட்டுமே. ஒவ்வொருவருக்கு உள்ளூர உண்மை தெரியும்.

**ஐந்து : பிராமணர்களின் எதிர்மனநிலை**

என் வெள்ளையானை நாவல் வெளிவந்தபோது அதில் தலித்துக்கள் மேல் காழ்ப்பு கொண்ட பிராமணர் ஒருவர் கதாபாத்திரமாக வருவதைக் க்ண்டு கொதித்துப்போய் பிராமணர்கள் எழுதியிருந்தனர். அந்நாவல் முன்வைக்கும் அடிப்படை அறத்தை அவர்கள் உணரத் தயாராக இல்லை. பிராமணர்கள் சென்ற நூற்றாண்டில் தலித்துக்களுக்கு எதிரான மனநிலை கொண்டிருந்தார்கள் என்ற எளிய வரலாற்றைக்கூட அவர்களின் சாதிப்பற்று மறைத்தது

ஆனால் அது இயல்பானதுதான். அந்நாவலில் சென்னையின் தெலுங்கு மக்களின் சாதிவெறி சுட்டப்பட்டிருந்ததைக் கண்டு அதைவிட அதிகமாகவே தெலுங்கு நண்பர்கள் சினம் கொண்டார்கள். நட்பைக்கூட சிலர் முறித்துக்கொண்டார்கள். இங்குள்ள ஒவ்வொரு சாதியும் அதைத்தான் செய்கின்றன.

சற்றேனும் புரிந்துகொள்ளக்கூடியவர்களாக இருந்தவர்கள் உண்மையில் பிராமணர்களே. பிராமண சாதியின் சாதியமனநிலைகளில் இருந்து வெளிவருவதற்கான உண்மையான முயற்சியை எடுத்தவர்கள் அவர்கள். இங்குள்ள இடதுசாரி அமைப்புகளெல்லாமே அவர்களை அடித்தளமாகக் கொண்டவைதான். பிராமணவெறுப்பைக் கக்கும் மா.லெ இயக்கங்கள்கூட

ஆனால் சென்ற சென்ற பதினைந்தாண்டுக்காலத்தில் பிராமணர்களின் மனநிலை மாறியிருக்கிறது. அவர்கள் சென்றகாலத்தில் சாதியத்தை நிலைநிறுத்தியமைக்குப் பொறுப்பேற்று வெட்கும் நிலையில் இன்றில்லை. ஏனென்றால் அதேயளவு பொறுப்பேற்கவேண்டிய பிறசாதியினர் எல்லாம் சாதிப்பெருமை பேசி ‘ஆண்டபரம்பரைடா!’ என்று மார்தட்டி அதிகாரம் நோக்கிச் சென்றுகொண்டிருக்கிறார்கள். அவர்கள் மொத்தச் சாதிமுறைக்கும் பிராமணர்களை பொறுப்பாக்கி ஒவ்வொரு நாளும் வசைபாடுகிறார்கள். மண்ணில் இருந்து துரத்துகிறார்கள்

இன்று பிராமணர்கள் ஒடுக்கப்படுபவர்களாக உணரத் தொடங்கியிருக்கிறார்கள். ஒடுக்கியதன் குற்றவுணர்ச்சி மறைந்து ஒடுக்கப்படுவதன் ஆற்றாமையும் சினமும் அவர்களிடம் வெளிப்படுகிறது. சவால்விடுவதுபோல சாதிச்சங்கங்களை அமைக்கிறார்கள். 'பிராமண சங்க அடலேறே' என்று ஒருவருக்கு வினைல் போர்டு வைத்திருப்பதை பார்வதிபுரத்தில் பார்த்தேன்

இங்கு நிகழும் கீழ்த்தரமான வெறுப்பரசியல் அவர்களை எதிர்ப்பரசியலுக்குக் கொண்டுசெல்கிறது. மெல்லமெல்ல அவர்களையும் வெறுப்பால் நிறைக்கிறது.

**முடிவாக….**

பேரா ராஜ் கௌதமனின் சுயசரிதை நாவலான காலச்சுமை [சிலுவைராஜ் சரித்திரத்தின் இரண்டாம்பகுதி] ஒரு முக்கியமான நிகழ்வை ஆவணப்படுத்துகிறது. அவரது மகள் கௌரி பிளஸ் டூவில் மாநில அளவில் வெற்றிபெறுகிறாள். அவரது கல்லூரியிலும் அவர் வாழும் தெருவிலும் வாழும் இடைநிலைச்சாதியைச் சேர்ந்த ஒருவர் கூட அவ்வெற்றியை அறிந்ததாகக் காட்டிக்கொள்ளவில்லை. ஏனென்றால் அவர் தலித். அவரை அறிந்தவர்கள், நெருக்கமானவர்களிடம் அதைப்பற்றி அவரே பேசும்போதுகூட இயல்பாகத் தவிர்த்துச்செல்கிறார்கள்

ஆனால் அவரை அறிந்திராத பிராமணர்கள் அவர் இல்லம் தேடி வருகிறார்கள். அவளைக் கொண்டாடுகிறார்கள். இனிப்புகளும் பரிசுகளும் கொண்டுவந்து கொடுக்கிறார்கள். இதை எழுதிச்செல்லும் ராஜ் கௌதமன் அவர்களின் அந்த மகிழ்ச்சி தனிமனிதர்கள் சார்ந்தது அல்ல, கல்வி மீதான அவர்களின் வழிபாட்டுமனநிலையைச் சார்ந்தது என்கிறார்

ஒருவேளை தமிழகத்திற்கு பிராமணர்கள் அளிக்கும் முதன்மையான கொடையே அதுதான். கல்விமேல், கலைகள் மேல் அவர்களிடமிருக்கும் பற்றே அவர்களை இச்சமூகத்திற்குத் தேவையானவர்களாக ஆக்குகிறது. அவர்களிடமிருந்த பண்பாடும் கலைகளும் மட்டுமே சென்ற ஐம்பதாண்டுக்காலத்தில் அழியாமல் நீடித்தன என்பதை நினைவுறுங்கள். பாட்டோ பரதமோ அவர்களே அதைப் பேணிக்கொண்டிருக்கிறார்கள்.

சைவசித்தாந்தம் அறிந்த வேளாளர்கள் இன்று எத்தனைபேர்? திருமுறைகளில் விற்பன்னர்களான ஓதுவார்கள் எங்கே? ஆனால் பிராமணர்களிடம் ஒப்படைக்கப்பட்ட பண்பாடுகள் இன்றும் நீடிக்கின்றன.அவர்கள்தான் நாம் போற்றும் தமிழ்ச்செவ்வியலையே நமக்கு மீட்டளித்த முன்னோடிகள். நாம் பேசும் தமிழ்வரலாற்றை ஆய்வுசெய்து வகுத்தளித்தவர்கள்.அவர்களின் அறிவுக்கொடை இல்லாத ஒரு துறைகூட இன்றில்லை.

பிராமணவெறுப்பு அனைத்துவகையிலும் இச்சமூகத்திற்குத் தீங்கானது என்றே நினைக்கிறேன். இன்று, நம் சமூகம் நேற்றுவரை அவர்களுக்கு அளித்த முதன்மை இடத்தை அளிக்கவேண்டியதில்லை. ஏனென்றால் எவரும் கீழல்ல என்றால் எவரும் மேலல்ல என்பதும் உண்மையே. அவர்களை வழிபடவேண்டியதில்லை. கொண்டாடவேண்டியதில்லை. ஆனால் அவர்களை வெறுத்து அவமதித்துத் துரத்துவதும் வேண்டியதில்லை

இந்தியச் சமூகத்தின் ஆதிக்கக்கருத்தியல் என்பது நூற்றாண்டுகளாக மெல்ல மெல்ல உருவாகி வந்தது. அது சாதியம் சார்ந்தது. அதை எதிர்ப்பது என்பது நவீன சமூகம் நோக்கிய வளர்ச்சியில் இன்றியமையாதது. அதை நிலைநாட்டிய பிராமணர்களை, பிராமணிய சிந்தனைகளை எதிர்ப்பதும் இயல்பானதே. ஆனால் அதை காழ்ப்பின்றி முற்றிலும் அறிவுத்தளத்தில் நிகழ்த்த முடியும் வெல்லமுடியும் என்பதையே நாராயணகுருவின் இயக்கம் காட்டுகிறது

தமிழர்நாகரீகம் என்கிறோம். பண்பாடு என்கிறோம். நாம் ஒவ்வொரு கணமும் வெளிப்படுத்திக் கொண்டிருக்கும் இந்த வெறுப்பின் கீழ்மை நம் பண்பாட்டின் மாபெரும் இழுக்குகளில் ஒன்று என்பதை நாம் உணரவேண்டும். நவீன மனிதன் ஒருநிலையிலும் ஒரு மக்கள்திரளை ஒட்டுமொத்தமாக வெறுக்கமாட்டான். ஒருவரையும் அவர்களின் அடையாளம் காரணமாக வெறுக்கமாட்டான். கீழ்த்தர இனவெறி, சாதிவெறிதான் இது. இதையே முற்போக்கு என்று எண்ணிக்கொள்ள நம்மை பயிற்றுவித்திருக்கிறார்கள்

பிராமண வெறுப்பு என்பது தலித்வெறுப்பின் மறுபக்கம். தலித் வெறுப்பு உள்ளடங்கி இருக்கிறது. பிராமண வெறுப்பு வெளிப்படையாக முற்போக்கு முகத்துடன் முன்வைக்கப்படுகிறது. பிராமண வெறுப்பு கொண்டவன் உறுதியாக தலித் வெறுப்பாளனே. தலித் வெறுப்பை கைவிடுபவன் பிறப்பு

அடிப்படையில் எவரையும் வெறுக்கமுடியாதவன் ஆகிறான். அவனால் பிராமணர்களையும் வெறுக்கமுடியாது.

வெறுப்பை அன்றி எதையுமே உணரமுடியாத மனங்களை நான் கருத்தில்கொள்ளவில்லை. அடிப்படை நாகரீகமும், மனிதாபிமானமும் கொண்டவர்களை நோக்கியே பேசுகிறேன். இக்கீழ்மையை விட்டுவெளியேறாதவரை நாம் நாகரீக மனிதர்களே அல்ல.

இன்றைய தமிழ்ச்சமூகத்தின் கீழ்மைகளில் முதன்மையானது அது கொண்டிருக்கும் சாதியவெறுப்பே. பிராமணர்களும் தலித்துக்களும் இருவகையில் அதன் பலியாடுகள். நாகரீகமறிந்த இளைஞர்கள், தாழ்வுணர்ச்சியில் இருந்து வெளிவந்த நவீன மனிதர்கள், தன் ஆற்றலிலும் அறிவிலும் நம்பிக்கை கொண்டவர்கள், இனிமேலாவது இக்கீழ்மையில் இருந்து வெளிவரவேண்டும்.

# (6) ஒடுக்கப்படுகிறார்களா பிராமணர்கள் ? - 2

பிராமணர்கள் ஒடுக்கப்படுகிறார்களா என்ற கட்டுரைக்கு என்னென்ன எதிர்வினைகள் வருமென எண்ணினேனோ அவையே வந்தன. கிட்டத்தட்ட நாநூறு கடிதங்களில் கணிசமானவற்றில் செருப்பாலடிப்பது, வாரியலால் அடிப்பது,மலத்தில் முக்கி அடிப்பது போன்ற வரிகள் இருந்தன. 'செப்பல் அடி' என்ற சொல் எனக்கு உண்மையில் புரியவில்லை. நான் செப்பலோசை கொண்ட செய்யுளின் ஒரு வரி என்றே ஆரம்பத்தில் புரிந்துகொண்டேன்

இவற்றைச் சொல்லும் இளையதலைமுறையினரின் உள்ளம் எத்தனை கரிபடிந்தது என்று வியப்பாக இருக்கிறது. இவை அனைத்துமே தீட்டு உருவாக்கும் பொருட்கள். ஒருவனை சாதி ரீதியாக அவமதிக்க, அதாவது தலித்துக்கு நிகராக எண்ணுகிறேன் என்று காட்ட அக்காலத்தில் கையாளப்பட்ட வழிகள் இவை. இன்றும் இவர்கள் ஆழ்மனதை இவையே ஆள்கின்றன என்றால் என்ன சொல்ல. இவர்களின் வீட்டுக்குள் இப்படித்தான் பேசிக் கேட்டு இளமையிலேயே வளர்கிறார்கள். இவற்றில் உள்ள சாதிய இழிவுபடுத்தலை அறியுமளவுக்கு அடிப்படை வாசிப்போ பண்பாட்டுப் பயிற்சியோ கிடைப்பதுமில்லை.

ஒரேநாளில் அனைத்து எதிர்வினைகளையும் தொகுத்து வாசித்து என் எதிர்வினையைச் சொல்லி முடிக்க விழைகிறேன். [ஆகவே கடிதங்களை பிரசுரிக்கவில்லை,மன்னிக்கவும்] பெரும்பாலான எதிர்வினைகள் ஏதேனும் ஒருபகுதியை எடுத்துக்கொண்டு திரிபுபடுத்துவது, கிண்டல் செய்வது, வசைபாடுவது என்ற வகையிலேயே இருந்தன. அதாவது நீ என்ன சொன்னாலும் நான் நீ சொன்னதற்கு இப்படித்தான் பொருள்கொள்வேன் என்ற வகை எழுத்துக்கள்.

விதவிதமான மயிர்பிளக்கும் விவாதங்கள் வழியாக என் கட்டுரை நேரடியாக எழுப்பும் அப்பட்டமான வினாக்களை கடந்துசெல்லும் முயற்சிகள் சில இருந்தன. உதாரணம் ராஜன் குறை. நான் அவரை எப்போதுமே பொருட்படுத்தத்தக்க ஒரு வாசகர் அல்லது எழுத்தாளர் என எண்ணியதில்லை. அடிப்படை நேர்மையற்ற வாதவிளையாட்டுக்கள் அவரது எழுத்துக்கள். உதிரி மேற்கோள்களுக்கு அப்பால் எதையும் புரிந்துகொள்ளும் திராணியும் அவரிடமில்லை.அவரிடம் "சார் நீங்க

தகுதியான பிராமணர். பெரியாரியப் பிராமணர் ஆனதனால் இன்னும் ஒருபடி மேலான பிராமணர். ஒத்துக்கறேன்,ஜாலியா இருங்க" என்று மட்டும் சொல்லவிழைகிறேன்.

எனக்கு வருத்தமாக இருந்தது ஒன்றே. என் கட்டுரையின் மையம் என்பது சாதியமைப்பு பற்றிய இன்று ஓரளவு சிந்திக்கும் அத்தனை பேரும் ஏற்றுக்கொண்ட கருதுகோளை முன்வைத்து எழுப்பப்பட்ட ஆதாரமான வினா. அதாவது சாதியமைப்பு என்பது நேற்றைய பழங்குடி இனக்குழு வாழ்க்கையில் இருந்து உருவாகி வந்தது. நிலப்பிரபுத்துவ காலகட்டத்தில் படிநிலைப்படுத்தப்பட்டது. அதன் லாபங்களை அனுபவித்து அதை தக்கவைத்த அத்தனை பேருமே அந்த குற்றத்தில் பங்கெடுத்தவர்களே. இன்று அதை தக்கவைத்திருப்பவர்களும் குற்றவாளிகளே. அதில் பிராமணர்கள் உண்டு. நிலவுடைமைச் சாதிகளும் வணிகச்சாதிகளும் உண்டு.

அப்படி இருக்க பிராமணர்களை மட்டும் அதற்கு முழுப்பொறுப்பாக்கி அவர்களைப் பழித்தும் இழித்தும் பேசுவதும் தன் சொந்த சாதிமேல் சிறு விமர்சனம் கூட இல்லாமலிருப்பதும் அடித்தள மக்களை இன்று நேரடியாக ஒடுக்கும் தன் சாதியை பாதிக்கப்பட்ட சாதியாக சித்தரித்துக்கொள்வதும் பெரும் மோசடி. பிராமணரல்லா உயர்சாதியினர், இடைநிலைச் சாதியைச் சேர்ந்தவர்கள் இந்த கேள்வியை மனசாட்சியுடன் கேட்டுக்கொள்ளவேண்டும் – இதுவே என் முதன்மைக்கேள்வி

ஒரு கட்டுரைகூட அதை எதிர்கொள்ளவில்லை. மிகச் சாமர்த்தியமாக வெவ்வேறு கோணங்களில் அதைத்தவிர்த்து சொல்லாட்டமிடுகிறார்கள். ஒருமுறை கூட பேச்சுக்குக் கூட அதை கவனித்ததாகக் காட்டிக்கொள்ளவில்லை.ஒப்புக்குக் கூட எவரும் ஆமாம், இடைநிலைச்சாதியிடமும் சாதியம் இருக்கிறது, கண்டிக்கிறோம் மாற்ற முயல்கிறோம், குற்றவுணர்வு கொள்கிறோம் என்று சொல்லவில்லை. எந்த அளவுக்குச் சாதிவெறியால் இறுகிய மனங்கள் இங்கே முற்போக்கு என்ற பேரில் பிராமண எதிர்ப்பு பேசுகின்றன என்பதற்கு இதுவே ஆதாரம்.இதைமட்டும் இங்கே, எதிர்காலத்துக்காக, பதிவுசெய்ய விரும்புகிறேன்.

தலித்துக்களையும் பிராமணர்களையும் ஒப்பிடுகிறேன் என்று ஒரு குற்றச்சாட்டு. கேலிதானே செய்கிறோம் அது பெரிய தப்பா என்று

இன்னொரு தரப்பு.அதன் அர்த்தம் இதுதான். "அவன நாங்க ஆயிரம் வருசமா அடிக்கிறோமே, சும்மாதானே இருக்கான். இவன் என்ன அம்பது வருசமா அடிக்கிறதுக்குப்போயி இந்தக்கூச்சல் போடுறான். ரெண்டும் ஒண்ணா? ஒருமரியாதை வேணாமா?"

எந்த நிலையிலும் ஒரு மக்கள்குழுவை வெறுக்க, அவமதிக்க முனையலாகாது. அது எவராக இருந்தாலும். அதையே மீண்டும் சொல்லவிழைகிறேன்.

மிகச்சில கடிதங்கள் நேர்மையாக ஒரு வினாவைக் கேட்டன. எழுந்து வரும் இடைநிலைச் சாதிக்கு நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்?

என் கட்டுரை பிராமணர்களுக்காகப் பேசவில்லை. அவர்களின் அத்தனை பலவீனங்களையும் சிக்கல்களையும் பட்டியலிட்டுச் சொல்லிச் செல்லும் அக்கட்டுரை நான் உட்பட உள்ள பிராமணரல்லாத சாதியினரை நோக்கிப் பேசுகிறது

அக்கட்டுரையின் முடிவில் யோகசிம்மாசனத்தில் அமர்ந்திருக்கும் நாராயணகுருவின் படம் அதையே சுட்டுகிறது. அவர் சொன்னதை மட்டுமே சொல்ல விழைகிறேன். அக்கட்டுரையிலேயே அதுதான் உள்ளது

எந்நிலையிலும் எம்மனிதரையும் இழிவுசெய்யாத பெருந்தன்மை,அறிவார்ந்த அதிகாரத்தை வென்றெடுக்கும் நேர்நிலையான பேருழைப்பு, மேலான சகவாழ்க்கையை நோக்கிச் செல்லும் கனவு.

பிராமணக் காழ்ப்பை உதறும்படி சொல்வது அழுத்தமான உண்மையான பிராமணிய எதிர்ப்பு நிகழட்டும் என்பதற்காகவே. கொள்கை அளவில். கருத்தியல் தளத்தில்.

தன்னம்பிக்கை, அதிலிருந்து வரும் பெருந்தன்மை, அறிவார்ந்த சமநிலை ஆகியவையே வெற்றிக்கான உண்மையான வழிகள். கூடிக்கூச்சலிட்டு பிறரை இழிவுபடுத்துகையில் நம்மை நாமே மேலும் இழிவுபடுத்திக் கொள்கிறோம்.

# (7) பிராமணர்களின் தமிழ்

அன்புள்ள ஜெயமோகன் ஐயா,

ஒரு வருடத்திற்கு முன்பு வரை உங்கள் பெயரைக் கூட கேட்டதில்லை. நான் முதன்முதலில் படித்த உங்கள் கட்டுரை, பிராமணர்கள் ஒடுக்கப்படுகிறார்கள் என்று பத்ரி சேஷாத்ரி எழுதிய கட்டுரையில் இருக்கும் உண்மை பற்றி நீங்கள் அலசிய கட்டுரை.

நீங்கள் ஒரு கட்டுரையில் குறிப்பிட்டிருக்கும் நான்கு வகை எழுத்தாளர்களில், சில காலம் முன்பு வரை முதல் வகை எழுத்தாளர்கள் எழுதிய படைப்புக்களையும், ராமகிருஷ்ணா மடத்தின் பதிப்புக்களில் சிலவற்றையும் தவிர வேறு எதையும் படித்ததில்லை. இப்பொழுது மற்ற பிரிவு படைப்புக்களையும் படிக்கவேண்டும் என்ற ஆர்வம் வந்துள்ளது.

Facebook இல் யாரோ ஒருவர் முன்பு கூறிய பத்ரி சேஷாத்ரியின் கட்டுரை குறித்த உங்கள் கட்டுரையை பகிர்ந்திருந்தார். அதைப் படிக்கும் வாய்ப்பு கிடைத்தது. அது முதல் நீங்கள் எழுதிய சில கட்டுரைகளை அவ்வப்போது உங்கள் தளத்தில் படித்து வருகிறேன். தாமதிக்காமல் விஷயத்துக்கு வருகிறேன்…

Quora.com என்ற கேள்வி பதில் தளத்தில் ஒருவர் இவ்வாறு ஒரு கேள்வி கேட்கிறார் —

Why are Tamil Brahmins using an unconventional Tamil dialect?

இதற்கு நானும் என் சிற்றறிவிற்கு எட்டியவாறு ஒரு பதில் அளித்திருந்தேன். பலரும் பதில் அளித்திருந்தார்கள். ஆனால் எந்த பதிலும் உண்மைக்கு அருகில் கூட வரவில்லை. பலரும் கேள்வி கேட்டவர் கேட்ட தொனிக்கே (பிராமணர்களை தாக்கும் தொனிக்கே) பதில் அளித்ததாகத் தோன்றியது, என்னை உட்பட. அந்தக் கேள்விக்கு உண்மையான பதில் யாரிடமிருந்தாவது வரும் என்று எதிர்பார்த்துக் காத்திருந்தேன், இன்னும் வரவில்லை. இணையத்தில் தேடியும் இங்கும் அங்குமாக விடை சிதறிக்கிடந்தது. எதை ஏற்பது எதை புறக்கணிப்பது என்று தெரியவில்லை. நான் ஒரு பிராமணன், சற்று உணர்சிவசப்படுபவனே. இருந்தாலும் எல்லாவற்றையும் தாண்டி உண்மையை அறியும் ஆர்வம் இருப்பதால் அந்த கேள்விக்கு நீங்கள் பதில் அளித்தால் நன்றாக இருக்கும் என்று கருதுகிறேன்.

அன்புடன்,
பாலாஜி ராமகிருஷ்ணன்.

அன்புள்ள பாலாஜி

கடல் சினிமா வெளிவந்தபோது பல பிராமணர்கள் அந்த வட்டார வழக்கு ‘அன்னியமாக’ இருப்பதாக எழுதியிருந்தனர். படம் முழுக்க இம்மாதிரி அன்னியமாகப்பேசுவது தேவையா என்று கேட்டு கடிதம் எழுதியிருந்தனர். இவ்வகையான அன்னியமான மொழியை கடற்கரை மக்கள் பேசுவதற்கு என்ன காரணம் என்று கேட்டிருந்தனர். ஆக, ஒருவருக்கு அவரது சொந்த வழக்கு இயல்பானது,மற்றவை வேடிக்கையானவை, unusual ஆனவை, அவ்வளவுதான்

குமரிப்பகுதியில் பேசப்படும் மொழி தமிழ்நாட்டின் பிறபகுதியினருக்கு வேடிக்கையான அயல்மொழி. குமரிமாவட்டத்தினருக்கு கோவை மாவட்டத்தினர் பேசுவது என்ன என்றே தெரியாது. நாம் அனைவருக்குமே மலைமக்கள் பேசும் தமிழ் ஒரு சொல் கூட சாதாரணமாகப்புரியாது. நெல்லைமாவட்ட இஸ்லாமியத் தமிழுக்கு தனி அகராதியே தேவைப்படும்.

தமிழகத்தில் தனியான மொழிவழக்கைப்பேசுபவர்கள் பிராமணர்கள் மட்டும் அல்ல என்று கொஞ்சமாவது பயணம்செய்தவர்கள், மக்களைச் சந்தித்தவர்கள் அறிவார்கள். எல்லா சாதியினரும், எல்லா வட்டாரத்தினரும் தங்களுக்கென தனி மொழிவழக்கைக் கொண்டிருக்கிறார்கள். அவை அவர்கள் திட்டமிட்டு உருவாக்கிக்கொண்டவை அல்ல. எவரும் மொழியை அவ்வாறு உருவாக்கிக்கொள்ள முடியாது. அவை நீண்டகால புழக்கத்தினூடாக மெல்லமெல்ல உருவாகி வருபவை. கால்ந்தோறும் மாறிக்கொண்டிருக்கக்கூடியவை.

என்ன காரணம்? இம்மாதிரி எந்த ஒரு வினா எழும்போதும் அதற்கு நம் வரலாற்றிலும் பண்பாட்டுப்புலத்திலும் சென்று விடைதேடவேண்டும். அதற்குரிய எளியவாசிப்புகூட இல்லாதவர்கள்தான் இங்கு அதிகம். ஆகவேதான் வெற்று அரட்டையாக கருத்துக்களையும் விமர்சனங்களையும் அள்ளிவைக்கிறார்கள். ஒவ்வொரு தளத்திலும் இந்தப்பொதுப்புத்திப்புரிதல்களை எதிர்கொண்டுதான் எதையும் பேசவேண்டியிருக்கிறது. அதிலும் இணையமும் ஃபெஸ்புக்கும் வந்தபின்னர் எந்த அசட்டுத்தனமும் அச்சிலேறி பரவி நிலைக்கும் அபாயம்

மிகுந்திருக்கிறது. மிக எளிமையான இந்த விஷயங்களைக்கூட விவாதித்துப்பேசவேண்டிய கட்டாயம் உருவாகிறது.

செய்தித்தொடர்பு, போக்குவரத்து ஆகியவற்றின் உருவான பெரும்வளர்ச்சியே நவீன காலகட்டத்தை உருவாக்கியது என நாம் அறிவோம். பொதுக்கல்வி அதற்குப்பின் வந்தது. பொது அரசியல் அடுத்து. இவற்றின் மூலம் மக்கள் மிகப்பெரிய அளவில் ஒருங்கிணைக்கப்பட்டு ஒற்றைச்சமூகமாக ஆனார்கள். இன்று நாமறியும் தமிழ்ச்சமூகம், இந்தியச்சமூகம் இவ்வாறு நவீனகாலகட்டத்தில் கட்டமைக்கபட்டது. இன்றுள்ள பொதுவான பேச்சுமொழி, பொதுவான அடையாளங்கள், பொதுமனநிலைகள் அனைத்தும் நவீனகாலகட்டம் உருவானபின்னர் மெல்லமெல்ல உருவாகித்திரண்டு வந்தவை மட்டுமே.

நவீன காலகட்டத்திற்கு முந்தைய சமூகத்தை வேளாண்மைச்சமூகம் என்கிறோம். அன்று இவ்வாறு ஒருங்கிணைக்கப்பட்ட சமூகம் இருக்கவில்லை. பல தனி அலகுகளாக சமூகத்தைப்பிரித்து ஒன்றன்கீழ் ஒன்றாக அடுக்கி உருவாக்கப்பட்ட சமூகம் அது. பொதுவாக நிலவுடைமைச்சமூகம் [Feudalism] என்று அதைச் சொல்வது வழக்கம்

அன்றைய சமூகத்தில் ஒவ்வொரு இனக்குழுவும் மதக்குழுவும் தங்களுக்குள் உரையாடிக்கொண்டு தங்கள் சொந்த சமூகவிதிகள், ஆசாரங்கள், நம்பிக்கைகளின்படி வாழ்ந்தன. தொழில் சார்ந்த தேவைகளுக்காக மட்டுமே பிறசமூகங்களுடன் உரையாடின. குடியிருப்புகள் கூட தனித்தனியாகவே அமைந்திருந்தன. ஆகவே ஒவ்வொரு குழுவும் தனக்கென தனி மொழிவழக்கை அடைந்தது.

இதில் சில சமூகக்குழுக்கள் மிககுறைவான அளவுக்கு பிற சமூகக்குழுக்களுடன் தொடர்புடையனவாக இருந்தன. அவர்களின் மொழிவழக்கு பெரிய அளவில் வேறுபட்டிருந்தது. இவ்வாறு தனிமைப்படுவதற்கு பல காரணங்கள் உண்டு. ஒன்று, நிலம். மீனவர்கள் வாழும் கடல்சார் நிலம் பிற நிலங்களில் இருந்து முற்றிலும் தனித்தது. ஆகவே அவர்களின் மொழி வேறுபட்டிருந்தது.

இன்னொன்று மதம். தமிழ் இஸ்லாமியரின் மொழிவழக்கு மிகவேறுபட்டிருப்பதற்குக் காரணம் இதுதான்.[நெல்லைப்பகுதியில் இஸ்லாமியரின் தனிவழக்கை நையாண்டி செய்யும் நூற்றுக்கணகான

வேடிக்கைக்கதைகள் புழக்கத்திலுள்ளன] மூன்றாவதாக, ஆசாரங்கள். பிராமணர் தங்களுக்கென தனி ஆசாரங்கள் கொண்டவர்கள். ஆகவே அவர்கள் மேலும் தனித்து வாழ்ந்தனர். கடைசியாகத் தொழில். ஐம்பதாண்டுகளுக்கு முன் ஆசாரிகள் போன்ற சிறிய தொழிற்குழுக்கள் தங்களுக்குள் பேசிக்கொள்வது பிறருக்கு புரிவதே கடினம் என்னும் நிலை இருந்தது

இந்த தனிவழக்குகளில் அக்குழுவின் ஆசாரங்கள் சார்ந்த தனிச்சொற்கள் இருக்கும். அவர்களின் மதம் சார்ந்த கலைச்சொற்கள் இருக்கும். தொழில்சார்ந்த குழூக்குறிகளும் குறியீட்டுச் சொற்களும் இருக்கும். அவை அந்த வழக்கை பிறருக்கு அயலானவையாக ஆக்குகின்றன

தமிழகத்தில் ஆரம்பத்திலேயே நவீனக் கல்விகற்றவர்கள் பிராமணர்கள். ஆகவே நவீன எழுத்துக்கும் அவர்களே முதலில் வந்தனர். ஆகவே ஆரம்பகால எழுத்துக்கள் அவர்களின் பேச்சுமொழியை அதிகமாகப் பதிவுசெய்வனவாக இருந்தன. ஆரம்பகால சினிமா, நாடகங்கள் அனைத்திலும் அவையே இடம்பெற்றிருந்தனஆகவே பிறர் அதிகமாக அறிந்த அயலான மொழிவழக்கு பிராமணவழக்குதான். ஆகவேதான் பெரும்பாலானவர்கள் அவர்கள் மட்டும் மாறுபட்ட மொழியை பேசுவதாக நினைக்கிறார்கள்.

பின்னர் பிற சமூகக்குழுக்களின் தனிவழக்குகளும் இலக்கியத்தில் பதிவாகத் தொடங்கின. புதுமைப்பித்தனே பலவகையான மொழிவழக்குகளை இலக்கியத்தில் கையாண்டிருக்கிறார். தோப்பில் முகமது மீரானும் நாஞ்சில்நாடனும் குமாரசெல்வாவும் நானும் எழுதுவது குமரிமாவட்ட வட்டார வழக்கு. ஆனால் நான்கும் நான்கு மொழிவழக்குகள் என்பதை வாசகர் காணமுடியும். காடு நாவலில் மலைமக்களின் மொழியென முற்றிலும் மாறுபட்ட ஒரு மொழிவழக்கு இருப்பதைக்காணலாம்

சென்றகாலத்தில் நாம் இப்போது பேசும் , எழுதும் பொதுமொழி என ஒன்று இருக்கவில்லை என்பதைக் காணலாம். அன்றிருந்தது செய்யுள்நடையும் பல்வேறுவகையான பேச்சுவழக்குகளும்தான். தமிழில் உரைநடை உருவாகி வந்தது 1850 களில் நிகழ்ந்த ஒரு வளர்ச்சி. ஆரம்பகட்டத்தில் எழுதப்பட்ட சைவநூல்கள் செய்யுள்நடையையே உரைநடையாக எழுதின. அதேசமயம்

ஆனந்தரங்கம் பிள்ளை நாட்குறிப்பு வட்டாரவழக்கையே உரைநடையாக எழுதியிருப்பதைக் காணலாம்

இவ்விருவகை நடைகளும் கலந்து மெல்லமெல்ல உருவாகி வந்ததே நம்முடைய பொதுமொழி. அது முதலில் அச்சில்தான் வந்தது. நாளிதழ்கள் வழியாகவே அது பரவியது. அதன்பின்னர் மேடைப்பேச்சுக்கள், நாடகங்கள் வழியாக பரவலாயிற்று.

1900 ங்களில் இந்தியாவில் அரசியலியக்கங்கள் பெரும் அலையாக எழுந்தபோதுதான் இங்கு பொது ஊடகங்கள் பெரிதாக வளர்ந்தன. மக்கள் அச்சிட்ட மொழியை வாசிக்கத்தொடங்கினர். மேடைப்பேச்சைக் கேட்க ஆரம்பித்தனர். ஒரே இடத்தில் கூடவும் பிறருடன் உறவாடவும் தொடங்கினர். தங்கள் சிறிய வட்டங்களுக்கு வெளியே வந்து இன்னொரு மொழியை அறியத்தொடங்கினர். அவ்வாறுதான் பொதுவான பேச்சுமொழி மிகமெல்ல உருவாகத்தொடங்கியது

அந்தப்பொதுமொழியை உருவாக்குவதில் பள்ளிக்கூடங்களுக்கு மிகப்பெரிய பங்கு உண்டு. பொதுக்கல்வி என்பது இந்தியாவில் 1900ங்களில்தான் பரவலாக வரத்தொடங்கியது. பள்ளிகள் அனைவருக்குமான மொழியை கட்டாயமாக்கின. நான் சிறுவனாக இருந்தபோது பிள்ளைகளை ஒரு பொதுமொழி பேசுவதற்குப் பயிற்றுவதை ஆசிரியர்கள் முக்கியமான கடமையாகக் கொண்டிருந்தனர். ‘அவிய, இவிய’ என்று பேசியதற்காகவே நான் அடிபட்டிருக்கிறேன்.

இன்றுகூட பொதுமொழியின் உருவாக்கத்தில் கல்விக்கூடங்கள் பெரும் பங்காற்றுகின்றன. என் மகள் படிக்கும் பள்ளியில் ஒருமுறை இதைக் கவனித்தேன். கடற்கரை மக்களின் பிள்ளைகள் அங்கு அதிகம். கடற்கரையில் மிக நல்ல பள்ளிகள் இருந்தாலும் அவற்றைத் தவிர்த்துவிடுவார்கள். காரணம் அவர்கள் அந்த வட்டாரவழக்கில் இருந்து பிள்ளைகள் வெளியே வரவேண்டும் என்று விரும்புவதுதான்.

ஆரம்பகாலத்தில் நாடகங்களில் கதைநாயகனும் நாயகியும் மட்டும் பொதுமொழி பேச பிறர் அவரவர் சாதிகளுக்குரிய வட்டார வழக்கைப் பேசுவது வழக்கமாக இருந்தது. ஏனென்றால் பொதுமொழி என்பது படித்தவர்களுக்குரியதாக இருந்தது அன்று. மேடையிலேயேகூட

முக்கியமான விஷயங்களை மட்டும் பொதுமொழியிலும் பிறவற்றை வட்டார வழக்கிலும் பேசினர்

உண்மையில் பொதுவழக்கு இன்றிருப்பதுபோல மையப்போக்காக ஆனது தொலைக்காட்சி வந்தபின்னர்தான். என்னையே எடுத்துக்கொள்ளுங்கள், கல்லூரிப்படிப்பை முடிப்பது வரை நான் குமரிமாவட்ட, குலசேகரம் வட்டார, நாயர் -வேளாளர்களின் தமிழைத்தான் பேசிக்கொண்டிருந்தேன். என்னால் பொதுமொழியில் பத்துநிமிட பேசமுடியாது. பாடங்களை மட்டுமே அச்சுமொழியில் படித்து எழுதுவோம். மேடைப்பேச்சு அந்த பாடப்புத்தக மொழியை ஒப்பிப்பதாக இருக்கும். பேச்சு என்றால் வட்டார வழக்கு மட்டுமே

தொலைக்காட்சி ஒரு பொதுவான பேச்சுமொழியை கட்டமைத்தது. உயர்குடிகளாகிய பிராமணர், வேளாளர், முதலியார் போன்றவர்களின் மொழிவழக்குகளையும் பாடப்புத்தகமொழியையும் ஆங்கிலத்தையும் கலந்து அந்த மொழி கட்டமைக்கப்பட்டது. நம் பொதுமொழியில் இந்த அளவுக்கு ஆங்கிலம் இருப்பதற்குக் காரணமே இதுதான். சாதிய, வட்டார அடையாளம் இல்லாத பொதுமொழியை உருவாக்குவதற்கு ஆங்கிலம் தேவைப்படுகிறது.

இன்று நாம் இந்தப்பொதுமொழியை நோக்கி செல்லத்தொடங்கியிருக்கிறோம். வட்டாரவழக்குகளும் சாதியவழக்குகளும் மங்கலடைந்தபடியே வருகின்றன. என் இளமையில் நான் பேசிய குமரிமாவட்ட வட்டார வழக்குகளை இன்று முதியவர்கள், அதிலும் கிழவிகள், மட்டுமே பேசுகிறார்கள். கடற்கரை வழக்கும் முஸ்லீம் வழக்கும்கூட மாறிவிட்டன.

ஆனாலும் சில குலக்குழுக் கூடுகைகளில் அந்த தனிவழக்கை வலுக்கட்டாயமாகப் பேசுகிறார்கள். அது ஒரு சொந்த உணர்வை அளிக்கிறது. அவ்வளவுதான். நான் என் அண்ணாவிடம் குமரிமாவட்டத்துக்கே உரிய விசித்திரமான ஒரு மலையாளத்தில்தான் பேசுவேன். வற்கீஸிடம் விளவங்கோடு தமிழில்.

சுந்தர ராமசாமி பிராமண வழக்கைத்தான் பேசுவார். ஆனால் அது குமரிமாவட்டத்திற்குரிய பிராமணத்தமிழ். அது அவரது குடும்ப வளர்ப்பிலிருந்து அவர் பெற்றது. [ஒருமுறை திராவிட இயக்கத்தைச்சேர்ந்த ஓவியா என்பவர் அவரிடம் பேசிவிட்டு வெளியே வந்து சாலையில்

அதைப்பற்றி சத்தம்போட்டு விவாதித்ததை நினைவுகூர்கிறேன். அதற்கு லட்சுமி மணிவண்ணன் நல்ல நாடார்த்தமிழில் மன்னிப்பு கேட்டுக்கொண்டிருந்தார்]

சுந்தர ராமசாமி இலக்கியம் பேச ஒரு சீரான அச்சுமொழியை கையாள்வார். பொது உரையாடலுக்கு பொதுவான பேச்சுமொழிக்கு கொஞ்சம் சிரமப்பட்டு வருவார். ஆங்கிலம் அதிகமாக கலந்திருக்கும், காரணம் அவர் பொதுமொழிக்கு மிகப்பிந்தி வந்த தலைமுறை

சுந்தர ராமசாமியும் நானும் மாரடைப்பு வந்து ஆஸ்பத்திரியில் இருந்த சதங்கை ஆசிரியர் வனமாலிகையைப் பார்க்கச் சென்றோம். 'இப்பம் கொள்ளாமா?' என்று ராமசாமி கேட்டார். முகம் மலர்ந்த வனமாலிகை "ஓம்,கொறவுண்டு" என்றார்

திரும்பும்போது நான் சுந்தர ராமசாமியிடம் அவரது மொழி பற்றி கேட்டேன். "அது கன்யாகுமரி பாஷை. நான் அதில இப்ப வழக்கமா பேசுறதில்லை. ஆனா நானும் அவரும் சந்திச்சுக்கிட்டது அம்பது வருஷம் முன்னாடி. அப்ப இந்த பாஷையிலதான் பேசிகிட்டோம். அந்த பாஷை எங்கள கிட்டக்க கொண்டு வந்திடுது" என்றார்.

# (8) பிராமணர்- பழியும் பொறுப்பும்

அன்புள்ள ஜெமோ

என் பெயர் சத்யநாராயணன். நான் பிராமணன். அதாவது ஸ்மார்த்தன். இந்தசாதியில் நான் பிறந்ததே ஒரு பெரிய தவறு என்னும் எண்ணம் வரும்படியாக நம் சூழல் உள்ளது. எவ்வளவோ நாட்கள் இதற்காக நான் வருத்தப்பட்டிருக்கிறேன். நான் பிறந்து வளர்ந்தது எல்லாம் தஞ்சைமாவட்டத்தில் திருவாரூரில். அங்கே எப்போதுமே பிராமணர்களைப்பற்றிய ஒரு கிண்டல் இருக்கும். எல்லா இடத்திலும் ஒதுக்கி வைப்பார்கள். சின்னச்சின்ன அவமதிப்புகள் இல்லாமல் ஒரு நாள் கூட இருக்காது. அதையெல்லாம் பட்டியலிட்டால் பெரிய கதை. முக்கியமாக என் நண்பர்களே என் அம்மா அக்காக்களைப்பற்றி கேவலமாகப்பேசுவார்கள்.

இருந்தாலும் நான் அனைவருடனும் சேர்ந்துகொள்ளத்தான் முயற்சி செய்வேன். அதற்காக நான் சிக்கன் மட்டன் எல்லாம் கூட சாப்பிட்டிருக்கிறேன். எல்லாவற்றுக்கும் ரெடியாக இருந்தேன். ஆனாலும் எந்தக்கும்பலிலும் சேர முடியவில்லை. ஒருகட்டத்தில் அது முடியாது என்று நினைத்து நானே ஒதுங்கிக்கொண்டேன். பிராமணர்களாகிய ஒரு சில நண்பர்களுடன் இருக்கிறேன். மற்றவர்களுடன் எந்த உறவு இருந்தாலும் எங்கோ ஒரு இடத்திலே புண்படுதல் நிச்சயம்.

அதற்கு வழியாக சிலர் கண்டுகொண்டது நேர் எதிராக ஆகிவிடுவது. நான் பிராமணனே அல்ல என்று சொல்வது. பிராமணர்களை மற்றவர்களை விட இவர்கள் கேவலமாக பேசுவார்கள். அதுவும் என்னால் ஒத்துக்கொள்ளமுடியவில்லை. அப்படிப்பேசினாலும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என்பது ஒருபக்கம். ஆனால் என் பண்பாட்டை நான் அப்படி தூக்கி வீசிவிடமுடியாது. என் அப்பா தாத்தா மேல் எனக்கு மதிப்பு உண்டு. எனக்குக் கடவுள்நம்பிக்கை உண்டு.

ஒதுக்குமுறை என்பது என்றைக்குமே பெரிய துன்பம். அதை அனுபவித்தவர்களுக்கே அது தெரியும். எந்தபிராமணனும் இந்த அவமதிப்பைத்தாங்கித்தான் வாழ்கிறான். அவன் பெரிய பணக்காரன்,

உயர்குடி என்றால் அதுவேறு ஒருவட்டம். நான் நடுத்தரவர்க்க பிராமணனைப்பற்றிப்பேசுகிறேன்

உங்கள் எழுத்துக்களை நான் ஈடுபட்டு வாசிக்கிறேன். வெண்முரசு எனக்கு ஒரு தனி உலகம். இதைக்கேட்கவேண்டும் என தோன்றியது. பிராமணனாகப்பிறந்ததற்காகவும் என் மூதாதையருக்காகவும் நான் வெட்கப்படவேண்டுமா? தமிழகத்திலுள்ள அத்தனை தப்புகளுக்கும் பிராமணன் ஒருத்தன்தான் காரனமா? பிராமணன் மட்டும்தான் பழி ஏற்கவேண்டுமா?

சத்யா

அன்புள்ள சத்யா,

வேறுவேறு சொற்களில் இக்கேள்விகளுக்கு முன்னரே பதில் சொல்லிவிட்டேன். தமிழகத்தில் உள்ள பிராமண வெறுப்பு என்பது மிகமிகப்போலியானது. ஒரு கீழ்த்தர அரசியல் உத்தி அது. பிராமணரல்லாத உயர்சாதியினர் [நாயர்கள் முக்கியமாக] சாதியாதிக்கத்தை கடுமையான வன்முறைமூலம் நிலைநிறுத்தி பிறசாதியினரைச் சுரண்டிப்பிழைத்தவர்கள்.

ஜனநாயகம் எழுந்து வந்தபோது அச்சுரண்டலின் பழியிலிருந்து தப்பிக்க சாதியை உருவாக்கி நிலைநிறுத்திய பொறுப்பை சாதுரியமாக பிராமணர் தலையில் கட்டினர் . அன்றைய ஆசாரப் பிராமணர்களும் ‘ஆமா நாங்கதான். நாங்கதான் எல்லாத்தையும் உண்டுபண்ணினோம்’ என்று ஏற்றுக்கொண்டார்கள்.

பின்பு இங்குள்ள பிற்படுத்தப்பட்ட சமூகங்களும் அந்த உத்தியைக் கைகொண்டன. இவர்கள் உச்சகட்ட சாதிவெறியர்கள். தலித்துக்கள்மேல் பூமியில் எங்குமில்லாத அளவுக்கு காழ்ப்பு கொண்டவர்கள். அதேசமயம் முற்போக்கு பாவனை மேற்கொள்வார்கள். அதற்கான வழி பிராமண வெறுப்பைக் கக்குதல்

சாதியை உருவாக்கி ,நிலைநிறுத்தி ,சுரண்டியதில் எல்லா சாதியினருக்கும் சமானமான பங்குண்டு. அந்தப்பங்கு மேலிருந்து கீழிறங்கும்தோறும் அவர்களும் மேலிருந்து ஒடுக்கப்பட்டார்கள் என்பதனால் சற்று குறைகிறது.

ஆகவே தமிழகத்தில் பிராமணர்களும், வேளாளர்களும், முதலியார்களும் ,செட்டியார்களும் சாதியை நிலைநிறுத்தியதன் பொறுப்பை முதன்மையாகச் சுமக்கவேண்டும். அதற்காக வெட்கவும், அதற்காக பிராயச்சித்தம்செய்யவும் வேண்டும். அதில் பிராமணர்களுக்கு மேலதிகமான பொறுப்பு ஏதுமில்லை. அப்படிப் பொறுப்பாக்குவது பிறசாதியினரின் கீழ்மைநிறைந்த அரசியல் தந்திரம்

இந்த பொறுப்பேற்றல் இருக்குமென்றால், பிராமணராக இருப்பதற்கே வெட்கவேண்டியதில்லை. பிராமணர்கள் இந்தியாவின் நீண்ட பண்பாட்டு மரபை, மதத்தை நிலைநிறுத்தும் நிலைச்சக்தியாக ஈராயிரமாண்டுக்காலம் செயல்பட்டிருக்கிறார்கள். அவர்களிடமிருந்த பாரம்பரியம் மட்டுமே அழியாமல் இருபதாம்நூற்றாண்டை வந்தடைந்திருக்கிறது. அதன் பொருட்டு அவர்கள் பெருமைகொள்ளலாம்

அம்மரபில் மரபின் நல்ல அம்சங்களும் தீய அம்சங்களும் உண்டு. அவற்றைச் சீர்திருத்தவும் அவர்களே முன்னோடியான முயற்சி எடுத்தனர். பாரதி, அ.மாதவையா, மகாவைத்யநாத அய்யர், சுப்ரமணிய சிவா, வ.ரா போன்ற முன்னோடிச் சீர்திருத்தவாதிகளின்பொருட்டும் பெருமைகொள்ளலாம்

பிராமணர்கள் வன்முறை அற்ற சமூகமாக, கல்வியை மட்டுமெ ஆயுதமாகக் கொண்டவர்களாக இங்கே செயல்பட்டிருக்கிறார்கள். சமரசத்தை உருவாக்குபவர்களாகவும், இணைப்பவர்களாகவும் கற்பிப்பவர்களாகவும் இருந்திருக்கிறார்கள். அதன்பொருட்டு பெருமிதம் கொள்ளலாம்.

வெற்றுக்கூச்சலிடும் அரசியலாளர் அன்றி நடைமுறை அணிந்த எவரும் உணர்ந்த ஒன்றுண்டு. தமிழ்ச்சூழலில் கல்வி,சட்டம் போன்ற பல துறைகளில் பிராமணர்களின் பங்களிப்பு குறைந்தது பெரிய தரவீழ்ச்சிக்கு இடமளித்தது. அவர்கள் தமிழ்ச்சமூகத்தில் சில அடிப்படை விழுமியங்களின் குரலாக இருந்தனர். அவர்களின் பங்களிப்பு முக்கியமானது

அறிவுத்துறையில் இலக்கியவாதிகளாக, கல்வியாளர்களாக, சிந்தனையாளர்களாக முன்னோடியான பங்களிப்பு அவர்களுக்குண்டு. பாரதி முதல் சுந்தர ராமசாமி வரை, உ.வே.சாமிநாதய்யர் முதல் ஐராவதம் மகாதேவன் வரை அவர்கள் இன்றி தமிழிலக்கியமோ பண்பாடோ பேசப்படவே முடியாது.

ஆகவே பெருமிதம் கொள்ளுங்கள். எவர்முன்னாலும் சிறுமைகொள்ளாதீர்கள். குன்றுவதும் குறைந்துபோக முயல்வதும் உங்கள் முன்னோடிகளுக்கு நீங்கள் செய்யும் அவமதிப்பு. உங்களைச் சிறுமைசெய்ய முயல்கிறார்கள் என்றால், அவமதிக்கிறார்கள் என்றால் அது அவர்களின் தாழ்வுணர்ச்சியால் என உணருங்கள். நீங்கள் நின்றிருக்கும் உயரத்திலிருந்து அவர்களை கனிவுடன் பாருங்கள். மன்னியுங்கள். வெறுக்காதீர்கள்.

ஆனால் இன்னொன்றும் உண்டு. பிராமணர் என்று உணரும்போதே நீங்கள் இயல்பாக பழைமையின் எதிர்மறை அம்சங்களில் சென்று படிந்துவிட வாய்ப்புண்டு. சாதிக்கொடுமைகளை, தீண்டாமையை, பெண்ணடிமையை எல்லாம் மரபென வலியுறுத்தும் அமைப்புகளையும் மனிதர்களையும் சாதியின்பொருட்டே நீங்கள் உங்களவர் என ஏற்றுக்கொண்டீர்கள் என்றால், அவர்களின் பொருட்டு நிலைகொண்டீர்கள் என்றால், நீங்கள் சிறுமையடைகிறீர்கள்.

கணிசமான பிராமணர்கள் வெறுக்கப்படுவது அவர்களின் மேலோட்டமான நட்புமுகத்திற்கு அப்பால் சகமானுடரை இழிவெனக் கருதும் அந்த மேட்டிமை அம்சம் எங்கோ ஆழத்தில் இருந்து, தருணம் கிடைத்தால் வெளிப்படும் என்பதை பலர் உணர்ந்திருப்பதனால்தான். குறிப்பாக பொருளியல் மேன்மை அடைந்து, அதிகாரத்தை அணுகும்தோறும் பிராமணர்களிடம் அந்த மேட்டிமைத்தனம் வெளிப்படுகிறது.

அதன் மீதான வெறுப்பும் நிராகரிப்பும் மற்றவர்களிடமிருப்பது இயல்பே என புரிந்துகொள்ளுங்கள். அந்தத் தரப்புகளில் இருந்து விலகுங்கள். அதை உங்களிடமிருந்து தேடி எடுத்து பிடுங்கி வெளியே போடுங்கள். அந்தச் சுயபரிசோதனை கடைசிவரை இருந்துகொண்டே இருந்தாலொழிய, நீங்கள் ஆன்மீகமாகவும் விடுதலை அடையமுடியாது.

இன்னும் நுட்பமான ஒன்றுண்டு. இது நாம் பிறந்து வளர்ந்த சூழலில் இருந்து இயல்பாகவே நமக்குக் கிடைப்பது. நம் ரசனை, எண்ணப்போக்கு ஆகியவை அதிலேயே வடிவம் கொண்டிருப்பதனால் நமக்கு அதிலுள்ள பிழைகூட கண்ணுக்குப்படுவதில்லை.

கணிசமான பிராமணர்கள் இலக்கியம், கலை, ஆன்மீகம் ஆகியவற்றில் பிராமணியத்தன்மைகொண்டவற்றை மட்டுமே ஏற்கக்கூடியவர்களாக, பிற

அனைத்தையும் அறியாமலேயே கீழானவையாக கருதக்கூடியவர்களாக இருக்கிறார்கள். இது அவர்களிடம் தன்னிச்சையாக வெளிப்படும். இயல்பாகவே புதுமைப்பித்தன் பிடிக்காது, மௌனி பிடிக்கும். நுண்ணியல்பாலேயே வள்ளலாரோ நாராயணகுருவோ உவப்பாக இராது, ரமணரோ ஜே.கிருஷ்ணமூர்த்தியோதான் உண்மையான ஞானிகள் எனத்தோன்றும்.

ஏன் ,அப்படித்தோன்றக்கூடாதா எனக் கேட்கலாம். எனக்கு இயல்பாகவே அப்படித் தோன்றுகிறது என வாதிடலாம். ஏன் அப்படித்தோன்றுகிறது என்பதற்கான ஒரு சுயவிமர்சனம் தேவை என்று மட்டுமே நான் சொல்ல விழைகிறேன். முப்பதாண்டுகளுக்கும் மேலாக என் மிக நெருக்கமான நண்பர்களாக இருக்கும் பிராமணர்கள் பலர் இப்படித்தான் இருக்கிறார்கள். அவர்களால் வெளியே வரவே முடியவில்லை. இச்சிறை உங்களைத் தனிமைப்படுத்துகிறது. அதைக் கூர்ந்து நோக்குங்கள்.

கடைசியாக, பிராமணர் என்பது ஒரு தகுதி என்பதில் ஐயமில்லை. அது முன்னோடிகளின் பங்கெடுப்பின் நீட்சியாக வரும் தகுதி. நான் பாரதியின் , உவேசாவின் தொடர்ச்சி என ஒருவன் உணர்வதன் பெருமிதம். வெறுமே பிராமணனாகப் பிறந்தமையால் அப்பெருமிதம் உருவாவதில்லை. அந்த நீட்சியில் தன்னை முயன்று பொருத்திக்கொள்ளும்போது வருவது அது. வெறுமே பிறப்படையாளம் சார்ந்து மட்டும் பெருமிதம் கொள்ளும்போது அது தளையாக ஆகிறது

பிராமணராகப் பிறந்தமையால் ஓர் அறிவதிகாரம் இருப்பதாக கருதிக்கொள்வதும், பிறரை விட மேலதிகமாக தகுதிகள் கொண்டிருப்பதாக எண்ணுவதும் ,நுட்பமான பாவனைகள் மூலம் பலசமயம் பிராமணர்களிடம் இயல்பாக வெளிப்படுகிறது. அதுவே பிறரை அகற்றுகிறது. அதிலிருந்து வெளியே வருவது நாம் ஆன்மீகமாக மேலெழவும் ,விடுதலைகொள்ளவும் இன்றியமையாதது

இந்த குறைகளும் சிக்கல்களும் எல்லா சாதியினருக்கும் உண்டு. வேளாளர்களில் பலர் வேளாளர் அல்லாத எழுத்தாளர்களை வாசிப்பதே இல்லை என்பதையே கண்டிருக்கிறேன். அதற்கும் அடுத்த சாதியினர் காட்டும் சாதிமேட்டிமைத்தனம் பெரும்பாலும் தாழ்வுணர்ச்சியின் வெளிப்பாடு

எல்லா சாதியினரிடமும் சாதிசார்ந்த பிறப்புச்சூழலில் இருந்து வெளிவருவதன் சவால் பெரிது என்றே சொல்ல விழைகிறேன். ஆனால் பிராமணர்களிடம் இதை மேலும் குறிப்பாகச் சொல்ல நான் எண்ணுவேன்.கல்வி சார்ந்த பின்புலம் காரணமாக அவர்களால் அறிவுச்செயல்பாடுகளில் மேலும் விரைவாக ஈடுபட முடியும். வன்முறையற்ற குடும்பச்சூழல் அவர்களுக்கு ஆன்மிகமான வளர்ச்சிக்கான அடித்தளம். அவர்கள் முயன்றால் செல்லும்தொலைவு அதிகம். அதை எளிய மேட்டிமைவாதமாகச் சுருக்கிக்கொண்டால் அதுவே வெளியே செல்லமுடியாத சிறை.

இந்தியா பிராமணரின்றி அமையாதென்று எண்ணுபவன் நான். அவர்கள் இந்தியப்பண்பாட்டின் மகத்தான உருவாக்கம் என்றே சொல்லத்துணிவேன். தேங்கி நின்று வெற்று அடையாளத்தைச் சுமந்து நிற்பவர்களைச் சொல்லவில்லை. மிகச்சிறந்தவற்றை ஏற்றுக்கொண்டு மேலே சென்றவர்களைச் சொல்கிறேன். பாரதியும் சுந்தர ராமசாமியும் பிராமணர்களே. பிராமணிய அடையாளத்தால் அல்ல. அதன் சிறந்த கூறுகளை மேலெடுத்து ,அல்லவற்றை அடையாளம் கண்டு ,வெட்டி வீசி முன்சென்றவர்கள் என்பதனால். அவர்களின் காலடியிலிருந்தே நான் உருவாகி வந்துள்ளேன்.

# (9) பிராமணர்களின் சாதிவெறி

அன்புள்ள ஜெ

உதயகுமாரின் பிராமண எதிர்ப்பு பற்றி வாசித்தேன். பிராமணர்களின் சாதிவெறியை நீங்கள் பார்ப்பதே இல்லையா? சமூகவலைத்தளங்களில் உலவுங்கள், தெரியும். முடைநாற்றமெடுக்கும் சாதிவெறியை, எந்த அடிப்படை அறமும் இல்லாத கீழ்மையை, கணிசமான பிராமணர்கள் நேரடியாகவே வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அதைப்பற்றி நீங்கள் பேசுவதுண்டா?

செந்தில்

அன்புள்ள செந்தில்,

அந்தச் சாதிவெறியை நானும் நிறையவே சந்தித்திருக்கிறேன், சந்தித்துக்கொண்டும் இருக்கிறேன். மிகநெருக்கமானவர்களாக இருந்தவர்கள்கூட தருணம் கிடைக்கையில் சாதிய நச்சுப்பற்களுடன் எழுவதைக் காணும் அனுபவம் அடிக்கடி வந்துவிட்டது. அதன்பின் நட்பு, நேர்மை எதுவும் அவர்களுக்கு ஒரு பொருட்டாகவும் இல்லை.எல்லா சாதி, மதவெறியர்களையும்போல அவர்களின் பேச்சுக்களும் தங்களவர் அல்லாத அனைவரும் அயோக்கியர்கள் என்பதாகவே உள்ளது

ஆனால் நான் எப்போதும் கேட்டுக்கொள்ளும் வினா இது. இந்தச்சாதிவெறிக்கு எதிர்வினையாகவா பெரியாரியச் சாதிவெறி எழுந்தது? இல்லை. பெரியாரிய இனக்காழ்ப்பே இன்றைய இச்சாதிவெறியை உருவாக்கியிருக்கிறது.

இந்தியாவின் பிற சாதியினரைப்போலவே பிராமணர்களும் தங்கள் குறுகலான குடியிருப்புகளில் பிறசாதியினருடன் ஒட்டும் உறவும் இல்லாமல் வாழ்ந்தவர்கள்தான். பிறசாதியினரைப்பற்றிய உளவிலக்கமும் கசப்புகளும் எள்ளல்களும் கொண்டவர்கள்தான். பிறரைப்போலவே சென்ற நூற்றாண்டில்தான் நவீனக் கல்விபெற்று மெல்ல அதிலிருந்து அவர்கள்

மீண்டு வரத்தொடங்கினர்.பிறரைப்போலவே அவர்களின் குடும்பச்சூழல் இன்னமும்கூட சாதிய முன்முடிவுகளும் காழ்ப்புகளும் நிறைந்ததே.

பிறரைவிட அவர்களுக்கு நவீனமாதலில் சிக்கல்கள் அதிகம். காரணம் அவர்கள் மதச்சடங்குகள், ஆலயங்கள் ஆகியவற்றுக்குப் பொறுப்பானவர்கள். பிராமணர்கள் இந்துப்பண்பாட்டில் நிலைச்சக்திகள். பண்பாட்டின் அடிப்படைகளைப் பேணவேண்டிய கடமைகொண்டவர்கள். அந்தப்பொறுப்பை சென்ற ஈராயிரமாண்டுகளாக உலகுக்கே முன்மாதிரி எனக்கொள்ளத்தக்கவகையில் நிறைவேற்றியவர்கள்

ஆகவே எளிதில் மரபை முற்றாக உதறிவிட்டு வெளியேற முடியாது. மேற்கிலிருந்து வந்த சில நம்பிக்கைகளையோ கொள்கைகளையோ உடனே ஏற்றுக்கொண்டு அவர்கள் நேர் தலைகீழாகத் திரும்பவேண்டும் என்று எதிர்பார்ப்பவர்களுக்கு பண்பாட்டு வரலாறு தெரியாது. அப்படி அவர்கள் திரும்பியிருந்தால் இந்தியாவில் இன்றுநாம் காணும் இந்து மரபு எஞ்சியிருக்காது

அவர்களிடம் சிலரால் குறையெனக் கருதப்படும் பழமைப்பிடிவாதம் எகிப்தின் பூசகர்களுக்கோ ஜரதுஷ்டிர மதகுருக்களுக்கோ இருந்திருந்தால் எகிப்தும் ஈரானும் கொண்டிருந்த தொன்மையான பண்பாடுகள் எஞ்சியிருந்திருக்கும்

ஆகவே எதை உதறுவது, எதை தக்கவைத்துக்கொள்வது, எதுவரை என்பது அவர்களுக்கு மிகப்பெரிய சிக்கல். அந்த விவாதம் இருநூறாண்டுகளாக நம் பண்பாட்டுவெளியில் நிகழ்கிறது… நூற்றைம்பதாண்டுகளுக்கு முன் அந்த விவாதம் தொடங்கிய சித்திரத்தை தாகூரின் 'கோரா' நாவலில் வாசிக்கலாம். பாரதியின் 'ஆவணி அவிட்டம்' போன்ற சிலகட்டுரைகளில் பார்க்கலாம்

பிராமணர்களின் இந்தமாபெரும் பண்பாட்டுவிவாதத்தில் பலவகையான தரப்புக்கள் உண்டு அதில் மரபை மாறாமல் தக்கவைக்க விரும்பும் ஒரு பழைமைவாத நோக்கு உண்டு. அது என்றும் இருக்கும். மறுஎல்லை புதுயுகசிந்தனைகளை பெரும் ஆர்வத்துடன் தழுவிக்கொண்டு அவற்றை முன்னெடுத்துப் பரப்பியவர்களின் தரப்பு. டி.டி. கோசாம்பி, விபூதிபூஷண் பந்த்யோபாத்யாய, சிவராம காரந்த், ஈ.எம்.எஸ், மகாவைத்யநாத அய்யர், க.நா.சு, சி.சு.செல்லப்பா, எஸ்.என்.நாகராசன், சுந்தர ராமசாமி என அந்த நவீனவாதிகள் இல்லாமல் இந்திய நவீனச் சிந்தனையே இல்லை.

நான் ஆசிரியர் எனக்கொள்பவர்களில் அவர்களின் எண்ணிக்கை மிகப்பெரிது. ஒருநாளில் ஒருமுறையாவது அவர்களைப் பேசாமல் சிந்தனை கடந்து செல்வதில்லை. நான் முன்வைக்க விரும்பும் பிராமணர்கள் தங்கள் மரபை உள்வாங்கி நவீன உலகம் நோக்கி எழுந்தவர்கள் மட்டுமே.

ஆனால் பெரியாரிய மூர்க்கம் என்ன செய்கிறது? அவர்கள் அத்தனைபேரையும் அப்படியே பழைமைவாதத் தரப்பாக பார்த்து கண்மூடித்தனமாக வசைபாடுகிறது. அவர்களில் ஆக நவீனமானவர்களைக்கூட அது 'பார்ப்பனர்கள்' என இழிவுசெய்கிறது. அதற்கு கல்வியில் நம்பிக்கை இல்லை. தர்க்கசிந்தனை இல்லை. ஏன் செவிகளே இல்லை. சும்மா தேடிப்பாருங்கள், இ.எம்.எஸ் சுந்தர ராமசாமி எவரைப்பற்றியானாலும் அவர்களை பார்ப்பனச் சதிகாரர் என பழிக்கும் சொற்களே உங்களுக்குக் கிடைக்கும்.

அதன் இறுதிவிளைவாக இன்று உருவாகி வந்திருப்பதே நீங்கள் சொல்லும் பிராமண அடிப்படைவாதம்.அவர்களில் எழுந்துவந்த நவீனச் சிந்தனையாளர்கள்கூட பொதுவெளியில் சிறுமைசெய்யப்படுவதை அவர்கள் காண்கிறார்கள். அவர்களில் மிகச்சிலர் மட்டுமே மெய்த்தேடலால் ஈர்க்கப்பட்டு அந்த நவீனச்சிந்தனையாளர்களை நோக்கி வருகிறார்கள். பிறர் அந்த நவீனச்சிந்தனையாளர்களை தங்கள் சாதிக்குத் துரோகம் செய்தவர்களாகவே பார்க்கிறார்கள்.

ஆகவே இன்று பிராமணத்தரப்பாக ஒலிப்பது காழ்ப்பும் கசப்பும் கொண்ட குரல்கள்.அவர்கள் தங்கள் மேல் பாயும் வெறுப்பைச் சுட்டிக்காட்டி தாங்களும் அதேபோல் ஆனால் என்ன தப்பு என்கிறார்கள். நான் அவர்களை எவ்வகையிலும் ஏற்றுக்கொள்வதுமில்லை. அவர்களை ஆதரிக்காவிட்டால் அவர்கள் நம்மை பிராமணவிரோதி என்று பெரியார் பக்கம் தள்ளிவிடுவார்கள். காழ்ப்புக்கு எந்ததரப்பானாலும் ஒரே மொழிதான்.

நான் மேலே சொன்ன பட்டியலில் உள்ளவர்களை பிராமணர்களும் பழிப்பதை நீங்கள் காணலாம். அவர்களுக்கு தங்கள் சாதிக்காக கூச்சலிடும் அடிப்படைவாதிகளும் சென்ற நூற்றாண்டுகளில் வாழும் ஆசாரவாதிகளும்தான் முன்னுதாரணங்கள்

பெரியாரியர்களால் நம் சூழலில் உருவாக்கப்பட்டிருக்கும் இனக்காழ்ப்பின் விளைவாக பிராமணர்கள் கசப்படைகிறார்கள். கசப்பு உருவாக்கும் வீம்பு ஆன்மிகமான அகம் அற்ற எளிய பிராமணர்களை 'ஆமா இப்ப என்ன?' என்ற மனநிலைக்குத் தள்ளுகிறது. அவர்கள் அந்நிலை எடுக்கும்போது இவர்களுக்கும் எல்லாம் எளிதாக ஆகிவிடுகிறது. இதுதான் இன்றைய சூழல்.

ஆம், பிராமணர்களும் சமூக அதிகாரம் பொருளியல் அதிகாரத்துக்காக போராடுகிறார்கள். அனைத்துவகையிலும் முட்டி மோதுகிறார்கள். அதற்காக ஒருங்கு கூடுகிறார்கள். ஆனால் அதைச் செய்யாத சாதி எது? அவர்கள் தங்களிடம் உள்ள அதிகாரங்களை இழக்க விரும்பவில்லை. அதற்கு தயாரானவர்கள் வேறு யார்?

நான் பிராமணர்களிடம் உள்ள சாதிய அடிப்படைவாதத்தை கண்டிக்கிறேன். ஒரு பிராமணன் தன் சாதிசார்ந்த வாழ்க்கை அளித்த உளக்குறுகலையும், மூடநம்பிக்கைகளையும், மனிதவிரோதத் தன்மைகொண்ட பழைமையான ஆசாரங்களையும் விமர்சிக்கவேண்டும். உதறிமுன்னெழவேண்டும். கூடவே தன் மரபின் சிறப்புகளை, தன் குலத்தின் பல்லாயிரமாண்டுக்கால வரலாறு அளித்த பண்பாட்டுக்கொடைகளை பேணிக்கொள்ளவும் வேண்டும்.

அவ்வாறு ஒரு அறிவார்ந்த நோக்கு இல்லாமல் வெறுமே பிராமணனாகப் பிறந்தமையாலேயே அசட்டுமேட்டிமை நோக்கு கொண்டிருப்பவர்களை புறக்கணிக்கிறேன்.அவர்கள் எனக்கு நெருக்கமானவர்கள் என்றால், சிந்தனைத் தரப்பாக அதை முன்வைத்தால் கண்டிக்கிறேன்.

ஆனால், அதே சமயம் வேளாளர், முதலியார், செட்டியார், கவுண்டர் ,நாடார்,தேவர் போன்றவர்களின் சாதிவெறி அதற்குச் சற்றும் குறைந்தது அல்ல என்றே சொல்லவிரும்புகிறேன். அவர்களையும் அதே அளவுகோலைக்கொண்டே பார்க்கிறேன். நம் சூழலில் உள்ள அதே சாதிப்பற்றும் மேட்டிமைநோக்கும்தான் பிராமணர்களிடமும் உள்ளது. அவர்கள் மட்டும் ஏதோ தனியாக ஒரு அடிப்படைவாதம் பேசவில்லை

பிராமணர்களுக்காகவது மீறி எழுந்த மாமனிதர்களின் நீண்ட பட்டியல் உண்டு. அவர்கள் பழைமைபேசினாலும் பேணி நமக்களித்த பண்பாடு காரணமாக அவர்களின் அடிப்படைவாதத்தை ஓரளவு மன்னிக்கலாம். தன் சாதியின் நீண்ட பண்பாட்டை முற்றாக இழந்து நின்றிருக்கும் பிறருக்கு அந்தச் சலுகையும் இல்லை என்கிறேன்.

மற்றசாதியினர் தங்கள் சாதியின் அறிஞர்களையும் ஆன்மீகவாதிகளையும் புறக்கணித்து முண்டாமுறுக்கி நிற்கும் ரவுடிகளை தங்கள் முகங்களாக முன்வைக்கும் காலம் இது. அவர்களுக்கு பிராமணச்சாதியை விமர்சிக்க என்ன தகுதி?

ஆகவே நான் உட்பட பிறசாதியினர் முதலில் சுயவிமர்சனம் செய்வோம். மேலே செல்வோம். பிராமணக்காழ்ப்பு நம்மை எதிர்மறை மனநிலைகொண்டவர்களாக, நம் கீழ்மைகளை மறைப்பவர்களாக மட்டுமே ஆக்கும்…

# (1) வாஞ்சி,ஆஷ்,வேங்கடாசலபதி

22 வருடங்களுக்கு முன்பு குற்றாலத்தில் இருந்து தென்காசிக்கு பேருந்தில் வரும்போது ஒரு குழு பேருந்தில் ஏறி ஒரு துண்டுப்பிரசுரத்தை எல்லாருக்கும் அளித்தது. அது மணியாச்சி ரயில்நிலையத்தை வாஞ்சிநாதன் பேருக்கு மாற்றவேண்டும் என்று குமரி அனந்தன் முதலியோர் கோரிக்கை விடுக்க அதை மத்திய அரசு பரிசீலித்து வந்த காலகட்டம். அதற்கு எதிராக திராவிடர் கழகத்தினர் வெளியிட்ட துண்டுப்பிரசுரம் அது.

அதில் வாஞ்சியின் செயலின் நோக்கமென்ன என்று ஆராய்ந்திருந்தார்கள். தென்காசி அருகே உள்ள கடையம் அக்கிரஹாரத்தில் ஆஷ் துரை குதிரையில் செல்லும்போது ஒரு தாழ்த்தப்பட்ட சாதியைச் சேர்ந்த பெண் பிரசவ வலியால் துடிப்பதைக் காண்கிறார். அவளை உடனடியாக ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்ல அவர் முயன்றபோது அக்ரஹாரம் வழியாகச் செல்லக்கூடாது என பிராமணர்கள் தடுக்கிறார்கள். துப்பாக்கியைக் காட்டி மிரட்டி வழி எடுத்து ஆஷ் துரை வளை ஆஸ்பத்திரியில் சேர்க்கிறார்.

இந்த ' அடாத செயலுக்கு' பழிவாங்கவே வாஞ்சி ஆஷ் துரையை சுட்டுக்கொன்றார் என்று அந்த துண்டுபிரசுரம் சொன்னது. அவர் தன் சட்டைப்பைக்குள் வைத்திருந்த கடிதத்தில் ஆங்கிலேயரை மிலேச்சர் என்றும் ஜார்ஜ் மன்னரை பஞ்சமன் அல்லது பறையன் என்றும் வசைபாடியிருந்தார் என்றும் அதில் இருந்தது.

எனக்கு அந்தப் புதிய கதை ஆச்சரியமாக இருந்தது. ஆனால் அந்தப்பேருந்தில் என்னருகே இருந்தவர்கள் இருவர் உடனடியாக அதை ஆதரித்து இருந்தாலும் இருக்கும் என்று பேச ஆரம்பித்தது அதைவிட ஆச்சரியம் அளித்தது. அந்த புதிய கதைக்கு எந்த விதமான ஆதாரத்தையும் அவர்கள் கேட்கவில்லை. அவர்களின் சாதிச்சார்பு உடனடியாக அந்த

கதையை ஏற்க வைத்தது. அது பிராமணர் குடியிருப்பு அல்லாமல் தேவர் குடியிருப்பு என்றிருந்தால் தேவர்கள் அதற்கு ஆதாரம் கேட்டிருப்பார்கள்.

பின்னர் இந்தக்கதையை பல ஊடகங்களில் கேட்டுக்கொண்டே இருந்தேன். ஒருவர் கூட ஒரு இடத்தில்கூட ஆதாரம் கேட்கவில்லை, அளிக்கவில்லை. ஏன், இந்தக்கதையின் நாயகனாகிய ஆஷ் துரையைப்பற்றிக்கூட ஒரு சித்திரம் உருவாக்கப்படவில்லை. அவரது மனிதாபிமானம் எத்தகையது என்பதற்காக ஒரு சிறிய சான்றுகூட உருவாக்கப்படவில்லை.

பின்னர் அந்தக் கதையின் மூலத்தை நானே கண்டேன். அயோத்திதாசப் பண்டிதர்தான் இந்தக் கதையைச் சொல்கிறார். நிகழ்ச்சி நடந்து ஒருமாதத்துக்குள் அவர் தன் இதழில் எழுதிய குறிப்பில் இதைச் சொல்கிறார். அப்போது அவர் கர்நாடகத்தில் கோலாரில் இருந்தார். அவருக்கு இங்கே நடக்கும் நிகழ்ச்சி ஏதும் தெரிய நியாயமில்லை.

ஒருவகை வன்மத்துடன் வெள்ளைய ஆட்சியை ஆதரிக்கும் போக்கை நாம் அயோத்திதாசரின் கட்டுரைகளில் காணலாம். அந்த வன்மத்துடன் தான் இந்தக் கதையையும் சொல்கிறார். இதையும் ஓரிரு வரிகளில் 'இப்படிக் கேள்விப்பட்டேன்' என்று சொல்கிறார். ஆஷ் மட்டுமல்ல எல்லா வெள்ளைக்காரர்களுமே மனிதாபிமானிகள், நல்லவர்கள் என்பதே அவரது கொள்கை. ஆஷ் துரை செய்த இந்த கருணைச்செயலை முன்பு அவர் பதிவுசெய்யவில்லை. கொலையை மாபெரும் பாதகமாகச் சித்தரித்து மொத்த புரட்சியாளர்களையும் கடுமையாக கண்டிக்கும்போது ஆஷ் துரை கொல்லப்பட்டமைக்கு இதுவே காரணம் என்கிறார்.

இந்தக்கதையை இதற்குப் பின்னரும் எவரும் நிரூபிக்க முற்படவில்லை. ஆனால் ஒரு உண்மைச்சம்பவம் போல திராவிடர் கழக பேச்சுகளில் சொல்லிக்கொண்டிருந்தார்கள். சம்பவம் நடந்த இடம் மட்டும் கதைகளில் மாறிக்கொண்டே இருப்பதைக் காணலாம். ஐந்தாம் ஜார்ஜ் மன்னரை

அன்றைய பாடப்புத்தக பாணியில் ‘ஜார்ஜ் பஞ்சமன்’ என்று வாஞ்சி சொல்கிறார், அதைத்தான் சாதியக்குறிப்பாக மாற்றிவிட்டார்கள்.

ஆனால் இங்கே கவனிக்கவேண்டிய திருப்பம் ஒன்றுண்டு. அயோத்திதாசர் வாஞ்சியையும் பாரதியையும் கண்டிக்கும் அதே வேகத்துடன் அதே மாதிரியான உயர்சாதிவெறியராகத்தான் வ.உ.சிதம்பரம்பிள்ளையையும் சொல்கிறார். பிரிட்டிஷார் இந்தியாவுக்கு நல்லாட்சி அளிக்கையில் அதைக் கவிழ்க்கும் முகமாக தீய நோக்குடன் கப்பல் வணிகத்தை ஆரம்பித்தார் வ.உ.சி என்று எழுதுகிறார். அதை கொடும் ராஜதுரோகம் என்று கண்டிக்கிறார்.ஆனால் வ.உ.சிக்கு மணிமண்டபம் கட்டப்பட்டபோது, அவர் பேரில் மாவட்டம் அமைந்தபோது, தி.கவினர் எவரும் அயோத்திதாசரை மேற்கோள் காட்டி அவரை பழித்து துண்டு பிரசுரங்கள் அச்சிடவில்லை.

ஆ.இரா.வேங்கடாசலபதி காலச்சுவடு இதழில் எழுதிய ஆஷ் துரை பற்றிய கட்டுரை[ http://www.kalachuvadu.com/issue-118/page12.asp] ஆஷ் துரையின் ஆளுமை மற்றும் அக்காலச் சூழல் ஆகியவற்றை கூர்ந்து ஆராய்ந்து தெளிவான ஒரு சித்தரிப்பை அளிக்கிறது. திருநெல்வேலியில் நடந்த சுதந்திரப் புரட்சி என்பது அன்று திலகர் தலைமையில் இந்திய அளவில் உருவாகியிருந்த தீவிரவாதப்போக்கை நடைமுறைப்படுத்துவதற்கான ஒரு முதிரா முயற்சி.

ஆனால் அது அந்த உணர்ச்சிகளை வளரவிடும் வாய்ப்பு கொண்டது. ஏனென்றால் நெல்லைக்கு அத்தகைய வரலாற்றுப்பின்புலம் உண்டு. கட்டபொம்மு நாயக்கர், பூலித்தேவன் போன்ற கிளர்ச்சிகள் மக்கள் நெஞ்சில் இருந்தன. போர்மறவர்களான தேவர்கள் நிறைந்த பூமி. தீவிரவாதிகள் பெரும் ஆள்பலத்தையும் ஆயுதபலத்தையும் திரட்டிவிட்டார்கள் என்று உளவுச்செய்திகள் இருந்தன

அதனால் அஞ்சிய பிரிட்டிஷ் அரசு பெரும் பலத்துடன் அந்த தொடக்கத்தை முளையிலேயே கிள்ளியது. அந்த அடக்குமுறைக்கு முன்னின்ற

அதிகாரிகளில் விஞ்ச் துரையும் ஆஷ் துரையும் முக்கியமானவர்கள். விஞ்ச் துரை தான் முக்கியமான இலக்காக இருந்தார், ஆனால் அவர் முன்னதாகவே நெல்லையைவிட்டுச் சென்றுவிட்டார். ஆஷ் துரை கொல்லப்பட்டார். ஆஷ் கொல்லப்பட்டது ஒரு தற்செயல்தான். தீவிரவாதிகள் ஒரு எச்சரிக்கை கொடுக்க நினைத்தார்கள், ஆஷ்தான் இருந்தார்.

நெல்லைக்கிளர்ச்சி உண்மையில் பெரிய ஒரு இலட்சியக்கனவுடன் ஆரம்பிக்கப்பட்டது. வாஞ்சியின் கடிதத்திலேயே அந்த கனவு இருக்கிறது, 'ஆயிரக்கணக்கானவர்கள் பிரதிக்கினை எடுத்திருக்கிறோம்' என்று அவர் உண்மையிலேயே நம்பியிருக்கலாம். ஆனால் அது நடைமுறை ஞானம் இல்லாதவர்களின் கத்துக்குட்டித்தனமான முயற்சியாகவே இருந்தது.

ஆஷ் கொலை என்பது வெறும்கனவாகப்போன அந்த தீவிரவாதக் கிளர்ச்சியின் கடைசி துள்ளல். மிகவும் பலவீனமானது, அபத்தமானது. அந்தக்கொலைக்குப் பின்னர் ஆங்கில ஆட்சி தொடர்ந்த அடக்குமுறைகளின் விளைவாக 1947ல் இந்திய சுதந்திரம் கிடைக்கும் வரை நெல்லையில் எந்த போராட்டமும் நடக்கவில்லை. அதுதான் வாஞ்சி உருவாக்கிய விளைவு.

ஆஷ் பிரிட்டனின் ஒரு எளிய அதிகாரி. அன்று ஒரு பிரிட்டிஷ் அதிகாரி இந்தியர்களைப்பற்றி என்ன எண்ணம் கொண்டிருப்பாரோ அந்த எண்ணமே அவருக்கும் இருந்திருக்கும். அன்று ஒரு பிரிட்டிஷ் அதிகாரி என்ன செய்தாரோ அதையே அவரும் செய்திருப்பார். அவர் பிரிட்டிஷ் ஆட்சியின் ஒரு அடிப்படை அலகு, அவ்வளவுதான். அதற்காக அவர் கொலையுண்டதென்பது ஒரு அநீதியே.

இந்தியாவில் எந்த பிரிட்டிஷ் அதிகாரியும் மனிதாபிமானம் கொண்டு இந்தியாவின் சாதிசமூக அமைப்புக்குள் தலையிட்டதாகவோ மாற்றங்களைச் செய்ததாகவோ சரித்திரம் இல்லை. சட்டம் ஒழுங்கு, வரிவசூல் இரண்டுக்கும் பாளையக்காரர்களையும் ஜமீன்தார்களையும்

குறுநில மன்னர்களையும் நம்பியிருந்தார்கள் அவர்கள். அவர்கள் செய்த எல்லா சாதியக் கொடுமைகளையும் அவர்கள் மறைமுகமாக அங்கீகரிக்கவே செய்தார்கள்.

ஆஷ் துரையின் வேர்களை தேடிச்செல்லும் ஆ.இரா.வெங்கடாசலபதி அவரை கடுமையான ஏகாதிபத்தியக் கொள்கை கொண்டவராகவும் அதே சமயம் எளிய தனிமனிதராகவும் அடையாளம் காண்கிறார். ஆஷ் துரையின் முகம் கடந்த காலத்தின் எத்தனையோ முகங்களைப்போல வரலாற்றின் கறைபடியாததாக உள்ளது.

அசலான ஆய்வுகள் அருகி வரும் சூழலில் ஆ.இரா.வேங்கடாசலபதியின் இந்த தேடலும் ஆய்வும் மிக மிக பாராட்டத்தக்கது. ஆதாரபூர்வமான உண்மைச்சித்திரம் ஒன்றை அளித்துவிட்டு முடிக்கும்போது அயோத்திதாசரின் கதையையும் திராவிடகழக இயக்கத்தின் பிரச்சாரத்தையும் மெல்ல மறுத்து, செல்லமாகத் தொட்டுச் செல்கிறார். இதுவே ஒரு 'பார்ப்பன திரிபாக' இருந்திருந்தால் திராவிட இயக்க ஆதரவாளரான வேங்கடாசலபதியின் மொழி எந்த அளவுக்கு கூர்மை கொண்டிருக்கும் என எண்ணிக்கொண்டேன்

## (2) மிஷனரி வரலாறு, வாஞ்சி, சக்கிலியர்

அன்புள்ள ஜெயமோகன்,

நலமா?

நல்ல ஆய்வை [வாஞ்சி,ஆஷ்,வேங்கடாசலபதி] சுட்டி இருக்கிறீர்கள், நன்றி!

வாஞ்சி மற்றும் ஆஷைப் பற்றி சில மாதங்களுக்கு நான் எழுதிய ஒரு பதிவில்
–http://koottanchoru.wordpress.com/2009/03/17/வாஞ்சிநாதன்-ஜாதி-வெறியரா/
– அருந்ததியர் வாழும் வரலாறு என்ற புத்தகத்தை பற்றி கேள்விப்பட்டதை எழுதி
இருந்தேன். வாஞ்சியின் மத சார்புக்கான ஆதாரங்கள் இந்த புத்தகத்தில்
இருக்கிறதாமே? இந்த புத்தகம் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள சேவியர்
கல்லூரி வெளியிட்டது. பேராசிரியர் மார்க் எழுதியது. நீங்கள் படித்திருக்கிறீர்களா?

மேலும் வாஞ்சிநாதன் மனைவிக்கு தி.மு.க. காலத்தில் வாஞ்சிநாதனுக்கு உரிமை
உள்ள பென்ஷன் கொடுக்கப்பட்டதை எதிர்த்து தி.க.காரர்கள் போராடினார்களாம்.
அதற்கு முன்னாள் இருந்த ராஜாஜி, காமராஜ், பக்தவத்சலம் அரசுகளில் என்
கொடுக்கப்படவில்லை என்று உடனே கேள்வி எழுகிறது. உங்களுக்கு ஏதாவது
தெரியுமா?

காந்தியும் தலித் அரசியலும் மிக அருமையாக இருந்தது. ஒரே ஒரு குறைதான்.
அதற்குள் முடித்துவிட்டீர்களே! :-)

அன்புடன்,
ஆர்வி

அன்புள்ள ஆர்வி

மாற்கு பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரியை சேர்ந்த ஏசு சபை பாதிரியார். இவர் நாவலாசிரியரும்கூட. இவரை நான் ஒருமுறை பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரியில் சந்தித்திருக்கிறேன். உண்மையான மனிதாபிமானமும் ஏழைகளின்பால் கனிவும் கொண்ட மனிதர் என்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டது. அவர் பலகாலமாக பகடைகள் அல்லது சக்கிலியர் நடுவே மதப்பிரச்சாரப்பணி செய்துவருகிறார். அந்த செயல்பாட்டின் விளைவாக அவர் எழுதிய நூல்தான் 'அருந்ததியர் வாழும் வரலாறு'

இந்த நூலை நீங்கள் முனைவர் கரசூர் பத்மாவதி எழுதிய 'நரிக்குறவர் இனவரைவியல்' [தமிழினி] என்ற நூலுடன் ஒப்பிட்டுப்பார்க்கவேண்டும். முனைவர் பத்மாவதி நெடுங்காலமாக நரிக்குறவர்களுடன் வாழ்ந்து அவர்களை கூர்ந்து அவதானித்து எழுதிய நூல் இது. இதில் அவர் தன்னை ஒரு ஆய்வாளராக, சகமனிதராக மட்டுமே நரிக்குறவர்கள் முன் வைத்துக்கொள்கிறார். இந்த நட்பான பார்வை அவருக்கு அவர்களை துல்லியமாக சித்தரிக்க உதவுகிறது.

பத்மாவதியில் நூலில் நரிக்குறவர்களைப் பற்றிய கருத்துருவாக்க முயற்சி ஏதும் இல்லை. அவர்களின் வாழ்க்கையைப்பற்றிய தகவல்கள் முறையாக தொகுத்தளிக்கப்படுகின்றன. சரிபார்க்கப்படாத தகவல்கள், மையப்பொருளுக்குத் தேவையில்லாத தகவல்கள், ஆசிரியரின் அபிப்பிராயங்கள் அல்லது விமரிசனங்கள் எதுவும் இந்நூலில் இல்லை. அதன் மொழியும் மிக நிதானமாக கறாராக உள்ளது. மானுடவியலின் ஆய்வு முறைமை முழுமையாகக் கடைப்பிடிக்கப்பட்டுள்ள இந்நூல் அம்மக்களைப் பற்றி அறிவதற்கான சரியான கையேடு.

முனைவர் பத்மாவதியின் நூல்தான் இந்த நூற்றாண்டில் மானுடவியல் என்னும் அறிவுத்துறை உருவாக்கிக்கொண்டுள்ள அளவுகோல்களின்படி ஓர் ஆய்வாளனால் பொருட்படுத்தத் தக்கது. முதல்நிலை ஆதாரமாகக்

கொள்ளத்தக்கது. ஆனால் மாற்குவின் நூல் அப்படி அல்ல என எளிதில் உணரலாம்.

மாற்கு தன்னை பகடைகளை விட மேலான ஓர் இடத்தில் மீட்கப்பட்ட நாகரீக மனிதனாக, ஞானம் பெற்றவனாக, உருவகித்துக்கொண்டு அம்மக்களை குனிந்து நோக்கி எழுதுகிறார். நட்பான சகமனிதனின் நிலைக்குப் பதிலாக அவர்களை அறியாமை மற்றும் இழிவிலிருந்து மீட்க விரும்புகிறவரின் தொனி அவரிடம் இருக்கிறது. அது அவரது மதநம்பிக்கை அவருக்கு அளித்தது.

ஆகவே அந்நூல் சக்கிலியரைப்பற்றிய மாற்குவின் அபிப்பிராயங்களின் தொகுப்பு மட்டுமே. அவரது அபிப்பிராயங்களை உருவாக்கும் தகவல்களுக்கு மட்டுமே அங்கே இடமிருக்கிறது. அவர்களின் பண்பாடு பாரம்பரியம் போன்றவற்றை பற்றிய அவர்களின் கதைகளும் நம்பிக்கைகளும் அவநம்பிக்கை கலந்த அலட்சியத்துடன் மட்டுமே முன்வைக்கப்படுகின்றன.

தெலுங்கு பேசும் இம்மக்கள் தமிழகத்தின் நாயக்கர் ஆதிக்க காலத்தில் படைவீரர்களாக வந்தவர்கள். அதற்கு முன் விஜயநகரத்து ராணுவத்தில் இவர்கள் படைவீரர்களாக இருந்தார்கள். குறைந்தது நாநூறு ஆண்டு வரலாறு இவர்களுக்கு உண்டு. அவர்களின் வரலாற்றைப்பற்றி இந்த நூலில் தகவல்களைத் தேடினால் ஏமாந்து போவீர்கள். அம்மக்கள் வாய்மொழியாக தங்கள் வரலாற்றைப் பேணுபவர்கள், தொடர்ந்து முன்வைப்பவர்கள். ஆனால் அவர்களை வரலாறற்றவர்களாக ஆக்கவே மாற்குவின் நூல் முயல்கிறது.

தமிழகத்தில் மிஷனரிகளால் மதம் மாற்றம் செய்யப்பட்ட பெரும்பாலும் அனைத்து சமூகங்களும் அதற்கு முந்தைய வரலாற்றை இழந்திருக்கின்றன, சிறந்த உதாரணம் பரதவர்கள். மாற்குவின் நூலில் அந்த மனநிலை இயல்பாகவே வெளிப்படுகிறது.

இந்நூலுடன் ஒப்பிட்டு வாசிக்கப்படவேண்டிய ஆய்வேடு நாமக்கல் மாணவரான மு.நடராஜன் பெரியார் பல்கலைக்காக எழுதிய 'தொட்டிய நாயக்கர் குலதெய்வ வழிபாடு'. இதில் பகடைகளின் வரலாற்றுப்பின்புலம் குறித்த விரிவான ஒரு சித்திரம் உள்ளது. ஆனால் ஆய்வேடு தொட்டிய நாயக்கர்களைப் பற்றியது. தமிழகத்துக்கு வந்த நாயக்கர்களின் விரிவான

இனவரைவியலை பகடைகளின் வரலாறு இல்லாமல் எழுதமுடியாது. ஆய்வுநோக்குள்ள ஒரு மாணவரால் அந்த வரலாற்றை விட்டுவிட முடியாது.

மாற்கு எழுதிய இந்நூல் கால்டுவெல் எழுதிய 'சாணார் வரலாறு' நூலுக்கு சமானமானது. நாடார்களை வரலாறற்ற, பண்பாடற்ற, பிறப்பிலேயே இழிவாக்கப்பட்ட, அரைப்பழங்குடிகளாகச் சித்தரிக்கும் இந்த நூலுக்கு கடுமையான எதிர்ப்பு கால்டுவெல் இருந்தபோதே அதன் இரண்டாம் பதிப்பு பரவலாக வந்தபோது எழுந்தது. அதன்பின் இது குறைவாகவே அச்சிடப்பட்டிருக்கிறது. கால்டுவெல்லின் நூல் கொஞ்சம் நேரடியானது, மாற்குவின் நூல் உண்மையான மானுடநேயத்தினால் மூடப்பட்டது

உலகம் முழுக்க மானுடவியலில் இவ்விரு வகையான எழுத்துமுறைகள் உள்ளன. ஆஸ்திரேலியா, நியூகினியா, நியூசிலாந்து முதல் அமெரிக்கக் கண்டங்கள் வரையிலான பழங்குடிகளைப் பற்றிய ஆரம்பகாலப் பதிவுகள் பெரும்பாலும் மிஷனரிகளால் எழுதப்பட்டவை. அவை அம்மக்களை முன்னரே தீர்மானிக்கப்பட்ட ஒரு கோணத்தில் மட்டுமே சித்தரிக்கின்றன. ஆகவே இன்றைய மானுடவியலாளர் அவற்றை முதல்நிலை ஆதாரமாகக் கொள்வதில்லை. மிகுந்த எச்சரிக்கையுடனேயே அவற்றில் உள்ள தரவுகளை கையாள்கிறார்கள்.

கால்டுவெல் முதல்  மாற்கு வரையிலான ஆராய்ச்சிகளை அத்தகைய மிஷனரி வரலாற்றை சார்ந்தவை என்றுதான் எடுத்துக்கொள்ளவேண்டும். முனைவர்.பத்மாவதி , மு.நடராஜன் போன்றவர்களின் ஆய்வையே மானுடவியல் ஆய்வுக்கான மதிப்பை அளித்து முதலிநிலை ஆதாரமாகக் கொள்ள வேண்டும்

மிஷனரி ஆய்வாளர்களின் அடிப்படை நோக்கமே அவர்களின் மனநிலையையும் அவர்களின் கோணத்தையும் தீர்மானிக்கிறது. அவர்களைப்பொறுத்தவரை அவர்கள் மெய்ஞானம் பெற்றவர்கள், மீட்கப்பட்டவர்கள். மறுதரப்பில் அவர்கள் எதிர்கொள்ளும் மக்கள் ஞானம் இல்லாதவர்கள், மீட்கப்படாதவர்கள். அவர்களை மீட்பதையும் அவர்களுக்கு தங்கள் மெய்ஞானத்தை அளிப்பதையும்தான் தங்கள் புனித கடமையாக நினைத்து அவர்கள் செய்கிறார்கள். அவர்கள் அம்மக்கள் நடுவே செல்வதும் அவர்களை ஆராய்வதும் அதற்காகவே.

ஆகவே அந்த மக்களின் பிணிகளை நீக்கவும், அவர்களுக்குக் கல்வி அளிக்கவும், அவர்களின் உரிமைகளுக்காகப் போராடவும் அவர்கள் முயல்கிறார்கள். அதன்பொருட்டு அவர்கள் உயிரிழக்கவும் துணிகிறார்கள். அந்த மாபெரும் மானுடநேயத்தை நாம் பார்க்கிற அதே நேரத்தில் அந்த மக்களின் பாரம்பரியத்தை இழிவாக அவர்கள் எண்ணுவதையும் காண்கிறோம். அப்படி இழிவாக எண்ணாவிட்டால் அவர்களை மீட்கும்பொருட்டு அந்தப் பணியை அவர்களால் ஆற்ற முடியாதென்பதே அதற்கான காரணமாகும்

மாற்குவின் நூலுக்கு வருகிறேன். அந்நூலில் ஏராளமான தகவல்கள் 'சொன்னார்கள்' என்ற அளவிலேயே உள்ளன. மாற்குவின் இந்து இந்தியப் பாரம்பரிய எதிர்ப்பு, உயர்சாதி எதிர்ப்புபாகியவற்றை ஆதரிக்கும் எந்தத் தகவலையும் அவர் மேற்கொண்டு விசாரிக்காமல் அப்படியே ஒரு தரவாக பதிவுசெய்து விடுகிறார். அப்படி அவர் அளிக்கும் ஒரு 'சொன்னார்கள்' தகவல்தான் வாஞ்சிநாதனின் சாதிவெறி பற்றிய தகவல். அதில் பிரிட்டிஷ்காரரர் ஒருவர், அவர் கிறித்தவர், மீட்பராகக் காட்டப்படுகிறார் என்பது மட்டுமே அதற்குக் காரணம்.

அப்படி அவர் 'பதிவு'செய்வது அயோத்திதாசர் நூலில் இருந்து திராவிடர் கழகம் எடுத்து துண்டுபிரசுரமாக வெளியிட்ட அதே மொத்தையான தகவல்தான். மேலதிக ஆதாரம் ஏதும் இல்லை. இந்த 'ஆய்வுகள்' வேடிக்கையானவை. முதலில் ஒருவர் ஒரு கதையை உருவாக்குகிறார். அதை ஒருநூலில் எழுதினால் அந்தக்கதை நூறு நூல்களில் மேற்கோள் காட்டப்படும். ஒரு நூல் இன்னொரு நூலை மேற்கோள்காட்டினாலேயே அந்த கருத்து ஆதாரபூர்வமானதாக ஆகிவிடும்!

ஆஷ் துரையின் கொலை பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிரான ஒரு செயல். அந்த எதிர்ப்புணர்வை மழுங்கடிக்க பிரிட்டிஷ் தரப்பிலிருந்தும் முயற்சிசெய்யப்பட்டிருக்கலாம். ஆஷ் ஒரு நியாயவான் என்று காட்டும் கதையின் ஊற்றுமுகம் அதுவாகவே இருக்கும். ஏன் என்றால் திருநெல்வேலியின் அப்பகுதியில் பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தில் அவ்வாறு சாதிய ஒழிப்பு , சமூக சீர்திருத்தம் என எதுவுமே செய்யப்பட்டதில்லை. பிரிட்டிஷ் ஆட்சிக்கு விசுவாசமான, சாதிவெறியர்களான, ஜமீந்தார்களின் ஆட்சி அப்போது நிலவியது. வெள்ளையர்கள் அவர்களுக்குமேல் தங்கள் நிதிவசூல் அதிகாரத்தை மட்டுமே செலுத்தி வந்தார்கள்.

இன்னும் சொல்லப்போனால் பிரிட்டிஷ் அரசு இந்திய உற்பத்திமுறைகளில் எந்த பாதிப்பும் வரக்கூடாது என்று சாதிய அடக்குமுறை அமைப்பை எவ்வகையிலும் கலைக்க மனமில்லாமல் இருந்தது. அந்த மனநிலைக்கு எதிராக மீண்டும் மீண்டும் மிஷனரிகள் போராடுவதை நாம் காணலாம். பிரிட்டிஷ் ஆட்சியாளர்களிடம் மதம் மாறிய தாழ்ந்த சாதியினருக்கு மட்டுமாவது சாதிய அடிமைக்கடமைகளில் இருந்து விலக்கு அளிக்கும்படி பாதிரிமார்கள் கோரிக்கொண்டே இருந்திருக்கிறார்கள்.

பிரிட்டிஷாருக்கு இந்தியர்களில் சாதிவேறுபாடு இல்லை, ஆகவே அவர்கள் அனைவரையும் சமமாக நடத்தினார்கள். கிறித்தவ சபைகள் மிகச்சிறிய அளவில் அவர்கள் தலித்துக்களை மதம் மாற்றியதைவிட்டால் அவர்களுக்காக எதுவுமே செய்யவில்லை. அவர்களின் கவனம் எல்லாமே நாடார் சாதியைச் சார்ந்தே இருந்தது. தலித்துக்களை மதம் மாற்றினால் நாடார்கள் வராமல் போய்விடுவார்கள் என்ற அச்சமும் நிலவியது.

நெல்லையில் சாதிய அமைப்புக்கு எதிரான முதல் சலனம் என்பது காந்தியின் ஹரிஜன இயக்கம் மூலமே நிகழ்ந்தது. திருச்செந்தூர் ஆலயப்பிரவேசம் ஒரு பெரும் கொந்தளிப்பை உருவாக்கியது. ஹரிஜன மக்களின் உரிமைகள் அப்போதுதான் முதல்முறையாகப் பேசப்பட்டன.ஆனால் நெல்லையில் காங்கிரஸும் சுதந்திரப்போராட்டமும் பிறபகுதிகளில் நடந்த அளவு தீவிரம் பெறவில்லை. ஆகவே மற்ற இடங்களில் நடந்த மாற்றங்கள் அங்கே நடக்கவில்லை

நெல்லை மிகவிரைவிலேயே பிற்படுத்தப்பட்ட சாதிகளின் அரசியலுக்கு திராவிட இயக்கங்கள் வழியாகச் சென்று சேர்ந்தது. ஆகவே காங்கிரஸின் ஹரிஜன இயக்கத்தால் தொடங்கப்பட்ட சமத்துவக்கோரிக்கை ஒருசில வருடங்களில் அப்படியே அடக்கப்பட்டது. தமிழகத்தின் பிறபகுதிகளில் இல்லாத அளவுக்கு இங்கே தலித் ஒடுக்குமுறை நிலவியது. திராவிட இயக்கத்தின் தூண்களாக இருந்த, இருக்கும் பிற்படுத்தப்பட்டோர்தான் அதற்குக் காரணம்.

இன்னும் ஒரு விஷயம் என்னவென்றால் கிறித்தவ மதத்திலும் பிற்படுத்தப்பட்டவர்களே இருந்தார்கள். அங்கும் உச்சகட்ட தலித் அடக்குமுறை நிலவியது. இந்தியாவில் வேறெங்கும் இல்லாதபடி கிறித்தவ தேவாலயங்களில் கூட நடுவே சுவர் கட்டி தாழ்த்தப்பட்டவர்களை தனியே விட்டு அவர்கள் தங்கள் கண்களிலேயே படாதபடி வழிபட்டனர்

கிறித்தவர்கள். பின்னர் தனி தேவாலயங்களை அமைத்துக்கொண்டனர். [சாதிக்கு எதிராக 'கொதித்தெழுந்த' ஆஷ் துரை ஏன் கத்தோலிக்க தேவாலயங்களின் சுவரை இடிக்கச் சொல்லவில்லை என மாற்கு ஆராய்ந்து பார்க்கலாம். அல்லது பகடைப்பெண்ணை ஒரு தேவாலயத்துக்குள் கொண்டு வர அவர் முயன்றிருக்கலாமே] இந்த காரணத்தால்தான் இங்குள்ள தலித்துக்கள் முஸ்லீம் மதத்துக்கு மாற முடிவெடுத்தனர். மீனாட்சிபுரம் சம்பவங்கள் சிலருக்கு நினைவிருக்கலாம்.

பின்னர் 1980களில் தலித் இயக்கங்கள் உருவாகி வந்த பின்னர்தான் மீண்டும் சமத்துவத்துக்கான கோரிக்கைகள் உருவாகி வந்தன. அவை மிகமிகக் கடுமையாக பிற்படுத்தப்பட்ட சாதியினரால் எதிர்கொள்ளப்பட்டன. விளைவாக எண்பதுகள் முதல் இருபதுவருடம் தொடர்ச்சியான சாதிக்கலவரங்கள் இப்பகுதியில் நடந்தன. இப்போது தலித் இயக்கங்களும் வலுவாகவே வேரூன்றிவிட்டிருப்பதனால் அதிகாரச் சமநிலை உருவாகிவிட்டிருக்கிறது. தலித்துக்கள் ஆட்சியதிகாரத்தில் தங்கள் பங்குக்காக குரலெழுப்புகிறார்கள்.

இதிலும் நுட்பமான உட்சிக்கல் உள்ளது. இங்கே தலித்துக்களில் பெரும்பாலானவர்கள் மள்ளர்கள் அல்லது தேவேந்திரகுல வேளாளர்கள். இவர்களே தலித் அரசியலை முன்னெடுக்கிறார்கள். இவர்களின் கண்ணில் பகடைகள் கீழ்த்தளத்தில்தான் இருக்கிறார்கள். இட ஒதுக்கீட்டின் பலன் பகடைகளுக்கு வருவதில்லை. ஆகவே சமீபகாலமாக அவர்கள் உள் ஒதுக்கீடு கேட்கிறார்கள். அவர்களின் கோரிக்கையை மார்க்ஸியக் கம்யூனிஸ்டுக் கட்சி வலுவாக முன்னெடுக்கிறது. தேவேந்திரகுல வேளாளர்களின் புதிய தமிழகம் அதை எதிர்க்கிறது

இதுதான் சூழல். இந்த அதிகாரச்சமரில் உயர்சாதி என்றொரு தரப்பே இல்லை. செயற்கையாக அதை உருவாக்க முயலும் ஓர் அரசியல் உத்தியே மாற்கு போன்ற மிஷனரிகளும் திராவிடர் கழகத்தினரும் வாஞ்சி எதிர்ப்பு வழியாக செய்வது. அது தங்கள் சாதிய நோக்குகளை, ஆதிக்க நோக்குகளை மறைத்துக்கொள்ளும் தந்திரம் அன்றி வேறல்ல.

# (3) வாஞ்சியும் தலித்துக்களும்

அன்புள்ள ஜெ,

வாஞ்சிநாதன் ஆஷ் துரையைக் கொன்றது ஆஷ் துரை தலித்துக்களுக்கு ஆதரவாக நடந்துகொண்டமையால்தான் என்று ஒரு வாட்ஸப் செய்தி நேற்றும் இன்றும் சுற்றிவருகிறது. அதில் உண்மை என்ன?

முருகேஷ்

***

அன்புள்ள முருகேஷ்,

தமிழ் அறிவுத்துறையில் இதைப்பற்றி விரிவாக எழுதி விளக்கி கடந்துசென்று நெடுநாட்களாகிறது. இதற்குமேல் இதைப்பேசுகிறார்கள் என்றால் அவர்கள் எழுத்து -வாசிப்பு தளத்தில் எந்த அறிமுகமும் இல்லாதவர்கள். செவிவழிச்செய்திகள் , வாட்ஸப் உதிரிச்செய்திகளில் உழல்பவர்கள். அவர்களை எந்த நூலும், எந்த வரலாற்று விளக்கமும் மாற்றாது. அது ஒருவகை மூடநம்பிக்கை.

சுருக்கமாகச் சொல்கிறேன். வாஞ்சி காலகட்டத்தில் இந்திய சுதந்திரப்போராட்ட மரபில் இரு கருத்தியல்போக்குகள் இருந்தன. ஒர் அணி இழந்துபோன பாரதப்பெருமையை மீட்டு, அதை அன்னிய அடிமைத்தளையிலிருந்து வெளியே கொண்டுவரவேண்டுமென விரும்பியது. திலகர் அதன் முகம். இன்னொரு அணி ஐரோப்பாவில் உருவாகி வந்துகொண்டிருந்த நவீன ஜனநாயக சமூகம் ஒன்றை இந்தியாவில் உருவாக்க வேண்டும் என விரும்பியது. கோகலே அதன் முகம்

வாஞ்சி முதல் அணியைச் சேர்ந்தவர். அவர்கள் அன்றைய தீவிரவாதிகள். இரண்டாம் தரப்பினர் அன்றைய மிதவாதிகள். அந்தக் கருத்தியல்பூசல் காங்கிரஸில் தொடர்ந்து நடந்தது. நேரடி நாற்காலிவீச்சு வரை காங்கிரஸ் கூட்டங்களில் சாதாரணமாக நடந்தது.

பின்னர் காந்தி வந்தார். அவர் கோகலே அணியைச் சேர்ந்தவர். அணிகளை கடந்து நேரடியாக அவரால் எளிய மக்களிடம் பேசி அவர்களை அணிதிரட்டமுடிந்தது. அவர் அடைந்த அரசியல் வெற்றி என்பது அவ்வாறு

வந்தது. இது முதல் அணியை மெல்ல தேம்பி மறையச்செய்தது. அவர்களில் கணிசமானவர்களுக்கு கடைசிவரை காந்திமேல் கடும் கசப்பு இருந்தது.

முதல் அணியைச்சேர்ந்தவர்களே அன்று வன்முறையை நம்பினார்கள். அவர்களில் ஒருவராகிய வ.வே.சு.அய்யரால் தூண்டுதல் பெற்றவர் வாஞ்சி. அவரது கடிதம் அந்தக் கருத்தியலைக் காட்டுகிறது.

அன்றைய தலித்தியக்கத்தினர் பலருக்கு ஆங்கில ஆட்சி தங்களை விடுதலைசெய்ய வந்தது என்னும் எண்ணம் இருந்தது. ஆகவே அவர்கள் மிகத்தீவிரமாக ஆங்கிலேயரை ஆதரித்தனர். சுதந்திரப்போராட்டத்தை தங்களை விடுவிக்க வந்த ஆங்கிலேயருக்கு எதிரான உயர்சாதியினரின் போராட்டமாகவே அவர்கள் பார்த்தனர் [ஆங்கில ஆட்சியே பஞ்சங்களுக்குக் காரணம் என்ற எண்ணமெல்லாம் அன்று இல்லை. அத்தகைய விரிவான பொருளியல்நோக்கு உருவாகி வருவதெல்லாம் மேலும் பல ஆண்டுகள் கடந்துதான்]

இதுதான் அன்றைய கருத்தியல்தரப்புக்கள். ஒரே செயலை இவர்கள் வெவ்வேறு கோணங்களில் பார்த்தனர். தீவிரத்தரப்பினர் வாஞ்சியை ஒரு தியாகியாக அணுகினர். மிதவாதிகள் அவரை அத்துமீறியவர் என்று எண்ணினர். தலித் தரப்பினர் அவரை உயர்சாதிவெறியர் என எண்ணினர்.

இதில் இன்னொரு பலவீனமான தரப்பு உண்டு, அது நீதிக்கட்சி. அது ஆங்கிலேயருடன் ஒத்துழைத்து அரசியலதிகாரத்தை கையாண்டவர்களால் ஆனது. பெரும்பாலும் நிலச்சுவான்தார்கள் குத்தகைதாரர்கள் போன்ற உயர்குடியினரால் ஆனது அது. அவர்களுக்கு வாஞ்சி ஒரு கொலைகாரனாகவே தோன்றினான். நீதிக்கட்சியின் நீட்சியே திராவிடர் கழகமும் திராவிடக் கட்சிகளும்.

ஆஷ் துரையின் கொலை அன்று ஆங்கிலேயர் நடுவே பெரிய பதற்றத்தை உருவாக்கியது. ஏனென்றால் முன்னர் நிகழ்ந்த சிப்பாய்ப்புரட்சி ஆங்கிலேயரை பெருமளவில் கொன்றழித்தது வாஞ்சியின் கடிதம் அப்படி ஒரு கிளர்ச்சி நெல்லையில் உருவாகக்கூடும் என்ற [பொய்யான] சித்திரத்தை அவர்களுக்கு அளித்தது

ஆகவே ஆங்கிலேய ஆதரவாளர்கள் அனைவரும் பதறியடித்து வாஞ்சிக்கு எதிராக கடும் கண்டனங்களைப் பதிவுசெய்தனர். ஆங்கிலேயருக்கு ஆதரவாக அறிக்கைகளை விட்டனர். அதில் ஆங்கிலேயர் வானளாவப்

புகழப்பட்டிருந்தனர். ஆஷ் துரையும். ஆனால் அது எவ்வகையிலும் உண்மை அல்ல.

சென்னை கவர்னர் ஆக இருந்த கோல்ட் அவர்களின் காலம் முதல் இந்தியாவின் சாதிப்பிரச்சினைகளில் தலையிடுவதில்லை என்பதே ஆங்கிலேயரின் நிலைபாடாக இருந்தது. அது அவர்களின் வணிகம், ஆட்சி இரண்டுக்கும் வசதியானது.நேரடியாகவே ஒன்று சொல்லலாம். நெல்லையில் இந்தியா சுதந்திரம் பெறும் காலம் வரை பல கிறித்தவ தேவாலயங்களில் தலித்துக்கள் அனுமதிக்கப்படவில்லை. அனுமதிக்கப்பட்ட தேவாலயங்களில் பிறசாதியினர் கண்களில் அவர்கள் படாமலிருக்க தனி தடுப்புச்சுவர் கட்டப்பட்டிருந்தது. ஆங்கில அரசு அதை தடுத்திருக்கலாமே? [ஆ.சிவசுப்ரமணியம் **கிறித்தவமும் சாதியமும்** என்னும் நூல்]

உண்மையில் பிரிட்டிஷ் காலகட்டத்தில் பெரும்பகுதி நிலம் அவர்களுக்கு கப்பம்கட்டும் ஜமீன்தார்களின் ஆட்சிக்குக் கீழே இருந்தது. ஜமீன்தார்கள் மிகப்பழைமையான சாதிவெறி ஆட்சியே நடத்தினார்கள். அவர்களுக்கு முழுமையான ராணுவ ஆதரவை பிரிட்டிஷ் ஆட்சி அளித்தது. வரலாற்றில் வெள்ளை ஆட்சிக்காலம் அளவுக்கு ஜமீன்தார்கள் அதிகாரத்துடன் என்றும் இருந்ததில்லை. இது அவர்களை கேட்பாரற்ற கொடூர ஆட்சியாளர்களாக ஆக்கியது. கிராமங்களில் சாதியமைப்பு நெகிழவிடாமல் அவர்கள் பார்த்துக்கொண்டனர்

பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தின் உச்சகட்ட சுரண்டல், உணவு ஏற்றுமதி இரண்டும் இணைந்து பெரும்பஞ்சங்களை உருவாக்கியது. இந்திய தலித்துக்களில் பெரும்பகுதி பஞ்சத்தில் இறந்தனர். ஆனால் பிரிட்டிஷார் அந்தப்பஞ்சத்திற்குக் காரணம் என்னும் உணர்வு அன்றிருக்கவில்லை. அவர்கள் செய்த எளிய நிவாரண உதவிகள் பெரிய கொடையாக கருதப்பட்டன

பிரிட்டிஷ் ஆட்சி நேரடியாக நடந்த பகுதிகளில் பிரிட்டிஷ் சட்டம் தலித்துக்கள் மீதான கொடுமைக்கு எதிரான காப்பாக அமைந்தது உண்மை. பஞ்சம் தலித்துக்களை கூட்டம்கூட்டமாக இடம்பெயரச் செய்து நகர்களை நோக்கி வரச்செய்தது. அங்கே அவர்களின் உடலுழைப்புக்கு மதிப்பிருந்தது. அது அவர்களில் ஒருசாராரை பிரிட்டிஷ் ஆதரவாளர்களாக ஆக்கியது. நகர்ச்சூழலில் தலித்துக்கள் கல்விபெற்றனர். அரசியல்

உரிமைகளைப்பற்றிய விழிப்புணர்வை அடைந்தனர். தலித் இயக்கம் உருவாகி வந்தது.

இதுதான் அன்றைய சூழல். இதில் கவனிக்கவேண்டியவை சில. ஒன்று ஆஷ் துரை எவ்வகையிலும் இந்தியர்கள்மீதோ தலித்துக்கள் மீதோ கருணையுடன் நடந்துகொள்ளவில்லை.. அவர் தலித்துக்களின் காவலன் என்ற செய்தி எங்கும் எப்போதும் பதிவானதில்லை. அது ஒரு கட்டுக்கதை. அவர் பெரும்பாலான வெள்ளைய அதிகாரிகளைப்போல தனிப்பட்ட லாபநோக்கு கொண்ட, கறாரான ஒரு மனிதர். ஆ.இரா வேங்கடாசலபதி மிக விரிவாக ஆய்வுசெய்து இவற்றை எழுதியிருக்கிறார் [ஆஷ் அடிச்சுவட்டில்]

இரண்டாவதாக, வாஞ்சி ஆஷ்துரையைக் கொல்ல வரவில்லை. தீவிரவாத தரப்பினர் இலக்காக்கியவர் திருநெல்வேலி கலெக்டராகிய விஞ்சு துரைதான். ஆஷ் துணை கலெக்டர்தான். விஞ்சு அந்த ரயிலில் வரவில்லை. ஆகவே அவர் சிக்கிக்கொண்ட ஆஷ் துரையைக் கொன்றார். ஒரு வெள்ளை அதிகாரியைக் கொல்வது மட்டுமே அவரது நோக்கம்

மூன்றாவதாக, அது போதிய அரசியல் பிரக்ஞையோ பயிற்சியோ இல்லாத ஒரு தனிநபர் முயற்சி. அதன் விளைவாக, குறிப்பாக அந்த அசட்டுத்தனமான கடிதத்தின் எதிரொலியாக, திருநெல்வேலியின் சுதந்திரப்போராட்டத்தை மூர்க்கமாக ஒடுக்க பிரிட்டிஷாருக்கு ஒரு வாய்ப்பு கிடைத்தது. அதன்பின் இந்திய விடுதலை வரை திருநெல்வேலி எழுச்சி பெறவே இல்லை

நான் வாஞ்சிநாதனின் ‘தியாகத்தை’ போற்றவில்லை. எனக்கு அம்மாதிரி சில்லறைக் கலவரங்களில் நம்பிக்கை இல்லை. அது போன்ற நிகழ்வுகளுக்கு சுதந்திரப்போரில் ஒரே ஒரு மதிப்புதான் உண்டு, அவை மக்களின் கவனத்தைக் கவர்ந்து சுதந்திரப்போர் குறித்த செய்தியை கொண்டுசெல்கின்றன. ஆனால் ஏற்கனவே பஞ்சத்தில் நொந்து அஞ்சிப்போய் கிடக்கும் மக்களுக்கு அவை மேலும் அச்சத்தை ஊட்டி சுதந்திரப்போராட்டத்தை மேலும் பின்னுக்கிழுத்தன. ஆம், பகத்சிங் மீதும் , படுகேஷ்வர் தத் மீதும் சந்திரசேகர ஆஸாத் மீதும் எனக்கு இதே அபிப்பிராயம்தான்.

# (4) வ.வே.சு.அய்யரும் சாதிவெறியும்

தமிழிலக்கியத்தின் இரு கிளைகளுக்கு முன்னோடியானவர் வ.வே.சு.அய்யர். தமிழ்ச்சிறுகதையின் தொடக்கப்புள்ளிகளில் ஒன்று என அவர் எழுதிய மங்கையர்க்கரசியின்காதல் என்ற சிறுகதைத்தொகுதி குறிப்பிடப்படுகிறது. அதில் உள்ள குளத்தங்கரை அரசமரம் தமிழின் முதல் இலக்கணம் அமைந்த சிறுகதை என க.நா.சு. மரபினர் சொல்வார்கள். வ.வே.சு.அய்யர் பாரதிபாடல்களுக்கு எழுதிய முன்னுரை தமிழின் விமர்சன மரபுக்கு வழிகோலியது.

வாழ்க்கையின் கடைசிக்காலகட்டத்தில் வ.வே.சு.அய்யர் கடும் சர்ச்சைகளுக்கு ஆளானார்.பாரதியார் உத்தேசித்த சுதேசிக்கல்வியைப் பரப்பும்பொருட்டு வ.வே.சு.அய்யர் ஒரு கல்விநிலையத்தை சேர்மாதேவியில் நிறுவினார். தமிழ்நாடு ஆசிரமம் என்ற அக்குருகுலத்தில் எல்லா சாதி மாணவர்களும் பயின்றார்கள். அய்யரின் மகன் வ.வே.சு.கிருஷ்ணமூர்த்தியும் பிற மாணவர்களும் இணைந்து சமமாகவே அமர்ந்து உணவுண்டார்கள். ஆனால் இரு பிராமண மாணவர்களுக்குத் தனியாக அங்கே உணவு பரிமாறப்பட்டது

வாவில்லா குடும்பம் என்ற பிரபலமான வைதிக குடும்பத்தின் இரு மாணவர்கள் அவர்கள். ஆசிரமத்துக்கு நிதியுதவி செய்தவர்கள். அன்று கடுமையான பிரிட்டிஷ் அடக்குமுறைச் சூழலில் சுதேசிப்பள்ளியில் மாணவர்கள் சேர்க்கப்படுவது கடினமாக இருந்தது. வீடுவீடாகச் சென்று மாணவர்களை சேர்க்கவேண்டியிருந்தது. ஆசாரம் கெட்டுப்போகலாகாது என்று அந்தக் குடும்பத்தினர் இட்ட நிபந்தனையை ஏற்றுத்தான் வ.வே.சு.அய்யர் அவர்களை சேர்த்துக்கொண்டார். அதற்கேற்ப அவர்களை மட்டும் தனியாக உணவருந்தச் செய்தார்.

அன்றைய காங்கிரஸில் இருந்த இருபெரும் குழுக்களுமே பிராமணத்தலைமை கொண்டவை- சத்தியமூர்த்தி குழு, ராஜாஜி குழு. இரண்டுக்கும் எதிராக உருவாகிவந்தவர்கள் பி. வரதராஜுலு நாயுடு, திரு.வி.

கல்யாணசுந்தர முதலியார், ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் போன்றவர்கள் தலைமையில் கிளர்ந்துகொண்டிருந்தார்கள்.

உண்மையில் இது பிராமணர்களுக்கு எதிரான பிராமணரல்லாத உயர்சாதியினரின் அதிகாரக் கலகம். காங்கிரஸின் முன்னோடிகள் பிராமணர்கள். ஆனால் 1920களுக்குப்பின் காங்கிரஸுக்குள் பிராமணரல்லாத உயர்சாதியினர் பெருமளவுக்கு வந்து உறுப்பினர் எண்ணிக்கையில் அவர்கள் பெரும்பான்மை ஆகியிருந்தனர். அது தலைமையில் பிரதிபலிக்கவில்லை. இதுவே உண்மையான பிரச்சினை

வரதராஜுலுநாயுடுவின் சீடரும் தனக்கெனத் தனி செல்வாக்கு கொண்டவருமான ஈ.வே.ராமசாமி அவர்கள் இந்த எதிர்ப்புக்குத் தலைமை ஏற்க ஆரம்பித்தபோது கடுமையான நிலைப்பாடுகளை எடுத்தார். இவர்கள் தமிழகக் காங்கிரஸின் அதிகார அமைப்புடன் முரண்பட்டுக் காங்கிரஸை விட்டு விலகும் நிலையில் இருந்தார்கள். இச்சூழலை நாம் கோவை அய்யாமுத்து, டி.எஸ்.எஸ்.ராஜன் போன்றவர்களின் சுயசரிதைகளிலும் ஈவேரா எழுத்துகளிலும் இன்று வாசித்தறிய முடிகிறது.

வ.வே.சு.அய்யர் அப்போது காங்கிரஸ் தலைமையால் மதிக்கப்படும் நிலைமையில் இருந்தார். அப்போது காங்கிரஸில் வளர்ந்து வந்துகொண்டிருந்த ஈவேராவுக்கும் வ.வே.சு.அய்யருக்கும் இடையே அகங்கார மோதல் உருவானது. வ.வே.சு.அய்யர் பொதுவாகவே கொஞ்சம் தோரணை கொண்டவர் என்பது பலரால் எழுதப்பட்டிருக்கிறது. வெளிநாட்டில் படித்தவர், விரிவான வாசிப்பு கொண்டவர், தியாக வரலாறு கொண்டவர். காங்கிரஸில் தன்னை அவர் விதிகளுக்கு அப்பாற்பட்ட பிதாமகனாக எண்ணிக்கொண்டிருந்தார்.

பொதுவாகவே எவருக்கும் பணிந்து போகாதவர் ஈவேரா. அத்துடன் காந்தியைப்போலப் பண விஷயத்தில் மிதமிஞ்சிய கண்டிப்பு கொண்டவர். காங்கிரஸ் கட்சியின் செயலராகக் காசோலையில் கையெழுத்திடும் இடத்தில் இருந்தார் ஈ.வே.ரா. பொதுவாகவே ஈவேரா ஐந்துபைசாவுக்கும் ஆயிரம் கணக்கு கேட்பார், துளைத்து எடுப்பார். அதை கோவை அய்யாமுத்து விரிவாகவே எழுதியிருக்கிறார். வ.வே.சு. அய்யர் பணத்துக்கு வந்தபோது ஈவேரா கணக்குகளைக் கேட்டு குறுக்கு விசாரணை செய்தார். அதை வ.வே.சு.அய்யர் தனக்குச் செய்யப்பட்ட அவமதிப்பாக

எடுத்துக்கொண்டார். ஈவேரா , வ.வே.சு.அய்யரின் தோரணையால் எரிச்சல் கொண்டார்

காங்கிரஸ் கட்சி ஆசிரமத்துக்கு ஒதுக்கிய பத்தாயிரம் ரூபாய் பணத்துக்கான காசோலையை வ.வே.சு.அய்யர் கேட்க வந்தபோது காங்கிரஸ் கமிட்டியின் எல்லா நிபந்தனைகளையும் அய்யரின் ஆசிரமம் நிறைவேற்றுகிறதா எனத் தன்னிடம் ஐயர் வாக்குமூலம் கொடுத்தால் காசோலையில் கையெழுத்திடுவதாக ஈ.வே.ரா சொன்னார். அய்யர் ஈவேராவை அலட்சியம் செய்து கூட்டுச்செயலாளாரிடம் ஐயாயிரம் ரூபாய்க்குக் காசோலையை வாங்கிக்கொண்டு போய்விட்டார்.

நான்குநாள் கழித்து இந்தத் தகவல் ஈவேராவுக்குத் தெரிய வந்தது. அந்த அலட்சியத்தால் சீண்டப்பட்ட ஈவேரா மிச்சத் தொகையைக் கொடுக்காமல் நிறுத்தி வைத்துவிட்டார். அய்யருக்கும் ஈவேராவுக்கும் கடுமையான பூசல் ஏற்பட்டுவிட்டது. அய்யர் ஈவேராவை சமாதானப்படுத்த முயலவில்லை. மாறாக காங்கிரஸ் மாகாணக் கமிட்டிக் கூட்டம் டாக்டர் டி.எஸ்.எஸ் ராஜன் இல்லத்தில் நடந்தபோது ஈவேராவிடம் உள்ள பூசலைப்பற்றி சொல்லாமல் தனக்கு மிச்ச ஐயாயிரம் ரூபாய் கிடைக்கவில்லை என்று புகார் சொன்னார். ராஜன் உடனே ஈவேராவைக் கூட்டத்திலேயே கடிந்து பேசினார்

கோபம்கொண்ட ஈவேரா,வ.வே.சு.அய்யர் கட்சியின் செயலராகிய தன்னை மதிக்கவில்லை, தன்னிடம் அறிக்கை அளிக்கவில்லை என்று கூறி ஐயாயிரம் ரூபாய்க்குக் கையெழுத்துப் போட முடியாது என்று மறுத்தார். கூட்டத்தில் சிலர் ஈவேரா வயதில் மூத்த அய்யரை எதிர்த்துத் துடுக்காகப் பேசுவதாக சொன்னார்கள். அதில் ஈவேராவின் நெருக்கமான நண்பராகிய கோவை அய்யாமுத்து முன்னணியில் இருந்தார். ஈவேரா அய்யர் தன்னிடம் வருத்தம் தெரிவிக்கவேண்டும் என்றார். வ.வெ.சு.அய்யர் ஈவேராவிடம் எந்த வருத்தமும் தெரிவிக்காமல் எழுந்து சென்றார். கட்சி ஈவேராவைக் கண்டித்தது. வேறு செயலர் கையெழுத்துப் போடட்டும், நான் போடமாட்டேன் என்று ஈவேரா கறாராகச் சொன்னார்.

இந்த நிகழ்ச்சியில் எல்லா பிராமணர்களும் ஒரே தரப்பாகக் கூடிவிட்டதாக வரதராஜுலு நாயுடு கருதினார். அதை அங்கே அவர் கோபத்துடன் சொல்ல டி.எஸ்.எஸ்.ராஜன் அவர் வகுப்புவாதப்பேச்சு பேசுவதாக நாயுடுவைக் கண்டித்தார். கூட்டம் முடிந்ததும் பிராமணரல்லாதவர்களும் பிராமணர்களும் தனித்தனியாகப்பிரிந்து

பேசிக்கொண்டார்கள். கடினமான சொற்கள் வீசப்பட்டன. மனக்கசப்புகள் பலப்பட்டன. ஈவேரா கையெழுத்து போடாததனால் வ.வே.சு.அய்யருக்குக் கடைசிவரை மீதிப் பணம் கொடுக்கப்படவில்லை.

அதைத் தொடர்ந்து திருச்சியில் நடந்த காங்கிரஸ் மாநாட்டில் ஈவேரா அவர்கள் காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவரது சேவையைப்பாராட்டி ஒரு தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது. ஆனால் தேர்தல் நடந்த அதே மாநாட்டில் வ.வே.சு.அய்யர்,ஈவேரா மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவந்தார். இது வெறும் தனிப்பட்ட மனக்கசப்பின் விளைவே என கோவை அய்யாமுத்து பதிவு செய்கிறார். ஈவேரா கடுமையாகப் புண்பட்டார். ஈவேராவின் நண்பரான திரு.வி.கல்யாணசுந்தர முதலியார் அவருக்கே உரிய படபடப்புடன் இது ஒரு சாதிய மனநிலையின் வெளிப்பாடு, பிராமணர் கூட்டாகச் சேர்ந்து இதைச் செய்கிறார்கள் என்று அந்த மாநாட்டில் குற்றம்சாட்டிப் பேசினார்.

வ.வே.சு.அய்யரின் தீர்மானம் தோல்வி அடைந்தது. இது தொண்டர் மட்டத்தில் பிராமணர்களைவிட பிராமணரல்லாதாரின் எண்ணிக்கை அதிகரித்து அதிகாரச்சமநிலை மாறியமைக்கான திட்டவட்டமான ஆதாரமாக இருந்தது. இது பிராமணர்களுக்கு ஒரு சுவரெழுத்தாகத் தெரிந்தது. உள்ளே ஈவேராவுக்கும் வ.வே.சு.அய்யருக்குமான பூசல் வலுத்துக்கொண்டே வந்தது. அதற்கு வ.வே.சு.அய்யரின் பிதாமக மனநிலையே காரணம் என்று இப்போது பலவாறாக ஊகிக்க முடிகிறது. காங்கிரஸ் மாறிவிட்டதை அய்யர் புரிந்துகொள்ளவில்லை.

இந்நிலையில் அய்யருக்கு வெள்ளைய அரசு கடுமையான நெருக்கடிகளைக் கொடுக்க ஆரம்பித்தது. காங்கிரஸின் நிதியைக் காங்கிரஸ் தலைவராக இருந்த ஈவேரா முற்றாக நிறுத்திவிட்டார். பள்ளியை நடத்துவது சிரமம் ஆகியது.வ.வே.சு.அய்யர் தன்னை வந்து பார்த்து சமாதானம் செய்வார் என ஈவேரா எதிர்பார்த்தார். ஆனால் அய்யர் தனிப்பட்டமுறையில் மக்களிடம் வசூல் செய்ய ஆரம்பித்தார். காங்கிரஸ் தலைவர்கள் அதை ஆதரித்து இதழ்களில் எழுதினர். திருவிகவும், வரதராஜுலு நாயுடுவும்கூட அதை ஆதரித்தனர்

கொதிப்படைந்த ஈவேரா நாயுடுவைக் கண்டித்துக் கூட்டங்களில் பேசினார். பிராமணச்சதிக்கு நாயுடு விலை போய்விட்டார் என்றார். நாயுடு திருவிகவை ஈவேராவிடம் தூதனுப்பினார். அவர்களுக்கிடையே ஒரு சமரசம் ஏற்பட்டது.

இந்தத் தருணத்தில் ஒற்றுமையாக இருந்து வ.வே.சு.அய்யரையும் அவருக்குப்பின்னால் உள்ள பிராமண அதிகாரத்தையும் தோற்கடிப்பது என முடிவெடுத்தார்கள். ஈவேரா, நாயுடு ஆகியோர் வ.வே.சு.அய்யர் பிராமண சாதிபேதத்தைப் பரப்புவதாகவும் ஆகவே பிராமணரல்லாதார் அவருக்கு நிதியுதவி செய்யவேண்டாம் என்றும் இதழ்களில் எழுதினார்கள். இது வ.வே.சு.அய்யரைக் கொதிப்படையச்செய்தது.அவர் மேலும் தீவிரமாக வசூலில் ஈடுபட்டார். அவர் நாடறிந்தவராதலால் ஆதரவும் அதிகம் இருந்தது.

சிலநாட்கள் கழித்து ஓமந்தூர் ராமசாமி ரெட்டியாருடைய மகன் வந்து சேர்மாதேவி ஆசிரமத்தில் இரு பிராமண மாணவர்களுக்குத் தனிப் பந்தி போடப்படுவதாகத் தெரிவித்தார். இந்த விஷயத்தைப் பெரிய அளவில் வெளியே கொண்டுவந்து வ.வே.சு.அய்யரை ஒடுக்கவும், பிராமணத்தலைமைக்கு எதிராக பிராமணரல்லாதாரைத் திரட்டவும் முடியும் என வரதராஜுலு நாயுடுவும் ஈவேராவும் கருதினர். அதை ஒரு பெரிய விஷயமாக முன்னெடுத்தனர். வ.வே.சு அய்யரின் ஆசிரமத்தில் பிராமணரல்லாதார் கொடுமைக்குள்ளாவதாகவும் பிரார்த்தனை உட்பட அனைத்திலுமே சாதிபேதம் காட்டப்படுவதாகவும் ஈவேராவும் நாயுடுவும் கடுமையாக எழுதினர்.

இந்த விவகாரம் தமிழகம் முழுக்க காங்கிரஸில் இருந்த பிராமணரல்லாதாரைக் கொந்தளிக்கச் செய்தது. ஆனால் வ.வே.சு.அய்யர் அவருக்கே உரித்தான மிதப்பில் இதைப் பொருட்படுத்தவில்லை. அவர் விளக்கமளிக்கவும் இல்லை. காந்தி உட்படப் பலர் விளக்கம் கோரியும்கூட தான் காங்கிரஸ் கட்டுப்பாட்டில் இல்லை என்பதனால் பதிலளிக்க முடியாது என்ற நிலையை வ.வே.சு.அய்யர் எடுத்தார். சில விஷயங்களை அவர் விளக்கியிருந்தால் அன்றே இச்சிக்கல் ஓய்ந்திருக்கும்.

உதாரணமாக ஆசிரமத்தில் பிரார்த்தனைகளில் மாணவர்களுக்கு அவர்களின் குடும்பங்களில் என்ன வகையான பிரார்த்தனைகள் இருக்கின்றனவோ அதுவே பின்பற்றப்பட்டது. அதாவது சைவர்களுக்கு தேவாரம்,திருவாசகமும், வைணவர்களுக்குத் திருவாய்மொழியும், பிராமணர்களுக்கு உபநிடத பாடங்களும் சொல்லிக்கொடுக்கப்பட்டன. ஒரு வழிபாட்டுமுறை கொண்டவர்கள்மேல் பிற வழிபாட்டுமுறைகள் திணிக்கப்படவில்லை. இது அன்றைய சூழலில் எவ்வளவு முக்கியம் என்பதை சொல்லித்தெரியவேண்டியதில்லை. ஒருசைவ

வேளாளப்பிள்ளைக்கு உபநிடதம் சொல்லிக்கொடுப்பது பெரும் மத அவமதிப்பாகவே கொள்ளப்படும். வ.வே.சு.அய்யர் அந்த உறுதிமொழியைக் கொடுத்தே பிள்ளைகளைச் சேர்த்திருந்தார்

ஆனால் அங்கே விருப்பமுள்ள அனைவருக்குமே உபநிடதங்கள் கற்பிக்கப்பட்டன. அய்யர் மாணவர்கள் குர் ஆன், பைபிள் ஆகியவற்றையும் கற்றுக்கொள்ளவேண்டும் என அறிவுறுத்துபவராக இருந்தார். அதைப் பல இடங்களில் எழுதியிருக்கிறார். ஆனால் அவரால் அதை ஒரு பாடத்திட்டமாக ஆசிரமத்தில் வைக்க முடியாத நிலை இருந்தது என்பதே உண்மை. ஆனால் இதையெல்லாம் அவர் விளக்க முயலவில்லை. தன்னைப்பற்றி அனைவருக்கும் தெரியும் என்று அவர் நினைத்தார்.

ஈவேரா காங்கிரஸில் இருந்து வெளியே வந்து சுயமரியாதை இயக்கத்தையும் பின்னர் திராவிடர் கழகத்தையும் ஆரம்பிப்பதற்கான தூண்டுதல் நிகழ்ச்சி இது. தமிழக அரசியல் வரலாற்றில் மிகமிக முக்கியமான இடம் வகிப்பது. இந்தப் போராட்டம் நடந்துகொண்டிருக்கும்போதே அய்யர் தன் மாணவர்களுடன் பாபநாசம் அருவியில் குளிக்கச்சென்று வெள்ளத்தில் சிக்கிய மகளைக் காப்பாற்றுவதற்காக முயன்று மரணம் அடைந்தார். பிரச்சினை அங்கே முடிந்தாலும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் சம்பந்தமான விஷயத்தில் மீண்டும் பிராமணர் -பிராமணரல்லாதார் பேதம் மேலோங்கி, காங்கிரஸில் இருந்து ஈவேரா வெளியேறினார். இந்தக் காலகட்டத்தில்தான் சிலமாதங்கள் வைக்கம் சென்று அந்தப் போரில் பங்குபெற்றார்.

இதையொட்டி வ.வே.சு அய்யர் ஒரு இந்துசனாதனி என்றும் சாதியவாதி என்றும் தொடர்ந்து வரலாறு எழுதப்பட்டு வந்தது. அதை மறுத்து அவரது உண்மையான ஆளுமையை முன்வைக்கும் எழுத்துக்கள் எழுதப்படவில்லை. பிராமண சனாதனிகளும் அவரைத் தங்களவர் என்று எழுதத்தலைப்பட்டார்கள். சேர்மாதேவி ஆசிரமத்தில் உண்மையில் என்ன நிகழ்ந்தது என்பதை அறிந்தவர்கள் மிகமிகக் குறைவே. சாதிவெறியர் என ஒற்றைவரி முத்திரையால் அய்யர் வரலாற்றில்ன்ஒதுக்கப்பட்டார்.

இப்போது தலித் சிந்தனையாளர்கள் சுட்டிக்காட்டுவது என்னவென்றால், 1925 வாக்கில் சேர்மாதேவி ஆசிரமத்தில் பிராமணரல்லாத உயர்சாதி மாணவர்களுக்குத் தீட்டு கற்பிக்கப்பட்டது எனக் கொதித்தெழுந்த திராவிட இயக்க அரசியல்வாதிகள் 1960 களில்கூட அதே ஒதுக்கு தலித்

மாணவர்களுக்கு அனேகமாக எல்லாப் பள்ளிகளிலும் இருந்ததை ஒரு பொருட்டாகவே நினைக்கவில்லை. 1990 களில்கூட பல்வேறு ஆலயங்களில், தேர்த்திருவிழாக்களில் தலித்துக்கள் ஒதுக்கப்பட்டது அவர்கள் கண்ணில் படவில்லை.

ஈவேரா,வ.வே.சு.அய்யருக்கு எதிராகப் போராடிய அக்காலகட்டத்தில் ஈவேராவின் சாதியினர் உட்பட பல பிராமணரல்லாத உயர்சாதியினர் நடத்திவந்த பள்ளிகளில் தலித் மாணவர்கள் சேர்ந்து அமரவோ உணவுண்ணவோ அனுமதிக்கப்படவில்லை. அதைப்பற்றி அன்றைய தலித் தலைவர்கள் தங்கள் இதழ்களில் எழுதியிருக்கிறார்கள். அவை எந்த மனசாட்சிப்பிரச்சினையையும் உருவாக்கவில்லை. இன்றும்கூடப் பல பள்ளிகளில் அந்நிலை நீடிக்கிறது. அதற்கு எதிராகத் தமிழ்ப் பொதுமனநிலை இன்றும் திரண்டிருப்பதாகச் சொல்லமுடியாது. எண்பதுகளுக்குப்பின் உருவாகி வந்த தலித் இயக்கங்களே அந்தப் போராட்டத்தை முன்னெடுக்கின்றன.

ஆனால் இதை ஈவேராவின் சாதிய நோக்கு என சில தலித் எழுத்தாளர்கள் எழுதுவதை என்னால் ஏற்கமுடியவில்லை என்பதைச் சொல்லிவிடுகிறேன். அவர் இந்த மனநிலைகளுக்கு அப்பாற்பட்ட சீர்திருத்தவாதி என்றே நான் நினைக்கிறேன். ஆனால் எந்த அரசியல்தலைவரையும்போல அவரும் தன் ஆதரவு அடித்தளத்தை மீறி எதையும் செய்துவிடமுடியாத நிலையிலேயே இருந்தார். அவரது ஆதரவுத்தளம் என்பது முதன்மையாக பிராமணரல்லாத உயர்சாதியாகவே [முக்கியமாக நாயுடு, நாயக்கர், மற்றும் முதலியார்] அன்று இருந்தது.

இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னர் அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டு பிற்படுத்தப்பட்டோர் அரசியலில் முன்னிடம் பெற ஆரம்பித்த பின்னரே திராவிட இயக்கம் பிற்படுத்தப்பட்ட சாதியினரின் இயக்கமாக உருமாற்றம் கொண்டது. ஈவேராவின் ஆதரவுத்தளமும் மாறியது. இன்று அவர் பிற்படுத்தப்பட்டோரின் அரசியல் முகமாகவே அறியப்படுகிறார்.தமிழகத்தில் ஈவேரா தலித்துக்களுக்காக எந்தப் போராட்டத்தையும் செய்யவில்லை. அந்த வரலாற்று உண்மையை மறைக்கவே அவர் சிலநாட்கள் பங்குபெற்ற வைக்கம்போராட்டம் முழுக்கமுழுக்க அவரால் நடத்தப்பட்டது என்ற வரலாற்றுத் திரிபு செய்யப்பட்டது.

வ.வே.சு.அய்யர் செய்துகொண்ட சமரசம் எவ்வகையிலும் ஏற்புடையதல்ல. ஒரு அமைப்பு அதன் நிலைநிற்புக்காக ஆதாரமான கொள்கைகளில் சமரசம் செய்துகொள்வதென்பது அபத்தம். சேர்மாதேவி ஆசிரமம் மூடும்நிலையில் இருந்தது என்பது உண்மை என்றாலும் அந்நிலையில் அதை மூடியிருக்கவேண்டும் என்றே நான் நினைக்கிறேன்.

வ.வே.சு.அய்யர் தன்னுடைய கல்விப்பணிகளுக்கும் ஆன்மீகத்துக்கும் வாரிசாக நியமித்தது கொங்குகவுண்டரான சுவாமி சித்பவானந்தரைத்தான். சித்பவானந்தர் தமிழகத்தில் ஒரு பெரிய கல்வி இயக்கத்தை உருவாக்கினார். அதற்கு நிதியாதரவு அளித்தவர்கள் ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்த பிராமணரல்லாத செல்வந்தர்களே. அன்றும் இன்றும் எல்லாவகையிலும் சாதி ஒதுக்குதல்களுக்கு அப்பாற்பட்ட அமைப்பாக இருந்து வருகிறது சித்பவானந்தரின் கல்வியமைப்பு. இதையும் நாம் கணக்கில் கொண்டாகவேண்டும்.

சமீபகாலமாக வ.வே.சு.அய்யர் மீதான மொத்தையான அரசியல் குற்றச்சாட்டுகளுக்கு அப்பால்சென்று அவரை அணுகும் நோக்கு உருவாகி வருகிறது. அதற்கு உதாரணம் என்று சொல்லத்தக்க ஒரு நல்ல கட்டுரை செப்டம்பர் 2011 ‘உயிர் எழுத்து’ இதழில் மீனா எழுதி வெளிவந்துள்ள ‘வ.வே.சு- ஒற்றை வரலாறுகளுக்கு இடையே உருப்பெறும் பன்முகம்’ என்ற கட்டுரை.

வ.வே.சு.அய்யர் பற்றிய திராவிட இயக்க திரிபுகளுக்கு மட்டுமல்லாமல் அவரைச் சொந்தம்கொண்டாடும் சனாதன தரப்பு திரிபுகளுக்கும் பதிலாக அமைந்துள்ளது திராவிட இயக்கத்தினரின் தரப்பில் இருந்து வெளிவந்துள்ள இக்கட்டுரை. வ.வே.சு.அய்யர் எப்படி மத,இன நோக்குக்கு அப்பாற்பட்டவராகத் திகழ்ந்தார் என்பதைப் பல்வேறு சான்றுகளுடன் வாதிடுகிறது. தென் தமிழ்நாட்டில் மதநோக்குக்கு அப்பார்பட்டவர் என இஸ்லாமியர் தரப்பால் எண்ணப்பட்டவர் அவர். பெரும்பாலான பூசல்களில் சமரசம்செய்யும் தரப்பாகத் திகழ்ந்தவர். நம்பிக்கையிலும் தனிவாழ்க்கையிலும் சாதிபேத நோக்கு இல்லாதவராக வாழ்ந்தவர்.

வன்முறைப்பாதையில் நம்பிக்கை கொண்டிருந்து,அந்தப் போராட்டங்களிலும் பங்கெடுத்தவரான வ.வே.சு அய்யர் காந்தி இந்தியாவுக்கு வந்து காங்கிரஸின் தலைவர்களில் ஒருவராக ஆன ஆரம்பகாலத்தில் காந்தியை நேரில் சந்திக்கிறார். அந்த சாதாரண

சந்திப்பில் காந்தியின் தோற்றத்தாலேயே மனமாற்றம் கொண்டு உறுதியான அகிம்சைவாதியாக ஆனார்.

சேர்மாதேவி ஆசிரம விஷயத்தை பிராமணரல்லாத ஒருவரின் கோணத்தில் நின்றுதான் ஆசிரியர் விமர்சிக்கிறர். வ.வே.சு.அய்யர் எடுத்த நிலைப்பாடு தவறானது என்றாலும் அது அவர் அந்த மாணவர்களின் பெற்றோருக்கு அளித்த தனிப்பட்ட உறுதிமொழி சார்ந்தது என்றும் , பெரும் எதிர்ப்பு எழுந்தபோதும் அவர் அந்த மாணவர்களை நீக்கமுடியாது என்ற முடிவில் நீடிக்க அதுவே காரணம் என்றும் மீனா குறிப்பிடுகிறார். ஆனால் வ.வே.சு.அய்யர் 'குருகுலத்தில் இனி எந்த ஒரு மாணவருக்கும் தனிப்பந்திமுறையை அனுமதிக்கமுடியாது' என்று அறிவித்து அந்த அறிவிப்பை 'தி இந்து' நாளிதழில் வெளியிட்டார் என்கிறார்.

கட்டுரையாசிரியர் 'காலாகாலமான பார்ப்பனிய ஒதுக்குதலுக்கு எதிரான சீற்றத்தில் வ.வே.சு.அய்யர் பலியானது சோகமானது' என்கிறார். ' இது பார்ப்பனரல்லாதாரிடம் பெருங்கொந்தளிப்பை ஏற்படுத்தியது புரிந்துகொள்ளக்கூடியதுதான். ஆனால் இந்த முறையை வ.வே.சுவே புகுத்தியதைப்போன்ற ஒரு கருத்து இங்கே கட்டமைக்கப்பட்டதில் தட்டையான வரலாறு எழுதும் முறையும் வறட்டுத்தனமான அரசியல் அணுகுமுறையும் பெரும்பங்கு வகித்துள்ளது'என்கிறார் ஆசிரியர்

வ.வே.சு அய்யரின் மறைவை ஒட்டி வெளியிடப்பட்ட ஓர் இரங்கல் கட்டுரையில் இருந்து ஒரு நீண்ட பகுதியை மீனா மேற்கோள் காட்டுகிறார். அப்போது அவரது ஆசிரமத்துக்கு எதிரான பிரச்சாரம் உச்சநிலையில் இருந்தது. 'சாதி மத பேதம் கடந்த பெரியார் ஆவர் நம் ஐயர். மக்கள் யாவரும் நிகரெனும் கொள்கையுடைவரவர். சமூக வாழ்க்கையை குலைத்து பெருங்கேடு விளைவித்து வரும் கொடிய வழக்கங்களை அறவே ஒழிக்கவேண்டும் என்ற சீரிய எண்ணம் உடையவர். ...இதுகாலை நடந்துவரும் குருகுலப்போர் இவரது சமூகக் கொள்கைகளின் மேல் மக்களுக்குள் ஒருவித ஐயத்தை உருவாக்கி விட்டதென்றாலும் அவ்வையப்பாட்டுக்குச் சிறிதும் ஆதாரமில்லை. உடனுண்ணலையும் வேறு சாதியார் இல்லங்களில் உணவெடுத்தலையும் இவர் கைக்கொண்டிருந்தார் என உண்மையை யாமறிவோம்'

இந்த இரங்கல் கட்டுரையை எழுதியவர் ஈ.வே.ரா அவர்கள்தான். 'பிரச்சினைகளைப் பன்முகப் பரிமாணங்களுடன் பார்க்கும் பண்பும்

விமர்சனங்களுக்காகப் பங்களிப்புகளைப் புறக்கணித்துவிடாத நடுநிலைமையும் பெரியாரிடம் இருந்தது. இத்தகைய பண்புநலன்கள் ஒரு சிறிதும் இன்றி காஞ்சி சங்கராச்சாரியாருடன் வ.வே.சுவை ஒப்பிட்டுப்பார்த்தவர்கள்,தம்மைப் பெரியாரின் வழிவந்தவர்களாக சொல்லிக்கொண்டு பிழைப்பு நடத்தும் அவலத்தை என்னவென்பது?' என்கிறார் கட்டுரையாசிரியர்.

பின்னாளைய திராவிட இயக்க நூல்களில் சற்றும் அடிப்படை இல்லாமல் வ.வே.சு.அய்யரின் ஆசிரமக் கல்விநிலையத்தில் அப்பட்டமான சாதிக்கொடுமைகள் நிகழ்ந்ததாக எழுதப்பட்டுள்ளன.இணையத்தில் இந்த விஷயத்தைப்பற்றி என்ன எழுதப்பட்டுள்ளது என தேடினேன். 'அதிகம் படித்த வ.வே.சு அய்யர் நடத்தி வந்த குருகுலத்தில் வருணாசிரம அடிப்படையில் நடத்தப்பட்டு வந்தது. பார்ப்பன சிறுவர்களுக்கு தனியிடம், தனித்தண்ணீர், தனி உணவு என்றும் பார்ப்பனர் அல்லாத குழந்தைகளுக்கு வேறு இடம், வேறு தண்ணீர், வேறு உணவு என்று வித்தியாசத்தை கடைப்பிடித்து வந்தார். பார்ப்பன சிறுவர்களுக்கு காலை உணவாக உப்புமா போன்றவை சூடாக பரிமாறப்பட்டது. பார்ப்பனர் அல்லாதகுழந்தைகளுக்கு பழைய சேற்றையே கொடுத்து வந்தனர்' என எழுதப்பட்ட கட்டுரையைக் கண்டு உண்மையிலேயே வருத்தமடைந்தேன்.

'புறக்கணிக்கப்பட்டும் இருட்டடிப்பு செய்யப்பட்டும் கிடக்கும் வரலாற்றுப்பக்கங்களில் வெளிச்சமிட்டுக் காட்டுவதும் முன்முடிவுகளைக் கைவிட்டு சனநாயக வாசிப்பை சாத்தியப்படுத்துவதுமே நமக்குரித்தான பணிகள்.' என்று மீனா சொல்லும் வரிகளை மீண்டும் ஆமோதிக்கிறேன். இத்தகைய கட்டுரைகள் இனிமேலாவது அதிகார விளையாட்டுக்காகச் செய்யப்பட்ட அநீதிகளைச் சமன் செய்யட்டும்.

# (1) இடஒதுக்கீட்டின் சிற்பிகள்

ஆசிரியருக்கு,

தமிழகத்தில் பிற்படுத்தப்பட்டவர்க்கு இட ஒதுக்கீடு செய்தது தவிர திராவிட கட்சிகள் வேறெதுவும் செய்யவில்லை என்று நீங்கள் சொன்னது முழுமையானது அல்ல.

இந்த இடத்தில் சில கேள்விகள் வருகின்றன.

இந்தியா முழுதும் இட ஒதுக்கீட்டு எதிர்ப்பலை இருந்த பொழுது தமிழகத்தில் இல்லை. அதற்கு என்ன காரணமாக இருக்கக் கூடும்.

தமிழகத்தில் பிற்படுத்தப்பட்டவருக்கு இட ஒதுக்கீடு தேவை என ஏன் குரல் எழுப்பப்பட்டது? அதன் வரலாற்று நியாயம் என்ன? அந்தக் கால கட்டத்தில் அரசு அதிகாரத்திலும், கல்விக் கூடங்களிலும் எத்தனை சதம் பிற்படுத்தப்பட்டவர் பங்கு பெற்றார்கள்?

உங்களுக்குத் தெரியாத ஒன்றினை நான் சொல்ல முடியாது.

இன்று எல்லா அரசியல் கட்சிகளும் கிட்டத்தட்ட ஜமீன்தார் வடிவம் கொள்ளத்தான் முயல்கின்றன. திராவிடக் கட்சிகள் மட்டும் அல்ல. குடிமை ,மக்கள் ஆட்சி , அரசியலமைப்பு கூட்டு சமூக அமைப்பு மன நிலை போன்றவை வேகமாக நகராமல் முதலாளித்துவ பொருள் உலகில் வெகு வேகமாக நகருவதன் விளைவே இன்றைய நம் நிலமை. அரசியல் கட்சிகள் தனியார் சொத்தாகி விட்டன, அவை சாமான்ய மக்களிடம் இருந்து மெல்ல அந்நியப்பட்டு ஒரு நிறுவன வடிவத்தில் நிற்கின்றன.

நீங்கள் திராவிட இயக்கத்தினை நிராகரிப்பது ஏன் எனக் கட்டுரை எழுதிய பொழுது அதில் பதிலிடு செய்து இருந்த பீகாரில் பணி புரிந்த ஒரு தமிழக அதிகாரி சில கருத்துகளை சொல்லி இருந்தார், அந்தக் கருத்துகள் கவனிக்கத்தக்கது.

நில உடமைப் பண்ணையார்கள் , உயர் அரசதிகாரம் படைத்தவர்கள் இடம் இருந்த அரசதிகாரம். பின்னர் திராவிடக்கட்சிகள் காலத்தில் எளிதில் சாதாரண மனிதர் கையில் மாறியது.(தமிழகத்தில் பிள்ளைகள் படிக்கக் காரணமான பெருந்தலைவரே தன்னை ஒரு அரச குருவாக மாற்ற முயன்ற

காலம்). ஆண்டி நாடரின் புத்தகம் இந்தக் கை மாறலைப் பற்றியதே. இது ஒரு பெரும் நிகழ்வு. இதன் துவக்கப் புள்ளிகள் ஓரளவு லட்சிய வாதிகளும் , ஜனநாயகவாதிகளும்தான், பின்னாளில் இது மாறிப் போனது.

இது ஒற்றைப் படையான அரசியல் நிகழ்வு அல்ல. ஒரு கால கட்டத்தின் மாற்றம்.

நீங்கள் பல இடங்களில் நாரயண குரு வழி சிறந்தது என்று சொல்வீர்கள். தமிழகத்திலும் ஒரு நாராயண குரு வந்திருக்கலாம். இதுவும் ஆன்மீக நம்பிக்கை உள்ள பூமிதான். யாரும் உருவாவதைத் தடுக்க வில்லை. அப்படி ஒருவர் வரவில்லை.

பெரியாரும் , அம்பேத்கரும் வைதீகம் பற்றி எரியும் காலத்தில் சொன்ன வழி முறை ஒன்றே. அதில் இருந்து வெளி நில்லுங்கள் என்பதே அந்த வழி.

பெரியார் வெளியேறி சுயத்தில் நில்லுங்கள் என்றார். அது செயல் முறையில் மிகக் கடினமான ஒரு காரியம். அது போன்ற வெட்ட வெளி இருப்பு சுக துக்கங்கள் நிரம்பிய ஒரு சாமான்ய குடும்ப உறுப்பினருக்கு எளிதல்ல. பெரியார் சொல்லிய வழி ஒரு லட்சியவாத வழி என்றே எண்ணுகின்றேன்.

அம்பேத்கர் வெளியேறி பௌத்தம் நில்லுங்கள் என்றார். பௌத்தமும் ஒரு அவைதீகமே.

பக்திக் கால கட்டத்தில் இந்து மரபினைப் பிடுங்கித் தின்ன ஆரம்பித்தால் வைதீகம் மட்டுமே இந்து மரபாகாது. வைதீகம் இந்து மரபில் வந்த ஒரு பயிர், பௌத்தம் போல,ஆசிவகம் போல. அது தன்னை முழு நிலமாக மாற்றி நிற்பதே பல நேரம் காட்சிப் பிழை தருகின்றது.

இந்திய மரபில் வந்த குறள் போன்ற நூல்கள் வழி அறிவு நகர்ந்து பக்தி யுகம் வராமல் இருந்திருந்தால் மேம்பட்ட குடிமைச் சமுதாயம் உள்ளிருந்தே வந்திருக்க வாய்ப்பு உண்டு.

நீங்கள் சொன்ன சாதிய அடுக்கின் கீழ் இருந்து மேல் வந்த குப்தனும் ,மராட்டிய மன்னனும் , விஜய நகர அரசும் வைதீக அங்கீகாரத்தில் தான் துவங்குகின்றன.
அந்த அங்கீகாரம் இல்லை என்றால் அவை இல்லை. எனவே அடுக்கின் மேல் கீழ் விசையை அடுக்கின் வெளியே நிற்கும் ஒரு சக்தி கட்டுப்படுத்துவதை இதில் நாம் காணலாம்.

போகன் எழுதிய ஒரு சிறு கட்டுரையை அல்லது புனைவை உங்கள் பார்வைக்கு இணைத்துள்ளேன். மிகச் சிறப்பாக இருந்தது.

http://ezhuththuppizhai.blogspot.com/2012/10/blog-post.html

நன்றி
நிர்மல்

அன்புள்ள நிர்மல்,

நான் சொல்ல நினைப்பதைச் சொல்லிவிட்டேன் என நினைக்கிறேன். இட ஒதுக்கீடு என்பது இந்தியச் சமூக வெளியில் பிரிட்டிஷாரின் சலுகையை எதிர்பார்த்து நிற்கும் ஆதரவுச்சமூகங்களை உருவாக்கும் பொருட்டு பிரிட்டிஷாரால் அளிக்கப்பட்டது. தேவையானவர்களுக்கு அல்ல, தங்களுக்குச் சாதகமானவர்களுக்கே இட ஒதுக்கீடு என்பது அவர்களின் கொள்கை.

அதை இந்திய சமூகத்தில் சமூகப்-பொருளியல் ரீதியாக ஒடுக்கப்பட்ட மக்களுக்கான ஒரு சமூகப்பாதுகாப்பாக ஆக்கப் போராடியவர் அம்பேத்கர். இந்தியச் சமூகம் தன் மக்களில் ஒரு பகுதியினருக்கு தானே அளிக்கும் சலுகை என உருவாக்கியவர், அதை ஒடுக்கும்சாதியினர் உள்ளிட்ட இந்திய சமூகமனம் ஏற்கும்படி செய்தவர் காந்தி. ஆகவே அவர்கள் முன்னோடிகள்.

அப்படி ஒரு கொள்கையும் அதற்கான மனநிலையும் உருவான பின் ஒவ்வொரு சாதிக்குழுவும் சலுகைகளுக்காக அரசியல்ரீதியாகப் போராடியது, பலர் அதை அடைந்தனர். அப்படிப் போராடிய அனைவரும் இட ஒதுக்கீடு என்ற முறையின் பிதாமகர்கள் அல்ல. இட ஒதுக்கீடுக்காக அவர்களுக்கு நன்றி சொல்வதென்பது குறுகிய சாதி நோக்கு மட்டுமே

வெள்ளைய ஆட்சியில் இஸ்லாமியருக்கு இட ஒதுக்கீடு இருந்தது. டாக்டர் அம்பேத்கர் அதை ரத்துசெய்தார். வெள்ளை ஆட்சியில் இட ஒதுக்கீடு வெள்ளையர்களுக்கான ஆதரவுச்சமூகங்களுக்கு அளிக்கப்பட்டது, அந்தச் சலுகை இந்திய அரசால் அளிக்கப்படவேண்டியதில்லை என்பதுதான் அவர் சொன்ன காரணம். அரசியல்சட்ட நிர்ணய சபையில் போக்கர் பகதூருக்கு அம்பேத்கார் அளித்த பதில்களில் இதைக் காணலாம்

நாளை இங்கே அரசியல் நிர்ப்பந்தம் மூலம் இஸ்லாமியருக்கு இட ஒதுக்கீடு வரலாம். உடனே இஸ்லாமியர் அம்பேத்கரை விட்டுவிட்டு போக்கர்

பகதூரைப்போல இஸ்லாமியருக்கான இட ஒதுக்கீட்டுக்காகப் பேசியவர்களை மட்டும் ‘இட ஒதுக்கீட்டின் சிற்பிகள்’ என்று சொல்லி வணங்கி , அவர்களை முன்னிறுத்தித் தங்கள் வரலாற்றை எழுத ஆரம்பித்தால் அது பெரும் வரலாற்றுப்பிழை. நான் சுட்ட விரும்புவது அதை மட்டுமே.

# (2) இடஒதுக்கீடு- ஒருகேள்வி

அன்பிற்குரிய ஜெயமோகன் சர்,

வணக்கம். நான் ஒரு பிராமண குடும்பத்தில் பிறந்தவன். கேரளா மாநிலம் கோழிக்கோடு தான் என் சொந்த ஊர். தாயார் கண்ணூர் மாவட்டம் பரசினிக்கடவை சேர்ந்தவர். தந்தையின் வேலை நிமித்தமாக ஈரோட்டில் வளர்ந்ததால் சொந்த ஊரும் அங்கே என் வீட்டை சுற்றி உள்ள உறவின பிராமணர்களுமாயும் எனக்கு பரிச்சயம் குறைவு. அதனாலேயே வலதுவாத சிந்தனையோடு அங்குள்ள என் உறவினர்களுக்கும் என் தந்தைக்கும் இருக்கும் உடன்பாடு எனக்கு இல்லை. என் தாய் கம்யூனிசம் பேசுவார். அதுவும் காரணமாக இருக்கலாம்.

நான் வளர்ந்த சூழலில் பெரியாரை வாசிக்க நேர்ந்தது என்னை சில சமயம் குற்ற உணர்ச்சிக்கு ஆளாக்கியுள்ளது. இட ஒதுக்கீட்டை என் தந்தை எதிர்த்து வந்தபோது அவருடன் கடுமையாக வாதிட்டிருக்கிறேன். அண்மையில் சபரிமலையில் பெண்கள் நுழைவதை என் தந்தை ஏற்று கொள்ளாததும் அது போன்ற ஒரு வாதத்திற்கு வழி செய்தது. அந்த வாதம் எப்பொழுத்தும்போல இட ஒதுக்கீட்டில் சென்று நின்றது. ஆனால் இம்முறை அவர் ஏன் இட ஒதுக்கீட்டை எதிர்க்கிறார் என்று எனக்கு புரிய வந்தது :

அப்பா, அவரின் சிறுவயதிலேயே(11) தந்தையை இழந்து விட்டார். தாயும் 3 சகோதரிகளும் முழு பட்டினி. உண்ண அரிசி இருக்காது. இரவில் யாருக்கும் தெரியாமல் அவர் வீட்டு தென்னை நாளிகேரத்தின் தோலை உரித்து சின்ன கயிறு போன்று ஏதோ செய்து கொண்டு கொடுத்தால் இரண்டு பைசா கிடைக்குமாம். அந்த காசிற்கு டீத்தூள் வாங்கி இனிப்பின்றி அனைவரும் அருந்துவார்கள். அதுவே அவர்களுக்கு அன்றைய நேர உணவு. எங்கிருந்தேனும் கஞ்சி சோறு கிடைத்தால் அக்காக்கள் நீரை குடித்து இவருக்கு அரிசியை வைப்பார்கள். படிக்க வைக்க ஆளில்லை. 10ம் வகுப்புக்கு மேல் கோவில்களில் வேலைக்கு நின்று பட்டினியை போக்கி

கொண்டனர். அன்று அவருடன் படித்த ஒருவர் எல்லா சலுகைகளும் பெற்று உணவும் தேவைக்கு செல்வமுமாய் இருந்தது இவர் மனதில் ஆழமாய் பதிந்தது. சிறுவயதில் கயிறு பிரித்து கொடுத்து காசு வாங்கிய இடமும் கீழ்ப்படிநிலைச் ஜாதி என்பது குறிப்பிட தக்கது. இதெல்லாம் அவருக்கு இட ஒதுக்கீட்டின் மேல் ஒரு ஏற்பின்மை வர காரணமாக இருக்க கூடும் என்று எண்ணுகிறேன்.

ஆனால் என் கேள்வி, இது போன்ற நலிந்த ஒரு சாரார் எல்லா சமூகத்திலும் இருக்க கூடும். இத்தகைய ஒரு சமூக சூழலில் இட ஒதுக்கீட்டின் உண்மையான நோக்கம் என்ன? இது போன்ற ஜாதியால் மட்டும் உயர்ந்து, அதுவே சாபமாகி போன சாரார் பற்றிய பதிவு/புனைவு ஏதேனும் தமிழ்/மலையாள இலக்கியத்தில் உண்டா?
இது போன்றவர்களின் மனநிலையை நீங்கள் எப்படி பார்க்கிறீர்கள்?

பி.கு : என் அரசியல் வல/இடது பேதமில்லாது போனதும் என் குடும்ப சூழலுக்கும் சமூகத்தில் என் ஜாதியினரை பொத்தாம் பொதுவாக எதிர்கொள்ளும் முறைக்கும் இடையில் உள்ள முரண் காரணமே.

நன்றி.

ஸ்ரீநிதி.பி

அன்புள்ள ஸ்ரீநிதி,

உங்கள் கடிதத்தைப்போன்று பல கடிதங்களுக்கு நான் விரிவான பதில்களை அளித்திருக்கிறேன். இருந்தும் மீண்டும் எழுதவேண்டியிருக்கிறது.

உங்கள் தந்தை தன் சொந்த அனுபவத்தைக்கொண்டு ஓர் அதீதநிலைபாட்டுக்கு உணர்ச்சிகரமாகச் சென்றடைவதைப் புரிந்துகொள்ள முடிகிறது. அதுவே சாதாரண மக்களின் இயல்பு. ஆனால் சிந்திப்பவர்கள் பிறர்மேல்கொள்ளும் பரிவினூடாகவே உலகை, வாழ்க்கையைப் புரிந்துகொள்லவேண்டும். இலக்கியம் அதற்காகவே.

உங்கள் தந்தையின் இளமைக்காலம் என்றால் ஐம்பது அறுபதுகளாக இருக்கும். அது இந்தியாவில் அனைத்துச் சாதியினரிடமும் மிகமிகக் கடுமையான வறுமை இருந்த காலகட்டம். உலகப்போருக்குப்பின் உலகப்பொருளியல் வீழ்ச்சி அடைந்தது. பலவகையான கைத்தொழில்கள் நவீனமயத்தால் இல்லாமலாயின. கிராமியப்பொருளியல் அமைப்பு சிதறுண்டது. ஆகவே வறுமை பரவியது. பிகாரில் அதற்கு இருபதாண்டுகளுக்கு முன்புவரை பல்லாயிரக்கணக்கானவர்கள் பட்டினியில் இறந்தனர். சுதந்திர இந்தியாவில் கஞ்சித்தொட்டிகள் திறந்தும், கடுமையான ரேஷன் முறைகள் வழியாகவும் பட்டினிச்சாவு தவிர்க்கப்பட்டது. ஆனால் எங்கும் பட்டினி ஓங்கியிருந்தது

என் இளமையிலேயே கடுமையான வறுமையைக் கண்டிருக்கிறேன். நாட்கணக்கில் காட்டுக்கிழங்குகளையும் வாழைத்தண்டையும் முருங்கைக்கீரையையும் உண்பார்கள். பலாக்காய், பலாக்கொட்டை முதன்மை உணவாகவே இருக்கும். மாங்கொட்டையை நாட்கணக்கில் நீரில் ஊறப்போட்டு துவர்ப்பை அகற்றி களிகிண்டி சாப்பிடுவார்கள்.

நான் நிலவுடைமைச் சாதியைச் சேர்ந்தவன். கேரளத்தின் ஆதிக்கசாதி. ஆனால் நாயர்களிலேயே மிகக்கடுமையான பட்டினியில் உழன்ற பல குடும்பங்களை நான் அறிவேன். அவர்களில் பலர் என் நண்பர்கள். நாட்கணக்கில் உணவில்லாமலிருக்கும் குழந்தைகளைக் கண்டிருக்கிறேன். இரவில் காட்டுக்குள் புகுந்து காட்டுபூசணிகளை திருடிவந்து வேகவைத்துச் சாப்பிடுபவர்களை கண்டிருக்கிறேன். ஆனால் ஊரில் கெத்தையும்

விட்டுவிடமாட்டார்கள். அச்சூழலில் உங்கள் தந்தை கடும் வறுமையில் இருந்தது ஒன்றும் வியப்புக்குரியது அல்ல.

எளிமையான கேள்விகள் சிலவற்றை எழுப்பிக்கொள்ளுங்கள். உங்கள் சாதியில் பட்டினிகிடந்தவர்கள் எத்தனை சதவீதம்? அவர்களுக்கு உதவுவதற்கான அமைப்புகள் இருந்தனவா? எவ்வகையிலேனும் அதிலிருந்து வெளியேறும் வழிகள் திறந்திருந்தனவா?

அப்போது உங்களுக்கு கிடைக்கும் பதில் இதுவே. அந்தணர்களிலோ என் சாதியினரிலோ பட்டினி கிடந்தவர்களின் விகிதம் மிகக்குறைவு. பலவகையான சமூகப்பாதுகாப்பு அமைப்புகள் பல இருந்தன. ஆலயங்கள், சாதியமைப்புகள், பலவகையான அரசு அமைப்புகள். அந்தக் கொடிய வறுமையிலிருந்து வெளியேற கல்வியை துணைகொள்ள வாய்ப்பிருந்தது. உணவகங்கள் வைக்கவோ, உணவகங்களில் வேலைபார்க்கவோ சமூக ஒப்புதல் இருந்தது

இந்நிலையுடன் அன்றிருந்த தலித்துக்கள், அவர்களுக்கு இணையான சாதியினரை ஒப்பிட்டுப்பாருங்கள். அவர்களில் அனேகமாக அனைவருமே பட்டினியில் இருந்தனர். அவர்களுக்கு உதவ எந்தச் சமூக அமைப்பும் இல்லை. குமரிமாவட்டத்தில் கிறித்தவத் திருச்சபைகள் மட்டுமே உதவின. அவர்கள் வேறு தொழில்கள் செய்ய அனுமதி இருக்கவில்லை. பொது இடங்களில் நடமாடவோ கல்விகற்கவோ வாய்ப்பே இல்லை.

அவர்களும் நீங்களும் இருந்த நிலைமையின் வேறுபாடு இது. இதுவே அவர்களுக்கு அளிக்கப்பட்ட இட ஒதுக்கீடு மற்றும் சலுகைகள் எத்தனை இன்றியமையாதவை என்பதைக் காட்டும். அது ஒரு சமூகத்தின் கூட்டுப்பொறுப்பு. அரசின் கடமை. அனைத்துக்கும் அப்பால் ஒன்றுண்டு, அம்மக்களை ஒடுக்கி மானுடவிலங்குகளாக ஆக்கியதில் அவர்களுக்குமேலே இருந்து அவர்களைச் சுரண்டிய எல்லா சாதிக்கும்

பொறுப்பு உண்டு. சாதி மேலே செல்லச்செல்ல அப்பொறுப்பு மேலும் கூடும். அதற்கு பிழைமாற்று செய்தாகவேண்டும். அதுவே அறம்.

அக்கால அந்தணர்களின் வாழ்க்கைக்கதைகளை வாசிக்கையில் அவர்களில் பலர் கடுமையான வறுமையில் உழன்றதை காணமுடிகிறது. ஆனால் அவர்களுக்கு பலவகையான சமூக உதவிகள் அன்று கிடைத்தன. சமூக அமைப்புகளும் செல்வந்தரும் பொதுவாகவே ஏழைமாணவர்களின் கல்விக்கு உதவியிருக்கிறார்கள். உங்கள் தந்தை நினைத்திருந்தால் கண்டிப்பாக படிப்புக்கு உதவிதேடி படித்து முன்னேறியிருக்கலாம். ஈரோட்டிலேயே கடும் வறுமையில் ஊர்ச்சோறு என நாளுக்கு ஒரு வீட்டில் சாப்பிட்டு படித்து பெரிய நிலைக்குச் சென்ற எத்தனைபேர் உள்ளனர் என்று ஆராய்ந்து பாருங்கள்.

உங்கள் தந்தையைப்போல சமையற்வேலைக்குச் சென்ற பல்லாயிரம்பேர் இங்கே உண்டு. அவர்களில் தேர்ந்த சமையற்காரர்களாக ஆனவர்கள், உணவகம் நடத்தி செல்வந்தர்களானவர்கள் பலநூறுபேர். அவர்களைப்போல் உங்கள் தந்தை ஏன் ஆகவில்லை? அப்படியென்றால் அவருடைய தோல்விக்கு அவருடைய தகுதியின்மையும் காரணம் அல்லவா?

ஏறத்தாழ உங்கள் தந்தையின் அதேகாலகட்டத்தைச் சேர்ந்தவர் தேனி சீருடையான். அவருடைய சுயசரிதை ‘**நிறங்களின் உலகம்**’ஐ வாசியுங்கள். அந்த உச்சகட்ட வறுமை, விழிபறிபோதல், அனைத்திலிருந்தும் மீண்டு அவர் பழக்கடைவைத்தல், எழுத்தாளராக எழுந்து வருதல் ஆகியவற்றை வாசியுங்கள்.[அகமறியும் ஒளி]

வறுமைகொடிதுதான். ஆனால் தன் தோல்விக்கு அது மட்டுமே காரணம் என்றும், அதற்குச் சமூகம் பொறுப்பேற்கவேண்டும் என்றும் சொல்லிக்கொண்டிருப்பது ஓர் உளச்சிக்கலே ஒழிய வாழ்க்கைநோக்கு அல்ல.

இட ஒதுக்கீடு என்பது வறுமைவாய்ப்பட்டவர்களுக்கு அளிக்கப்படும் சலுகை அல்ல. அதற்கு வேறுவகை உதவித்தொகைகள் பல உண்டு. உங்கள் தந்தை தன் வறுமையை உணர்ந்து தீவிரமாகப் படித்திருந்தால் அவரால் அந்தச் சலுகைகளை பெற்று மேலெழுந்திருக்கமுடியும். பேராசிரியர் ஜேசுதாசன் முழுக்கமுழுக்க தன் படிப்புக்காக அரசு அளித்த உதவித்தொகையால் படித்தவர். இட ஒதுக்கீடு என்பது சமூக அமைப்பால் ஒடுக்கப்பட்டு, படிக்கவும் மேலெழவும் வாய்ப்புகள் மறுக்கப்பட்டவர்களுக்கு உரிய சலுகை. அவ்வாய்ப்பு தலித்துக்களுக்கு மறுக்கப்பட்டது. பிராமணர்களுக்கு மறுக்கப்படவில்லை.

இட ஒதுக்கீடு எவருக்கு அளிக்கப்படுகிறது? தங்கள் வாழ்க்கைச்சூழலால், தங்கள் குடும்பப்பின்னணியால் கல்விக்குரிய உளநிலையே அமையாதவர்கள் கல்விக்கு உகந்த வாழ்க்கைச் சூழலும் குடும்பச்சூழலும் அமைந்தவர்களுடன் போட்டியிட்டால் அவர்களுக்கு வாய்ப்பே கிடைக்காது என்ற நடைமுறை யதார்த்தத்தில் இருந்தே இட ஒதுக்கீடு உருவானது. அவ்வாய்ப்பினூடாகவே அவர்கள் மேலெழவும் முடிந்தது.

இடஒதுக்கீடு என்பது இன்று ஒருபக்கம் அபத்தமாக ஆகிவிட்டது என்பது என் எண்ணம். தலித்துகளுக்கான இட ஒதுக்கீடு அதிகரிக்கப்படவேண்டும் என நினைக்கிறேன். ஆனால் அனைத்துவகைகளிலும் முன்னேறிவிட்ட பிற்பட்ட, மிகவும்பிற்பட்ட சாதிகள் அதிகாரத்தைக் கைப்பற்றி தங்களுக்கு இட ஒதுக்கீடுகள் அளித்துக்கொள்வது இடஒதுக்கீடு பற்றிய காந்தி, அம்பேத்கரின் எண்ணங்களையே தலைகீழாக்குவது. குறைந்தது இட ஒதுக்கீட்டில் பொருளியல் உச்சவரம்பாவது உருவாக்காவிட்டால் அது இன்னொருவகை சுரண்டலாகவே திகழும்

இவ்விஷயங்களை மிகக்குறுகலாக, எனக்கு என் மக்களுக்கு என்று பார்த்து முடிவெடுப்பதே சாதாரணமாக நிகழ்வது. ஆனால் இலக்கியவாசகன் அறவுணர்வால் மட்டுமே தன் சமூகப்புரிதல்களை அடையவேண்டும்.

பிராமணர்களின் துயரை எவரேனும் எழுதியிருக்கிறார்களா என்று கேட்டீர்கள் அல்லவா? கலைஞனுக்குரிய அறவுணர்வுடன் மானுடம்மீதான பரிவுடன் பூமணி எழுதியிருக்கிறார். **நைவேத்யம்** என்னும் அவருடையந் நாவலை வாசியுங்கள். தமிழின் தலித் இலக்கியத்தின் முன்னோடிப் படைப்பாளி என்று கருதப்படுபவர் அவர்

******